# முன்னுரை.

---

பாளையங்கோட்டை சைவசமயாபிவிர்த்தி சபையின் 24-வது ஆண்டு நிறைவுக் கொண்டாட்டத்திற் கூடிய மகா சங்கத்தில் நிகழ்ந்த பிரசங்கங்களைத் தொகுத்து ஈண்டு அச்சிடுகின்றோம். அச்சங்கத்தில் மாட்சிமைதங்கிய ஸ்ரீமான் பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் தலைமை வகித்த பண்பும் அறிஞர் பலரும் உரைபல புடனீந்த முறையும் அச்சங்கத்திற்கு வந்தவரனைவருளமும் விட்டகலாவாயின.

அவையிற்றிற்கோர் அறிகுறியாகவும் தமிழ் மக்கள் பலருக்கும் பயன்படற்பொருட்டும் இப்புத்தகம் வெளியிட விரும்பினார் சபையார்.

அன்னாரது விருப்பம் முற்றுப்பெறுவதற்குப் பொருளின்றி இயலாதன்றே? அதனை யீந்து சபையாரது விருப்பத்தை நிறைவேற்றினர் மாட்சிமை தங்கிய கானாடுகாத்தான் ஸ்ரீமான். சா. ... மு. சி. த. பெத்தாச்சி செட்டியாரவர்கள். அவர்கள் வண்மை ... படப் பாராட்டத்தக்கது.

மிகச்சுருங்கிய காலத்தே அச்சிடக்கொடுத்தும் தமது தொந்தரவையைப் பொருட்படுத்தாது அதை விரைவில் அழகுபெற அச்சிட்டுத் தந்து இச்சபையின் 25-வது ஆண்டுநிறைவுக் கொண்டாட்டத்தினத்தில் வெளிப்படுத்துமாறு உதவினர், ஸ்ரீயான் T. பக்தவத்சலம் பிள்ளையவர்கள், B. A., M. B., P. I.

இச்செல்வரனைவருக்கும் இக்கழகத்தினர் இயன்முறை வந்தனம் செலுத்துகின்றார்கள்.

வ. சோ. சிவஞான தேசிகர்,

காரியதரிசி.

# பொருளடக்கம்.


1. தமிழ் மொழி.
   ஸ்ரீமான் S. சிவஞானம் பிள்ளை அவர்கள்,
   *Head Clerk. Office of the Inspector of Schools, Tanjore.* ... ... ... 1—16

2. தமிழர் சூத்திரரா?
   ஸ்ரீமான் V. P. சுப்பிரமணிய முதலியார் அவர்கள்,
   *Veterinary Deputy Superintendent, Madras* ... ... ... 17—26

3. TAMIL—ITS ONE ASPECT OF HISTORY AND ITS ONE ASPECT OF MODERN REQUIREMENTS
   by the Hon: Mr. S. Rm. M. Ramaswami Chettiyar,
   *Kanadukathan.* ... ... ... 27—34

4. பத்துப்பாட்டின் காலம்.
   ஸ்ரீமான் T. A. இராமலிங்கம் செட்டியார் அவர்கள், B. A., B. L.,
   ஹைகோர்ட்வக்கீல், திருப்பூர். ... ... 35—50

5. VIBHISHANAN BUDDHI
   by Srimath. M. S. Purnalingam Pillai,
   avargal, B. A., L. T., *Principal, Camisis College, Tinnevelly* ... ... ... 51—57

6. அறநிலை
   ஸ்ரீமான் தில்லைநாயக முதலியார் அவர்கள், சிதம்பரம். 58—64

7. தற்காலத்திற்கியைந்த தருமநிலை.
   ஸ்ரீமான் T. பக்தவத்ஸலம் பிள்ளை அவர்கள், B A., M. B. P. I,
   சென்னை ... ... ... 65—78

8. அறம்.
   ஸ்ரீமதி பண்டிதை அசலாம்பிகை அம்மாள் அவர்கள். திருப்பாதிரிப்புலியூர் ... ... ... 79—83

9. முப்பொருளுண்மை
   ஸ்ரீமான் P. N. கொண்டல்வராயசாமி நாயுடுகாரு
   குருவிகுளம், ஜமீன்தார் அவர்கள். 84—88

10. *திருநாவுக்கரசு*
*ஸ்ரீமான்* M.S. *பூரணலிங்கம் பிள்ளை அவர்கள்*, B.A., L.T. 89—95

11. SAIVASIDDHANTAM AND MODERN SCIENCE
by Srimath S. Palvanna Mudaliar avargal,
*Agent, Dharmapuram Mutt*.... ... ... 96—115

12. NATURE OF SOUL
by Sriman J. M. Nallaśwami Pillai Avl., B.A., B.L.,
*District Munsif, Guntur* ... ... 116—136

13. திருவிடமும் சைவமும்
ஸ்ரீமான் T. பொன்னம்பலம் பிள்ளை அவர்கள், M. R. A. S.,
*Retired Excise Commissioner of Travancore,*
*Jaffna.* ... ... ... 137—145

14. மாயை இலக்கணம்
ஸ்ரீமான் கொ. சுந்தரமூர்த்தி பௌராணிகர் அவர்கள்,
திருவிடைமருதூர். .. ... Form A. i—v

15. ஸ்ரீவான்மீகரும் தென்னாடும்
ஸ்ரீமான் மு. இராகவய்யங்கார் அவர்கள்,
செந்தமிழ்ப்பத்திராசிரியர், மதுரை ... vi—xviii


குறிப்பு: மதுரை ஸ்ரீமான் P. நாராயண அய்யர் அவர்கள் B.A., B.L. இயற்றிய மடல்கள் என்னும் வியாசமும் வாசிக்கப்பட்டது. அது தனியே அச்சிடப்பட்டிருப்பதால் இதில் சேர்க்கவில்லை.

திருச்சிற்றம்பலம்.

# " தமிழ் மொழி "

கல்வி செல்வி அறிவு முதலியவற்றால் மேம்பட்ட கனவான்கட்கும் இச்சபைக்கு நாயகமாய் விளங்கும் சபாநாயகர் அவர்கட்கும்,

முகமதியுங் கட்கடுவுங் களவளையு முத்தரிய முகபடாத்துப்
புகர்மதமா மழகளிறுங் கரமலர்க் கற்பகதருவும் பொருவில் பாதத்
திகழுறுபங் கய நிதியுந் தோன்றுபரைப் பாற்கடலிற் சிறந்துதோன்று
முகலருமைங் கரவமுதை யுளங்குளிரப் பூரித்தே உவகை பூப்பாம்.

எடுத்துக்கொண்ட காரியம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டுச் செயற்பாலதெனச் சைவசமயிகளால் தொன்று தொட்டு மேற்கொள்ளப் பட்டுவரும் அரிய வழக்கமாகிய விநாயகக்கடவுள் வழிபாடு, நமது சைவசமயாபிவிர்த்தி சபையின் வருடோற்சவம் முட்டின்றி முடிவெய்தற் பொருட்டும், அடியேன் கூறத்தொடங்கிய பிரசங்கம் செவ்வனே நடை பெறுதற் பொருட்டும் ஈண்டு இவ் வணக்கம் என்னால் கூறப்பட்டது.

எத்தனையோ விநாயக வாழ்த்திருக்க அவற்றை விடுத்து அமுதம்விநாயக வாழ்த்துக்கூறியதற் கியைபு என்னையெனின், சந்திரன், ஆலாலம், சங்கநிதி, வெள்ளையானை, கற்பகம், பதுமநிதி என்பவற்றோடு பாற் கடலிற்றோன்றி, மண்ணவரை யொழித்து விண்ணவர்க்கு மாத்திரம் உடற் குறுதிபயக்கும் அமுதம்போலாது யாவர்க்கும் ஒரு பெற்றித்தாய இனிமையோடு உயிர்க் குறுதி பயந்து நிற்கும் தமிழ், திருமுகமாகிய மதியும், கண்ணாகிய ஆலாலமும், கண்டமாகிய சங்கநிதியும், உத்தரியமாகிய முகபடா மணிந்த தனமாகிய யானையும், கரங்களாகிய கற்பகமும் திருவடிகளாகிய பதுமநிதியும், தோன்றும் பரையாகிய பாற்கடலிற் பிறந்த விநாயகராகிய அமுதத்தோடு ஒருபுடை யொத்தலின் என்க.

இனி யான் எடுத்துக்கொண்ட விஷயத்தைச் சொல்லுவதற்கு முன், யாது காரணம் பற்றி இவ்விடத்தில் வந்துளேன் என்பதைக் கனவான்கட்கு அறிவிப்பது அவசியமாகத் தோன்றுகின்றது. சென்ற கும்ப மாதத்தில் நமது சபையின் காரியதரிசி அவர்கள் என்னை அறியாதவர்களாக இருந்தும், இவ் வருடோற்சவக் கொண்டாட்டத்தில் "தமிழ்மொழி" என்னும் விஷயத்தைப் பற்றி ஒரு பிரசங்கம் செய்யுமாறு விரும்பினர். அவர்கள் அம்மட்டிலே நில்லாமல் மகா-ள-ள-ஸ்ரீ K. சுந்தரராமய்யர் அவர்கள், நல்லசாமிப்பிள்ளை அவர் கள், சவரிராயபிள்ளை அவர்கள் முதலிய கல்விமான்களும் விஷயதானம் செய்வதற்குச் சம்மதித்திருக்கின்றனர் எனவும் வரைந்திருந்தனர், இதை வாசித்த அளவில் என்னுள் நாணமும் ஆசையும் உண்டாயின. மேற்கூறியபோ

றிஞர் முன்னர்ச் சிற்றறிவுடையேனாகிய யானும் யாது சொல்லவல்லேன் என்னும் நாணமும், உண்மையோ, தவறோ யாதேனுமொன்றினைச் சொல்லி டினும் விஷயதானம் புரிந்தாரோடு ஒருங்குவைத் தெண்ணப்படலாகுமே என்னும் பேராசையும் உண்டாயின. உண்டாகவே "இகழ்தர எழுந்த நாணும் இச்சையும் தினம் போராடி, அகழ்தா நாணந்தோற்ற தாசையேவென்றது"; வெல்லவே, சிறியோர் பெரியோரை அடையின் சிறந்துமேம்படுவர் என்னும் துணிவே பற்றுக்கோடாக இவ்விடம் வந்தேன். எவ்வாறெனின்,

"முருகுவிரி மலர்க்கொடிகள் மூங்கில்மிசைப் பதிந்துபோய்
பொருவரிய துறக்கத்துப் புகுந்துவளர் கற்பகமா
மரமுழுதும் படர்ந்துலவும் வளர்மதியின் மேலாய
பெரியவரை யடைந்தொழுகப் பெறிற்றுறக்கம் பெறலரிதோ

என்றமையின் என்க.

"தமிழ்மொழி" என்பதற்குத் தமிழ்ப்பேச்சு என்பது பொருள். பேச்சு என்னும் பெயர் அதைக்குறிக்கும் பாஷைக்குக் காரணக்குறியாய் அப்பா ஷையை உணர்த்திநின்றது. அண்டசம், சுவேதசம், உற்பிசம், சராயுசம், என்னும் நால்வகை யோனி வாய்ப்பட்டு இப் பூமண்டலத்திற் பிறக்கும் ஆன்ம கோடிகளுக்குள் நமக்குக் கிடைத்திருக்கும் மானிடப்பிறவியே மேலாயது என்பது எல்லோர்க்கும் ஒப்பமுடிந்ததே. ஆறறிவுயிராம் மக்கள் தாங்கள் எண் ணிய எண்ணத்தைப் பிறர்க்கு அறிவித்தற்குக் கருவியாயிருப்பது மொழி. அம்மொழிகள் பல ஒருங்கு சேர்ந்ததே பாஷை; அப்பாஷையை ஆதியில் பெற்றார் சிலர்; பிறகு பெற்றார் பலர்; இன்னும் பெறாதார் அளவிறந்தார். தமிழ்மொழி, அநேக நூற்றாண்டுகட்கு முன்னரே தோன்றி, தனித்தியங்கும் ஆற்றலுடையதோர் அரிய பாஷை. அதன் சிறப்பை விரித்துக்கூறுவதற்கு முன், அது எக்காலத்தில் எங்கிருந்து யாவரால் இவ்விந்தியதேயத்தை எய்திற் றென்பதும் எவ்வளவு தூரம் பரவியிருந்ததென்பதும் ஆகிய இவை யிற்றை ஆராய்தல் இன்றியமையாததன்றோ.

பல்லாயிரம் யாண்டுகட்கு முன், இவ்விந்திய நாடு முழுவதும் காடடர்ந்த நிலமாக இருந்ததெனவும், அக்காலத்தில் நகர், ஊர் முதலிய பாகுபாடுகளி ருந்ததில்லை யெனவும், இங்குமங்கும் காட்டு மனிதர்கள் விலங்கேபோல் குகைகளில் வசித்திருந்தார்களெனவும், அவர்கள் காய் கனிகளையும் பன்றி, மான்முதலியவற்றின் இறைச்சிகளையுங் கற்கருவிகளால் அறுத்துண்டுவாழ்ந் தார்களெனவும், அவர்கள் அக்காரணம்பற்றி "கற்காலமனிதர்"எனப்பட்டார் எனவும் சரித்திர ஆராச்சியுடையோர் தெள்ளிதிற் கூறுகின்றனர்.

இவ்வாறு நாள் பல செல்ல, கற்கால மனிதர்கள் சிறிது சிறிதாக நாகரிக மடைந்து, தாங்கள் உறைவதற்கெனச் சிறு குடிசைகளையும் அமைத்துக் கொண்டனர். இரும்பு முதலிய உலோகங்களின் உபயோகத்தையும் நாள டைவில் அறிந்துகொண்டு, தங்கட்கு இன்றியமையாதனவாகிய கோடரி;

ஈட்டி முதலியவைகளையும் உண்டாக்கிக் கொண்டனர். இக்காரணத்தால் கற்காலமனிதர் என்னும் பெயர் நீங்கி "உலோககாலமனிதர்" என்னும் அபிதானம்பெற்றவராயினர். இவர்களே இந்தியாவில் ஆதிகாலத்திருந்தவர்கள். இவர்களையே தமிழர்கள் துரத்தி, அவர்களது நாட்டைக் கைப்பற்றியது. தமிழர்கள் வருவதற்கு முன்னரே நாகர் என்னும் ஒரு வகுப்பினருட் சிலர் இக்காட்டு மனிதர்களைத் துரத்தி இந்தியாவின் சில பாகங்களில் வாழ்ந்திருந்ததாகவும் புலப்படுகின்றது.

தமிழர்கள் ஆதியில் இமயமலைக்கு வடக்கிலுள்ள மத்திய ஆசியாவில் வசித்திருந்தார்கள். அவ்விடத்தில் குளிர் பொறுக்க முடியாதிருந்தமையானும், நிலம் கற்பாங்காயிருந்தமையானும், ஆறுகள் அதிகமாக இல்லாமையானும், தானியம் முதலியவைகளின் விளைவு குறைவாக இருந்தமையானும் தங்கட்கும் தமது கால்நடைகட்கும் உணவைத் தேடி ஊர்தோறும் திரிவாராயினர். இவர்கள் நேபாளத்தைச்சார்ந்துள்ள கணவாய்களின் வழியாய் இந்தியாவை யடைந்து, அதன் நீர் வளம் நிலவளங்களைக் கண்ணுற்று, அளவிறந்த மகிழ்ச்சியடைந்து முதல் முதல் கங்கை நதியின் சமவெளியில் குடியேறினர். கங்கைநதிக்கரையிலுள்ள தமிழுந்தி அல்லது தமுழுக்த (Tumlook) என்னும் துறைமுகப்பட்டணத்தில் நிலைத்து, பிறகு பற்பலநாடுகளிற் குடியேறினமையின் தமிழர்கள் எனப்படுவார் என்பது சிலர் துணிவு. இந்தத் தமிழர்கள்தான் உலோககாலமனிதர்களையும் நாகர்களையும் துரத்தி இந்தியாவைக் கைப்பற்றினதாகக் காண்கின்றது. நாளடைவில் இவர்கள் கூட்டம் கூட்டமாக இந்தியாவிற் குடியேறினார்கள். இவர்களில் முதல்முதல்வந்தோர் மாறர் எனப்படுவார். அவர்களது அரசன் அது காரணம்பற்றியே "மாறன்" என்றும், முதலில் குடியேறினமையின் "பழையன்"என்றும் பேர்புனைந்தான். இதனை "மழையொழுக்கறுப் பிழையாவிளையுட், பழையன் மோகூர்வையகம் விளங்க" என்னும் மதுரைக்காஞ்சியும் வலியுறுத்தும். தமிழ் நாட்டுமூவேந்தருட் பாண்டியராவார் இவரே. மாறர்கட்குப் பின் வந்தோர் திரையர். இவர்கள் அரசன் இருநிலங் கடந்த திருமால் வழித்தோன்றினவன் என்றும், இவ் வழிவந்தோரே காஞ்சிநகரத்தையாண்ட சூரிய வம்சத்தார்களாகிய சோழர்கள் என்றும் புலப்படுகின்றது. இதற்கு

> "இருநிலங்கடந்த திருமறுமார்பன்
> முந்நீர் வண்ணன் புறங்கடையந்நீர்த்
> திரைதருமா வினுரவோனும்பல்
> மலர்தலை யுலகத்து மன்னுயிர்காக்கு
> முரசு முழங்குதானை மூவருள்ளும்
> இலங்குநீர்ப் பரப்பின்வளை மிக்கூறும்
> வலம்புரியன்ன வசைநீங்கு சிறப்பின்
> அல்லதுகடிந்த அறம்புரி செங்கோல்
> வல்வேல் திரையற் படர்குவீராயின்"

என்னும் பெரும்பாணாற்றுப்படையும் சான்று பகரும். திரையர்கட்குப்பின் வந்தோர் வானவர். இவர்கள் முதலில் தென்இந்தியாவிலுள்ள கொல்லிமலை

முதலிய இடங்களில் குடியேறியிருந்ததாகத் தோன்றுகின்றது இமயமலையில் வாழும் வானவரென்னும் கூட்டத்தாரை உறவினராகக் கொண்டவர்கள். "மாநீர் வேலிக்கடம் பெறிந்திமயத்து, வானவர் மருளமலைவிற் பூட்டிய, வானவர் தோன்றல்" என்னும் சிலப்பதிகாரக் கூற்றும் இதனைவலியுறுத்துவான் எழுந்ததுபோலும். இவர்கள்தாம் சேரர் எனப்படுவார் இவர்கட்கு இக்காரணம்பற்றியே வானவரம்பர் என்னும் பேரும் அமைந்ததாகத் தோன்றுகின்றது மாறர், திரையர், வானவர் ஆகிய மூவேந்தரும் முறையே பாண்டியர், சோழர், சேரர் எனப் பெயர்பூண்டு மூன்று தமிழ்நாட்டை ஏற்படுத்தி அரசுபுரிந்த இருநிலமன்னராவார். கிறிஸ்து பிறக்க முந்நூறு வருடங்கட்கு முன் மகத தேசத்தை யாண்ட அசோகசக்கிரவர்த்தி ஏற்படுத்திய ஆக்கினை பத்திரங்களினால் தமிழ்நாட்டு மூவேந்தரும் தன் அரசாட்சிக்கு உட்பட்டவர்கள் அல்லரென்பதும், வேற்றரசர்கட்கு திறை செலுத்தாமல் தங்கள் நாட்டைத் தாங்களே அரசுசெலுத்திய பெருவேந்தர் என்பதும் புலப்படும்.

மேல் எடுத்துக்காட்டியவற்றால் தமிழர்கள் அநேக நூற்றாண்டுகட்கு முன் இவ்விந்தியாவில் குடியேறினரென்பது சரித்திர ஆராய்ச்சிமுறையாற் போதருகின்றது. இதுவேயன்றிச சேரமான் "பெருஞ்சோற்று உதியன் சேரலாதன்" என்னும் சேரநாட்டுத் தமிழரசன் பாரதப்பெரும் போரில் பாண்டவர் துரியோதனாதிய ரென்னும் இருதிறத்தினர் சேனைகட்கும் உணவளித்தானெனவும் விளங்குகின்றது. இதனை,

> "ஓரைவரீ ரைம்பதின் மருடன்றெழுந்த
> போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
> சேரன் பொறையன் மலையன்றிறம் பாடி
> கார்செய் குழலாட வாடோமோ வூசல்
> கடம்பெறிந்தவா பாடியாடோமோ வூசல்"

என்னுஞ் சிலப்பதிகாரச செய்யுளும்,

> "நின்கடற்பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
> வெண்டலைப் புணரிக் குடகடற்குளிக்கும்
> யாணர் வைப்பினன்னாட்டுப் பொருந
> வானவரம்பனை நீயோ பெரும
> வலங்குளைப் புரவியைவரொடு சினைஇ
> நிலத்தலைக்கொண்ட பொலம் பூத்தும்பை
> யீரைம்பதின் மரும்பொரு துகளத் தொழியப்
> பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"

என்னும் புறநானூற்றுக்கவியும் இனிது விளக்கும். இச்செய்யுட்களால் பாரதயுத்தம் நடந்தகாலத்திலேயே இவ்விந்தியாவில் தமிழ் பரவியிருந்ததென்பது ஒருதலையன்றே. இம்மட்டோ! சீராமபிரான் தன் சிற்றன்னையின் பணியைச் சிரமேற்கொண்டு பதினான்குவருடம் வனவாசம் செய்வான் சென்றபோது, பொதியமலையில் வீற்றிருந்த அகத்தியனாரைக் கண்டதாகவும்

அப்போதே இவ்விந்தியநாட்டில் தமிழ் நடைபெற்றதாகவும் கீழ்வரும் இராமாவதாரச்செய்யுள் சான்றுபகரும்.

நின்றவனை வந்த நெடியோ னடிபணிந்தான்
அன்றவனு மன்பொடு தழீஇ யமுதகண்ணு
னன்றுவா வென்று பலநல் லுரை பகர்ந்தா
னென்று முளதென் றமிழி யம்பியிசைகொண்டான்.

**தமிழ்ப்பரப்பு:**—திரணதூமாக்கினி என்னும் இயற்பெயரையுடைய ஒல்காப்பெரும்புகழ்த் தொல்காப்பியனார் இயற்றிய தொல்காப்பியத்திற்குப் பாயிரங்கூறிய பனம்பாரனார், "வடவேங்கடம் தென்குமரியாயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து" எனத் தமிழின் எல்லையை வடக்கின்கண் வேங்கடமலையாகவும் தெற்கின்கண் குமரியாறாகவும் நிறீஇயினார். இப்பாயிரத்தை வாசிப்போர் இவ்வெல்லையைக்கடந்து தமிழ்மொழி பரவிற்றில்லை போலும் என ஆசங்கித்தற்கு இடமுண்டன்றோ. ஆயினும், அதனைச் சிறிது ஈண்டு ஆராய்வாம். தமிழர்கள் தாங்கள் நாடிச்சென்ற இடத்தை நாடு என்றும், நகர்ந்து சென்றடைந்த இடத்தை நகர் என்றும், ஊர்ந்து சென்றடைந்த இடத்தை ஊர் என்றும் கூறுவாராயினர். நாடு, நகர், ஊர் என்னும் இம்மூன்று மொழிகளும் தமிழ்மொழிகள் என்பது எல்லோர்க்கும் ஒப்பமுடிந்ததே. ஆகலின் ஊர் என்னும் பதத்தை இறுதியில் கொண்ட மொழிகளைப் பெயராகவுடைய இடங்களில் தமிழ் பரவியிருக்கவேண்டுமென நினைப்பதற்கு இடமுண்டன்றே. ஊர் என்னும் மொழியை இறுதியில் கொண்ட சில இடங்களை விளம்புவாம். கண்ணனூர், மங்களூர், நெல்லூர், குண்டூர், இந்தூர், சிங்கப்பூர் முதலிய பலவேயாம். இவ்வூர்களில் சில தமிழ்வழங்கா நாட்டின்கண் உள்ளனவாக ஏற்படுகின்றனவாகலின் மேற்கூறிய முடிவு எவ்வாறு பொருந்தும் என்னும் ஆசங்கை நிகழுமன்றே. அவற்றுள் நெல்லூர் என்னும் பதத்தை ஆராய்வாம். நெல்லூர் என்பது நெல், ஊர் என்னும் இரண்டு தமிழ்மொழிகளானாய ஓர் தொடர்மொழி. நெல் என்பது, "நெல்லுப்புல்லு மாந்தினை சாமை இறுங்கு தோரை இராகியோடெட்டு" என்னும் தமிழர் முதற் கூலப் பொருளில் முதன்மையாய் விளங்குவது. தமிழர் முதற் கூலப்பொருளையே பெயரா யுடைய எல்லைக்கண் தமிழ்மொழி வழங்கிற்று என்பதைச் சொல்லவும் வேண்டுமோ. நெல்லூருக்கு வடக்கே குண்டூர் என்னும் ஓர் ஊர் உண்டு. அது குன்றூர் என்பதன் மரூஉவேயாம். குன்றூர் என்பதற்கு மலைநாடு என்பது பொருள். மேற்கூறிய இரண்டு ஊர்களிலும் தற்காலம் வழங்கும் மொழி தெலுங்கு மொழியேயெனினும், முன்னொரு காலத்தில் தமிழ் வழங்கியிருந்ததென்றே புலப்படுகின்றது. இவ்வாறே மங்களூர், கண்ணனூர் என்னும் இரண்டிடங்களிலும் கன்னடமும் மலையாளமும் இக்காலத்தில் வழங்குமேயெனினும் அவையும் தமிழ்நாடென்றே துணிந்து கூறலாம். தமிழ்ப்பெருங்காப்பியங்கள் ஐந்தனுள் சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இருபெருங்காப்பியங்களையும் இயற்றினோர் முறையே சேரநாட்டரசன் பிற்றோன்றலாம்

இளங்கோவடிகளும், அச்சேரன் ஸம்ஸ்தானத்தைச்சார்ந்த சீத்தலைச்சாத்தனு நும் எனின் மலையாளத்தில் தமிழ்வழங்கியிருந்தது என்பதை வலியுறுத்த வேறு யாது சான்று வேண்டும்? இருபெருநூலும் பிறந்த இடமும்மலையாளத்திலுள்ள கருவூர் என்னும் திருவஞ்சைக்களமாம். இக்காலத்தே மலையாள மொழியில் வழங்கும் தமிழ்மொழிகள் எண்ணிறந்தனவாம். இக்கருத்தே பற்றிப்போலும் தமிழ்த்தெய்வவணக்கம் கூறுவான் போந்த ஆங்கிலத்தமிழ் வித்துவ சிரோமணியாகிய சுந்தரம்பிள்ளையவர்கள்,

> பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
> எல்லையறு பரம்பொருள் முன்னிருந்த படியிருந்ததுபோல்,
> கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமுந் துளுவும்
> உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்று பலவாயிடினும்
> ஆரியம்போல் உலக வழக்கழிந்தொழிந்து சிதையாவுன்
> சீரிளமைத்திறம் வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே,

எனத் துதிப்பாராயினர்

இதுகாறும் கூறியவாற்றால் வடவேங்கடத்திற் கப்பாலும் தமிழ்மொழி வழங்கியிருந்தது என்பது புலப்படுகின்றது. இதுபோலவே சிங்கப்பூர் நாகப்பூர் முதலிய ஒவ்வொருமொழியையும் ஆராயின் தமிழ்மொழியானது இந்தியாவிலும் அதைசசார்ந்த தீவுகளிலும் பரவியிருந்ததாகத் தெரியவருகின்றது. இவ்வாராய்ச்சி "வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து" என்னும்பாயிரச்சூத்திரத்திற்கு மாறுபடுமேயெனின், அற்றன்று. ஆசிரியர் தொல்காப்பியனுர் வடவேங்கடம், தென்குமரியாகிய இவ்வெல்லைக்குள் வழங்கும் தமிழ் மொழிக்கே இலக்கணங் கூறுவான் போந்தனரேயன்றி மற்றைய நாடுகளிலும் சிதைந்து வழங்கும் தமிழ் மொழிக்கன்று எனக்கோடலே அமைவுடைத்து.

சென்ற வாரத்தொடக்கத்தில் தஞ்சைமாநகரத்தில் நடந்தேறியமதுரைத் தமிழ்ச்சங்கத்து வருடக்கொண்டாட்டத்தில் "தன்சரிதம்உணர்த்தும்மொழி" என்னும் தலைப்பின்கீழ் ஊர் என்னும் விஷயத்தைப்பற்றி எனது நண்பரும் மதுரைச்சங்கத்துத் தமிழ்ப்புலவர்களில்ஒருவருமாகிய மகா-ா-ா-ஸ்ரீ ஐ. சாமிநாத முதலியார் (Supervisor of Elementary Schools, Tanjore) அழகு பெற விதந்துகூறினர். அவ்விஷயம் முற்றும் செந்தமிழ்ப்பத்திரிகை வாயிலாய் வெளியேறுமாகலின் அறிஞர் அதனைக்காண்பாராக

தமிழின் பாகுபாடு:—தமிழ்மொழி, இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்னும் மூன்று பிரிவினையுடையதாய், தொன்றுதொட்டு வழங்கி வரும் பான்மையுடையது. இயற்றமிழென்றது தமிழர் யாவர்மாட்டும், பொதுமையின் உலகவழக்கு, செய்யுள்வழக்கு என்னும் இருவகைவழக்கினும் இயங்குகின்ற வசனமும் செய்யுளுமாகும் நூல்களின்தொகுதியாம். இதனுள் இலக்கியங்களும் இலக்கணங்களும் அடங்கும். சஙகச்செய்யுள்களும், உரைகளும், புராணம் முதலிய ஏனை நூல்களும் இயற்றமிழேயாம். இயற்றமிழ், ஏனை இசைத்தமிழ், நாடகத்தமிழ் ஆகிய இரண்டற்கும் முன்னர்த் தோன்

றிணமைபற்றி முதற்கண்வைக்கப்பட்டதாகும். ஏனைய இரண்டும் இயற்ற மிழின்றி இயங்கும் வன்மையுடையனவல்ல.

இசைத்தமிழென்பது பண்ணெடுகலந்து, தாளத்துடன் கூடி, இயங்கும் தமிழ்ப்பாட்டுக்களானியன்ற இலக்கியங்களும் அவற்றின் இலக்கணங்களுமாகும் நூலின் தொகுதிகளாம். குழல், முழவு, யாழ் முதலிய இசைக் கருவிகளின் பெயர்களும், செவ்வழி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி முதலிய பண்ணின்பெயர்களும் இசைத்தமிழ் தமிழர்கட்கு அநாதியாய் உண்டென்பதை உணர்த்தும்.

நாடகத்தமிழென்பது நூலாராய்தற்கு அவகாசமில்லாத பணியாளர்களும், படிக்கத்தெரியாதவர்களும் உற்றுநோக்கி நல்லுணர்வை யடையுமாறு வகுக்கப்பட்டது. இயற்றமிழும் இசைத்தமிழும் சேர்ந்தவழியே நாடகத் தமிழ் பிறந்ததெனினும் முன்னைய இரண்டும் கேள்வியின்பம் மட்டுமே பயப்பனவாய் நின்றன. நாடகத்தமிழோ கேள்வியின்பத்தோடு காட்சியின்பமும் பயக்கின்றது. நாடகம் என்னும் சொல் வடமொழியாதலை நோக்கி தமிழர்கள் ஆரியரோடு கலந்தபின்னரே நாடகத்தமிழ் உண்டாயிருத்தல்வேண்டுமென்பது சிலர் கொள்கை. அக்கொள்கை தவறுடைத்தென்பதை பண்டைக்காலந் தொட்டுத் தமிழர்க்குரிய கூத்தின்விகற்பங்களை விரித்துக்கூறும் சிலப்பதிகார அரங்கேற்று காதையே வலியுறுத்தும்.

**தமிழ் மொழியின் நெடுங்கணக்கு:**—தமிழ் மொழியின் நெடுங்கணக்கு மிகவும் அழகுபெற அமைந்துள்ளது. ஏனைய பாஷையிலுள்ள எழுத்துக்களைப்போலல்லாமல் வலம்படச் சுழித்தெழுதும் மாண்பு இத்தமிழ்மொழியொன்றனுக்கே யுரிமையானது ஒரே எழுத்திற்குப் பல ஒலியில்லை. ஓரொலிக்குப் பலவெழுத்து வேண்டா கூட்டெழுத்துக்கள் கிடையா. "மயங்காமரபின் எழுத்துமுறைகாட்டி" என்னும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரச்சூத்திரமும் இதனை வலியுறுத்தும். எல்லா எழுத்துக்களும்மொழிக்கு முதலில்வாரா. மொழிக்கு இறுதியில் எல்லா வெழுத்துக்களும் வாரா எல்லா எழுத்துக்களும் மொழிக்கிடையில் மயங்கா

**தமிழ் இலக்கம்:**—தமிழ்ப்பாஷையே அனேக பாஷைகட்கு இலக்கங் கொடுத்ததென்பர் பலர். தமிழ் நாடும் அதன் மொழியும் அனேகம் நூற்றூண்டுகட்கு முன்னரே சிறப்புவாய்ந்திருந்தமையின், எந்நாட்டினரும் தன் நாட்டிற்குவேண்டும் பொருள்களை எல்லாம் தென்னாட்டினின்றுங் கொள்வாராயினர். வாணிகத்தின்பொருட்டும், இராஜசேவையின் பொருட்டும் யவனர் (Greeks) முதலிய தூரதேசவாசிகள் வந்து தென்னாட்டிற் குடிகொண்டாரென்பது,

> "பயனறவறியா யவன ரிருக்கையும்
> கலந்தரு திருவிற்புலம் பெயர்மாக்கள்
> கலந்திருந் துறைபும் இலங்கு நீர்வைப்பும்"

என்னுஞ் சிலப்பதிகாரக்கூற்றூற் பெறுதும். வாணிகம் காரணமாகவந்த யவனர், தாம் கொள்ளவேண்டிய பண்டங்களை எல்லாம் நாளடைவிற் சேர்த்துப்

பொதிசெய்து அப்பொதிகளின்மீது தம் பெயரையும் எண்ணையும் இடுவித்துப், பண்டசாலைகளிலே அடுக்கிட்டுப், பின்னர் மரக்கலங்கள் மீளும்போது அவற்றிடை யேற்றிவிடுவது வழக்கம். இவ்வுண்மையை,

> " வம்பமாக் கடம்பெயர் பொறித்த
> கண்ணெ ழுத்துப்படுத்த எண்ணுப்பலபொதி
> கடைமுக வாயிலிற் கருள்காழ்க்காவலும்"

என்னும் சிலப்பதிகாரம் வலியுறுத்தும். தமிழர் வாணிகம் முதலிய பல முயற்சித்துறைகளில் வல்லுநராய், அவற்றாற் பொருளீட்டி வாழ்பவராதலின், அவர்க்கு எண்ணுக்குறி, அளவுக்குறி, நிறைக்குறி முதலியன இன்றியமையாதனவாயின. நமது கைவிரல்களே எண்ணுக் குறிக்கு மூலாதாரம். ஒன்றன் குறி ஒருவிரல், இரண்டன் குறி இருவிரல், மூன்றன் குறி மூவிரல், ஏனையவும் இவ்வாறேயாம். வாணிபஞ்செய்வாற்கு முக்கியமாகிய இலக்கக்குறி முதலிய வற்றின் பெயர்களை யவனரும் பிறரும் தத்தம் தேயங்கட்குக்கொண்டு சென்றனர். இலக்கக்குறிகளின் பெயர்களெல்லாம் தமிழ் மொழியே. இதுவே தமிழர்கள் அநாதியாய் இலக்கக்குறியை யுடையராயிருந்தனர் என்பதற்குப் போதியசான்றாம். தமிழ் மொழியில் கீழ்வாய் இலக்கமும் உண்டு. அவற்றின் பெயர்களாய காணி, கால், அரை, முக்கால் என்னும் மொழிகளெல்லாம் தமிழ்மொழியே. இவ் வெண்கள் பண்டைத்தமிழ்ச் செய்யுட்களின் கண்ணும் எடுத்தாளப்பட்டிருப்பதை "எட்டுமிரண்டும் இனிதறிகின்றிலர்" என்னும் திருமந்திரச்செய்யுளடி விளக்கும். தமிழ் இலக்க மொழியின் மரூஉவே தெலுங்கு மொழியின் இலக்கமென்பது சிறிது உய்த்து நோக்குவோர்க்குப் புலப்படாமற்போகாது. ஒன்று என்பதை "ஒகடி" என்றும், இரண்டென்பதை "ரெண்டு" என்றும், மூன்று என்பதை "மூடு" என்றும் வழங்குவதே போதிய சான்றாம்.

**தமிழ் இலக்கணம்:—** தமிழ்ப்பாஷை அநேக காலங்கட்கு முன் இவ்விந்தியநாடு முழுவதும் பரவியிருந்ததெனினும் அதற்கு முதல் முதல் இலக்கணம் வகுத்தார் அகத்தியனாரே. அகத்தியனார்க்கு முன்னரே சில இலக்கண நூல்கள் பரவியிருந்தனவென்றும், அவை யாது காரணம் பற்றியோ இறந்தொழிந்தனவென்றும் சிலர் கூறுவர். அகத்தியனார் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழிற்கும் இலக்கணம் வகுத்தார். அந்நூலின் சிற் சில சூத்திரங்களே நுங்கட்கு காணக்கிடைக்கின்றனவே யன்றி முழுவதும் காண்பரிதாகி விட்டது. அகத்தியனார் முதன் மாணாக்கராகிய திரணதூமாக்கினியென்னும் இயற்பெயரையுடைய தொல்காப்பியனார் இயற்றிய இலக்கணமே நின்று நிலவுகின்றது. அவ்விலக்கண நூல் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்றதிகாரங்களையுடையது எனினும், ஐவகை இலக்கணங்களின் எஞ்சியவாய யாப்பையும் அணியையும் செய்யுளியலிலும் உவமவியலிலும் அகப்படுத்துக் கூறினார். இதற்குப் பின்தோன்றிய இலக்கண நூல்கள் மிகப்பல. அவைகளில் பல, எழுத்தையும் சொல்லையும் கூறுகின்றன; சில பொருளையேகூறின; சில, யாப்பொன்றையே கூறின; சில, அணியொன்றையே விளக்

னை, தமிழிற்கென இலக்கண நூல் வேறில்லை எனவும், அது வடமொழி யிலக்கணத்தைப் பின்பற்றியதெனவும் சிலர் கூறுகிற்பர். அற்றன்று. "தமிழ் மொழிப் புணர்ச்சிக்கட் படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை, அஃறிணை முதலிய சொற் பாகுபாடுகளும், அகம், புறம் என்னும் பொருட் பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணங்களும், இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படா." என்று வடமொழி தென்மொழி ஆகிய இருமொழிக் கடலையும் நிலை கண்டுணர்ந்த ஆசிரியர் சிவஞானயோகிகளின் அருள்வாக்கே தமிழிலக் கணத்தின் பெருமையை நன்கு விளக்கும். தமிழ் இலக்கணம் கூறுவான் போந்த நன்னூலாசிரியராம் பவணந்தி முனிவரும் பதவியலிலும், மெய்யீற் றுப்புணரியலிலும் வடசொல்லாக்கமும் வடசொற் சந்தியும் அழகு பெற விதந்தது, ஏனையவெல்லாம் தமிழ்மொழிக்கே யுரியன என்பதை வலியுறுத் தும். பொருளதிகாரத்திற் கூறிய அகப்பொருளும், புறப்பொருளும், அதன் துறைகளும் தமிழிற்குரிய சிறப்பு விஷயங்களாம். இவற்றினின்றும் ஆதியி லிருந்த தமிழர்களது ஒழுக்க நிலை இத்தன்மைத்தென்பது நன்கு புலப்படும்.

**தமிழ் என்பதன் சொற்பொருள்:**—தமிழ் என்னுஞ் சொற்கு யாது பொருள்? திராவிடம் என்னுஞ் சொல் திரமிளம் என்றாய்த் திரமிளம் என்பது தமிழ் எனத்திரிந்தது என்பர் ஒரு சாரார். தன் பெயரே பிறபாஷையின் பெயராக் கொண்டிருக்கும் பாஷை எவ்வாறு தனித்தியங்கும் ஆற்றலுடையது என்னும் ஆசங்கை நிகழுமாகலானும், மேற்கூறிப்போந்தவைகளால் தமிழ் மொழி பிறபாஷைகளின் உதவியின்றித் தனித்தியங்கும் ஆற்றலுடைமை பெறப்படுதலானும், அது பொருளென்பது யாண்டையதென்க. ஒரு சாரார் தமிழ் என்னுஞ்சொல் (இகழ், உமிழ், கமழ் என ழகரப் பேறு பெற்ற சொற் கள்போல) தனிமைப்பொருள்குறிக்கும் தமியென்னும் வினையடியாற்பிறந்து வினைமுதற்பொருள் உணர்த்திய விகுதி குன்றி ழகரம் விரிந்து தனக்கிணை யில்லாமொழி என்னும் பொருள் பயக்கும் என்றுகூறி முடிப்பர். இதுவும் அத்துணைச் சிறப்பாதல் கண்டிலம். தமிழு என்னுஞ்சொல் தமிழென உக ரம் புணர்ந்து கெட்டுநின்றதோர் மொழியாம். இம்மொழி தன் பெய ரானே தனக்குரிய முதலெழுத்துக்கள் இன்னவென்பதைக் குறிப்பான் உய்த் துணரநின்ற அருமை பெரிதும் பாராட்டற்பாலது. என்னை; தகர மகர ழகரங்கள் அகர இகர உகரங்களோடு இயையத் தமிழென்னும் சொற்பிறந் தமையான் மெய் எழுத்துக்கள் மூவகைத்தென்பதும், சிறப்பு நோக்கித் தகரம்முன்னரும், அதற்கினமொத்த மகரம் அதற்குப் பின்னரும், ழகரம் அவ்விரண்டிற்குப் பின்னரும் நிற்றலின் அவை வல்லினம், மெல்லினம், இடையினம் என்னும் மூன்று பிரிவினையுடைய தென்பதூஉம், இம்மூன்று மெய் எழுத்துக்களும் உயிரோடியைந்து நிற்றலின் மெய் தனித்தியங்கும் ஆற்றலுடையனவல்ல என்பதூஉம் பெற்றாம். இனி, உயிரெழுத்துகளில் குற்றெழுத்தின் விகாரமே நெட்டெழுத்தாகலானும் குற்றெழுத்துள்ளும்

அகரக்கூறும் இகரக்கூறும் தம்முளொத்திசைத்து நாமடங்கல்போல் நிற்பது எகாரமும், அகரக்கூறும் உகரக்கூறும் தம்முளொத்திசைத்து அவ்வாறு நிற்பது ஒகாரமும் ஆகலானும் இனமில்லாத ஐகார ஔகாரங்கள் "அம்முனிகரம் யகரமென்றிவை எய்தின் ஐயொத்திசைக்கும் அவ்வோடுவ்வும் வவ்வும் ஔவோரன்ன" என்ப ஆகலானும், அவற்றை ஒழித்து ஒழிந்தனவாகிய தனித்தியங்கும் சிறப்புவாய்ந்த அகர இகர உகரங்களின் பிறப்பிடமுறையே முறையாக அமைந்து கிடக்க, ஏனையவற்றையும் உய்த்துணர நின்றமை காண்க. இத்துணையும் கூறிய வாற்றால் தமிழ் என்னுஞ்சொல் தன் பெயர் கூறுமுகத்தானே தனக்குரிய எழுத்துக்களை உணர்த்தினமை பெரிதும் வியக்கற்பாலது. விரிவஞ்சி விடுத்தாம்.

தமிழ் என்னுஞ்சொல் இனிமை என்னும் பண்புணர்த்தும். அது "மீனுங் கொடியும், விரிதிணையைந்தும் தேனுறைதமிழும் திருவுறைகூடலும் மணத்தலின் மதிக்குல மன்னவனாகியும்" என்னும் கல்லாடத்தினாலும், "தமிழ் தழீஇய சாயலவர் தங்குமலர்த்தாநீர் உமிழ்காகம் ஏந்த உரவோனமர்ந்து பூசி" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளில் தமிழ் தழீஇய சாயலவர் என்பதற்கு நச்சினார்க்கினியர் இனிமை தழுவிய சாயலையுடையவர் என்று உரைத்த பொருளினாலும், "குழல்வண்டு தமிழ்ப்பாட்டிசைக்குந் தாமரையே" என்னும் இராமாவதாரச் செய்யுளினாலும் இனிது விளங்கும். தமிழ் என்னும் தருமவாசகம் தருமிமேல் நின்றது, முருகு என்னும் பண்பு முருகன் என்னும் பண்பிமேல் நின்றவாறுபோல்.

வடமொழிக் கலப்பு:—உலோககால மனிதர்களையும் அவர்களை வென்ற நாகர்களையும் கீழ்ப்படுத்தி, இவ்விந்தியாவைக் கைக்கொண்டவர்கள் தமிழர்களென்பது மேலே கூறிப்போந்தாம். இவர்கள் இவ்வாறிருக்க, வட மேற்கே அநேக காவதங்கட்கு அப்புறமுள்ளதும், ஐரோப்பாக்கண்டத்தி னொரு பகுதியுமாகிய "ஸ்காந்திநேவியம்" என்ற இடத்தினின்றும் "ஆரியர்" என்ற ஒரு சாதியார் புறப்பட்டு நாலாபக்கங்களிலும் சென்று சேர்ந்தனர். அவர்கட்குள் ஒரு பிரிவினர் மத்திய ஆசியாவிலுள்ள துருக்கிஸ்தானம் என்ற இடத்திற்றங்கினர். இவ்விடத்தில் தங்கிய ஆரியர்களே காபூல்வழியாக இந்தியாவில் பிரவேசித்தனர். இவர்கள் பாஷை ஸம்ஸ்கிருதம். ஆரியரும் தமிழரும் ஒரே நாட்டின் கண்ணிருந்து ஒருங்குவாழ வேண்டியது அவசியமாயிருந்தமையால், ஆரியர் தமிழும், தமிழர் ஸம்ஸ்கிருதமும் பயில்வாராயினர். இவ்விருதிறத்தினரும் தம்முள் ஒத்து நடந்தமையின் அவ்விருவர் பாஷைகளும் தமக்குள் கலப்பனவாயின. வடமொழியாளர் தங்களுடைய சாமர்த்தியத்தினால் தமிழரசர்களிடம் அமைச்சர்களெனவும் மேலதிகாரிகளெனவும் அமர்ந்து கொண்டனர். தமிழருட் சாமானிய சனங்கள் அவ்வாரியாது விருப்பத்திற்கேற்ப இணங்கி நடந்தார்கள். இவர்கள் வடமொழிச் சொற்கள் பலவற்றை மேற்கொண்டு வழங்கப்புகுந்தமையின், நாளடைவில் வடமொழிச் சொற்கள் பல தமிழ்ப்பாஷையின்கண் வேரூன்றி விட்டன. தமிழ்மொழியானது வந்த

விருந்தினர்களை அன்புடன் ஏற்று கூடிக்குலவும் பெரியோர்போல் ஆரியத்தோடு உறவு கொண்டுகலந்து இன்றைக்கும் இருவகை வழக்குகளும் அருமல் நிலவுகின்றது. ஆரியம் காலகதியால் பேச்சுவழக்கற்று, அழிந்துபட்டது. பேச்சுவழக்கற்று ஏட்டு வழக்கில் மட்டிலிருக்கும் பாஷையோடு இருவகை வழக்குமுள்ள பாஷை எவ்வாறு கூடி இயங்கும்? இதுவே ஆரியமொழிகள் தமிழ்மொழியில் வழங்குதற்கும், தமிழ்மொழிகள் ஆரியத்தோடு மருவாமைக்கும் காரணமாம்.

**தமிழ்மக்களின் ஏற்றம்:**—பண்டைக்காலத்திருந்த தமிழ்மக்களின் நாகரிக நிலை மிகவும் வியக்கத்தக்கது. ஜனங்களின் அபிவிருத்திக்கும் நாகரிகத்திற்கும் இன்றியமையாததாகிய பலவகைத்தொழிலாளிகளையும் உடையராயிருந்தனர். துறைமுகப்பட்டணங்களில் காணப்படும் கலங்கரை விளக்கமும் (Light House), அவ்விடங்களில் நடைபெறும் ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கட்கு அரச இலச்சினை இடுதலும், சுங்கங்கோடலும் (Customs duty), கால் நடையாய் ஒரு நாட்டினின்று மற்றொரு நாட்டிற்குக்கொண்டு செல்லும் பொதிப்பண்டங்கட்கு ஆயங்கோடலும் (Toll gate), பூர்வகாலத்து வழக்கமே. அதிகாரம் செலுத்து முறையில் தமிழர்கள் கைதேர்ந்தவர்கள் என்பது இக்காலத்தே ஆங்கில அரசாட்சியில் குடிகள் இடம் பெற்றிருப்பதேபோல் (House of Parliament) பண்டைக்காலத்தும் உண்மை நன்கு விளக்கும். அரசர்கட்கு மெய்க்காப்பாளர்களும் (Body guards) உண்டு. அழியாப்புகழை நாடி உயிரைத் துரும்பென மதிக்கும் சுத்தவீரர்களும் தமிழர்க்குப்புதியரல்லர். பொதுஜன நன்மையைக்குறித்து ஏற்படுத்தப்பட்டிருக்கும் வைத்தியசாலையும் (Hospital) ஆதிகாலத்ததேயாம். மற்றும் இயந்திரங்களும் உண்டு. இன்னும் நாகரிகத்தின் ஏற்றத்தை விளக்கும் அறிகுறிகள் அநேகமுளவெனினும், விரிவஞ்சி கூறாது விடுத்தாம். மேற்கூறியவைகட்கெல்லாம் பண்டை நூலின் கண் ஆதாரம் காணப்படுமோ எனின் காட்டுதும்.

கைத்தொழிலாளிகள்:—

"வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையும் மேவிய விரையும்
பகர்வனர் திரிதரு நகர வீதியும்
பட்டினு மயிரினும் பருத்தி நூலினுங்
கட்டு நுண்வினைக் காருகரிருக்கையு
மாரமு மகிலுந் தூசுந் துகிரு
மாசறுமுத்து மணியும் பொன்னு
மருங்கல வெறுக்கையோ டளந்து கடையறியா
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியும்
காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்

மீன்வலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர்
பாசவர் வாசவர் பன்னிண விலைஞரோ
டோசுநர் செறிந்த வூன்மலியிருக்கையுங்
கஞ்ச காரருஞ் செம்புசெய் குநரு
மரங்கொறச்சருங் கருங்கைக் கொல்லருங்
கண்ணுள் வினைஞரு மண்ணீட்டாளரும்
பொன்செய் கொல்லரு நன்கலந்தருநருந்
துன்ன காரருந் தோலின் றுன்னருங்
கிழியினுங் கிடையினுந் தொழில் பலபெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால் கெழுமாக்களும்"

மேற்காட்டிய சிலப்பதிகாரக் கூற்றால் கைத்தொழிலால் வேறுபட்ட இயல் பினையுடைய தொழிலாளிகள் பலர் பண்டைக்காலத்தரே என்பது பெறப் படும்.

கலங்கரை விளக்கம் (Light House)

(சிலப்பதிகாரம்):—

"தொடைநவின் மகவேக் கடைகெழு விளக்கும்
இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்
இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்"

ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கட்கு இலச்சினையிடுதலும் சுங்கங் கோடலும் (பட்டினப்பாலை):—

"வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன்றெருவின்
நல்லிறைவன் பொருள்காக்கும்
தொல்லிசைத்தொழின் மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
தேர்பூண்ட மாஅபோல்
வைகறொறு மசைவின்றி
யுலகுசெயக் குறைபடாது
வான்முகந்தநீர் மலைப்பொழியவு
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவும்
மாரிபெய்யும் பருவம்போல
நீரினின்று நிலத்தேறவு
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
அருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்

புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி"

கால் நடையாய்ச்செல்லும் பண்டங்கட்கு வழியில் ஆயங்கோடல் (Toll gate) (பெரும் பாணாற்றுப்படை):—"நேரியற்

புணர்ப்பொறைதாங்கிய வடுவாழ்நோன்புறத்
தணர்ச்செவிக் கழுதைச்சாத் தொடுவழங்கும்
உல்குடைப் பெருவழிக்கவலை காக்கும்"

அரசர் அவைக்களத்தில் (House of Commns) ஜனங்கள் இடம் பெற்றமையும், அரசர்கள் (Body guards) மெய்க்காப்பாளரையடைந்திருந்தமையும்:—

"ஐம்பெருங் குழுவுமெண்பேராயமும்
அரசகுமாரும் பரதகுமாருங்
கவர்பரிப் புரவியர் களிற்றின் றொகுதிய
ரிவர்வரித் தேரினரியைந் தொருங்கீண்டி"

என்னுஞ் சிலப்பதிகார வுரையின் அரும்பத உரையாசிரியர் மேற்கோளாகக் காட்டிய,

"சாந்தபூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுகநெ
யாய்ந்த இவரெண்மராயத் தோர் வேந்தர்க்கு
மாசனம் பார்ப்பார் மருத்தர்வாழ் நிமித்தரோடமைச்ச
ராசிலவைக் களத்தாரைந்து"

என்னும் செய்யுள் விளக்கும்.

ஐம்பெருங்குழு:—மாசனம்: பொதுஜனப் பிரிதிநிதி; பார்ப்பார்: அறிவர்; மருத்தர்: ஆயுள்வேதங்கற்ற மருத்துவர்; நிமித்தர்: சகுனங் கூறுவோர்; அமைச்சு மந்திரிகள்.

எண்பேராயம்:—வாசம் கொடுப்போர், மாலை தொடுப்போர், கவசமிடுவோர், உடை உடுப்போர், அடைகாய் நல்குவோர், வெற்றிலை கொடுப்போர், மெய்காப்பாளர் (Body guards), விளக்குத் தூக்குவோர், ஆகிய இவர்களாம்.

### வீரம்.

போர்க்குச் சென்ற தன் மகன் படைக்கு வலியிழந்து புறங்கொடுத்தோடினன் என்று பலர் கூறக்கேட்ட ஒருத்தி அவ்வாறு போருக்கு உடைந்தனன் ஆயின் அவன் பாலுண்டு வளர்தற்குக் காரணமாகிய என் முலையை அறுத்தெறிவேன் என்று வாள் கைக்கொண்டு படுகளம் புகுந்து தேடி இருதுணிபட்டுக்கிடந்த மகனுடலங்கண்டு அவனை ஈன்ற நாளினும் பெரிது வந்தாள் எனின் தமிழர் வீரத்தை என்னென்றுரைப்பது.

"நரம் பெழுந்துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்று பலர் கூற
மண்டமர்க் குடைந்தனனாயின் உண்ட என்
முலையறுத் திடுவன் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களத் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிது வந்தனளே"

என்னும் புறநானூறு விளக்கும்.

வைத்தியசாலை (Hospitals) (குறள்):—

"உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வான் என்று
அப்பால் நாற் கூற்றே மருந்து."

உற்றவன்-நோயாளி (patient); தீர்ப்பான்-மருத்துவன் (Doctor); மருந்து-கருவியாகிய மருந்து (Medicine); உழைச் செல்வான்-மருந்து பிழையாமல் இயற்றுவோன் (Compounder);

இயந்திரம் (Engines) (சிந்தாமணி.):—

"பல் கிழியும் பயினும் துகில் நூலோடு
நல்ல ரக்கும் மெழுகும் நலஞ் சான்றன
வல்லனவு மமைத்தாங் கெழுநாளி னுள்
செல்வ தோர்மாமயில் செய்த னன்றே."

தமிழும் சைவ சமயமும்:—எம்மொழியினும் இனிய தமிழ் மொழியானது சைவசமயத்து முழுமுதற் கடவுளாம் சிவபெருமானாலே மிகுதியும் விரும்பப்பெறுவது இம்மொழி தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்னும் மூன்று சங்கங்களினும் நன்காராயப்பட்டது. தலைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் திரிபுர மெரித்த விரிசடைக்கடவுளும், குன்ற மெறிந்த முருகவேளும் எனின், தமிழிற்கு இதனினும் ஏற்றம் வேண்டுமோ! "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாயமைந்தனோடெண்வகையாயமைந்து நின்றான்." என்று ஆன்றோர் சிறப்பித்துக் கூறும் சிவபரஞ்சுடரும் எழுபெரும்புவன முழுதொருங்கீன்ற உமை யம்மையும், முருகவேளும் முறையே சோமசுந்தர பாண்டியன், தடாதகைப் பிராட்டியார், உக்கிரகுமரனாக அவதரித்தமை தமிழ் காரணமாக எனின் யாம் பகர்வது யாது. இதனைக் குமரகுருபர சுவாமிகளும்,

"தமரநீர்ப் புவன முழுதொருங்கீன்றாள் தடாதகா தேவியென்றொரு பேர் தரிக்கவந்ததும் தனி முதலொரு சீசவுந்தர மாறனானதுவும், குமரவேள் வழுதியுக்கிரனெனப் பேர்கொண்டதும்தண்டமிழ் மதுரங்கூட்டுணவெழுந்த

வேட்கையாலெனிலிக்கொழி தமிழ்ப் பெருமையாரறிவார்" என வியந்து கூறியுள்ளார்.

தமிழ்ச் சைவசமையாசாரியர்களாய் விளங்கும் நால்வர்கள் தமிழில் திருவாய் மலர்ந்தருளிய தேவார திருவாசகங்களின்மீது எல்லாம் வல்ல இறைவனும் சோமசுந்தரப்பெருமானுக்கு உளதாம் விருப்பம் இவ்வளவிற்று என்று இயம்பவல்லேம் அல்லேம். ஞானசம்பந்தப் பெருமான், காரைக்காலம்மையார் திருத்தலைபாலே நடந்த திருப்பதியாம் திருவாலங்காட்டினுள் பிரவேசித்தற்கஞ்சி, அப்பதிக்கு வெளியே தங்கியிருந்தபோது, •

மாலையிடையாமத்துப் பள்ளிகொள்ளும் மறையவனார் தம் முன்பு கனவிலேவந், தாலவனத்தமர்ந்தருளும் அப்பர் நம்மை யயர்த்தனையோ பாடுதற் கென்றருளிச்செய்ய, ஞாலமிருணீங்கவரும் புகலிவேந்தர் நடுவிடையாமத்தினிடைத் தொழுதுணர்ந்து, வேலைவிடமுண்டவர் தங்கருணை போற்றி மெய்யுருகித் திருப்பதிகம் விளம்பலுற்றார்."

என்றபடி தாமே வலியப்போந்து பாடலையேற்றதும்,

"நேசநிறைந்த வுள்ளத்தால் நீலநிறைந்த மணிகண்டத், தீசனடியார் பெருமையினை எல்லா வுயிரும் தொழவெடுத்துத் தேசமுய்யத் திருத்தொண்டத்தொகை முன்பணித்த திருவாளராம்,"

சுந்தரமூர்த்தி நாயனாரை வலிய ஆண்ட வள்ளல்,

"மற்று நீவன்மைபேசிவன் றொண்டன் என்று நாமம்
பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டேயாகு மாதலால் மண்மேனம்மைச்
சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்"

எனத் தமிழ்மாலை சாத்தக் கட்டளை யிட்டதும்,

திருமுதுகுன்றில் ஆரூரருக்குக் கொடுத்த பொன்னை அவர் மணிமுத்தாநதியிலிட்டு திருவாரூர்க் குளத்தில் எம்பெருமான் அனுஞைப்படி தேடிய போது
"நின்னழகர் பாட்டுவந்து திருவிளையாட்டினின்று
மாற்றறு செம்பொன் குளத்து வருவியர் தொழிந்தருள"

எனப் பாட்டுக்காக முதலில் பொன்காட்டா தொழிந்ததும்,

மணிவாசகப் பெருமானைத் திருப்பெருந்துறையில் குருந்த மூலத்தில் ஆண்ட பெருந்தகை,

"தித்திக்கு மணிவார்த்தை யின்னஞ் சின்னாட்டிருச் செவியிலருத்தவுங் கைச்செம்பொன்னெல்லாம், பத்திப் பேரன்பளித்துக் கவர்ந்து வேண்டும் பணிகொண்டு பாண்டியனை யிவர் பண்பு தேற்றி, முத்திக்கே விடுத்திடவும் புத்தைவாது முடித்திடவுந் திருவுள்ள முன்னமெய்தி, எத்தித் தொண்டரைக் கருமஞ் சிறிதுண்டிங்கே யிருத்தியென உருக்கரந்து" சென்றதுமாகிய, இவையெல்லாம் ஏகநாயகனும் சிவபரஞ்சுடர் தமிழ் மொழியின்மீது .

வைத்துள்ள விருப்பத்தாலன்றோ இன்னும் தமிழ் காரணமாக எம்பெருமான் செய்தருளிய திருவிளையாடலை யறியாதார் யாவர். இவைகளால் தமிழிற்கும் சைவ சமயத்திற்கும் உள்ள ஒற்றுமை வெள்ளிடை மலைபோல் விளக்கமுறுகின்ற தன்றோ.

முடிவுரை:—இத்தகைய தமிழ் மொழியை தமிழ் நாட்டு மூவேந்தரும் பண்டைக்காலத்தில் "பாராட்டிவந்தனர் என்பதை மேலே காட்டினும். மூவேந்தருள்ளும் இம்மொழியின் மேன்மையை பெரிதும் பாராட்டினோர் பாண்டியரே யாவார். இதனை மூன்று சங்கங்களும் அவர் நாட்டிலிருந்தமையே நன்கு வலியுறுத்தும். இதுவேயுமன்றி,

> "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும்
> உறைவானுயர் மதிற் கூடலினாய்ந்த வொண்டீந் தமிழின்
> றுறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல் புக்கோ
> இறைவா தடவரைத்தோட் கென்கொலாம் புகுந்தெய்தியதே"

என்பதும் எடுத்துக்காட்டும். இத்தகைய தமிழ்மொழியானது, முச்சங்கங்களும் அழிந்த பிறகு ஆதரிப்பாரின்றிச் சீர்குலைந்து நிற்பதை, நாம் செய்த தவப்பயனாய் இன்று சபாநாயகம் வகித்திருக்கும் ஸ்ரீமான், பாண்டித் துரைசாமித்தேவர் அவர்கள் தமிழ்ச்சங்கம் நாட்டி உலகிற்குச் செய்துவரும் பெருநன்மையை அறியாதார் யாவர்! அவரும், அச்சங்கமும், இன்று நாம் ஒன்றுகூடிப் பேசிக் களித்தற்குக் காரணமாய சைவசமையாபிவிர்த்தி சபையும் பல்லூழிகாலம் வாழ நம்பெருமான் திருவருள் புரிவாராக.

# தமிழர் சூத்திரரா ?

இந்தச் சபையின் காரியதரிசியவர்கள் இந்தச் சபையார் முன் யானும் ஓர் உபந்யாஸம் செய்யவேண்டுமென்று என்னைக் கனப்படுத்தியதற்கு நான் வந்தனங்கூறுங் கடமையுடையேன்.

இச்சபையிலுள்ள பெரியோர்கள் நன்கு மதிக்கத்தக்க யாதொன்றுங் கூறுந்தகுதி எனக்கில்லையாயினும் ஷெ காரியதரிசியவர்களது வேண்டுகோளை மறுக்க அஞ்சித் "தமிழர் சூத்திரரா?" என்ற விஷயத்தைப்பற்றிப் பேசுவதாக ஒப்புக்கொண்டேன். ஆதலால் பெரும்பான்மையாக அவர்கள் பொருட்டும் சிறுபான்மை என் பொருட்டும் சபையார்கள் என்மீது தயை கூர்ந்து யான் கூறுவதைப் பொறுமையுடன் கவனித்துக் கேட்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

இந்த விஷயம் நூதனமானதன்று. சரித்திர சாஸ்திர முறைப்படி இந்து தேசவரலாற்றை ஆராய்ச்சி செய்த சரித்திராசாரியர்கள் இந்த விஷயத்தை நெடுங்காலமாக விசாரித்திருக்கிறார்கள். அவர்கள் விசாரணையினால் ஆங்கிலேயர் பிராஞ்சியர் சீனர் ஜப்பானியர் முதலியோர் எப்படிச் சூத்திரரல்லரோ, அப்படியே தமிழரும் சூத்திரரல்லரென்பது நிர்சந்தேகமாகத் துணியப்பட்டிருக்கின்றது. *

---

* பின்வருவது ஸ்ரீ P. சுந்தரம் பிள்ளை M. A. எழுதியிருப்பதன் கருத்து:—

எப்படிப் பிராஞ்சுக்காரர் சூத்திரரல்லரோ, அப்படியே அவர்களும் [வேளாளரை யுள்ளிட்ட திராவிடர்களும்] சூத்திரரல்லரென்றும் ஆரியவர்க்கமான ஜாதிகட்குகள் அவர்களது ஆதி சத்துருக்களாகிய வடதேசத்து ஆரியரால் அத்தியந்த சாதுரியமான சூழ்ச்சியோடு ஆக்கப்பட்டு, கைகால்களைக்கட்டலினும் அதிகக் கேடு பயப்பதாக அவர்களுடைய ஆன்மாக்களுக்கிடப்பட்டிருக்கிற விலங்குகளென்றும் சொல்வது, கேவலம் சரித்திர உண்மையைக் கூறுவதேயாகவிருந்தாலும், கலகாஸ்பதமான கொள்கையாகத் தோனிக்கலாம். (தமிழ்த் தொன்மை ஆராய்ச்சிக் கழகத்தாரது (Tamilian Archæological Society) இரண்டாம் பிரசுரத்தின் பாயிரத்தின் 2-ம் பக்கத்தைப் பார்க்க.)

இதுவும் ஷெயார் எழுதியதன் கருத்து:—முக்கியாம்சங்களில் தமிழராயுள்ளோருக்கு வேதங்களிலிருந்தும் மற்றைய ஸமஸ்கிருத நூல்களிலிருந்தும் அநுமதிகளும் ஆதாரங்களும் தேடப்புகுவது தப்பு. இந்தியாவின் வடபாகத்தில் வேதகாலத்தில் குடிபுகுந்தோரினின்றும் தமிழர் உற்பத்தியாகவில்லை. தமிழர் நிர்ப்பந்திக்கப்பட்டாவது சுயேச்சையாகவாவது வடக்கினின்று குடியெழும்பித் தெற்கே குடிபுகவில்லை. அவர்களை வட இந்தியாவில் குடிபுகுந்தஆரியர்களுக்கு எதிர்ப்பட்டுஅவ் வாரியரால் தாஸர்(Dasyur)என்று பெயர்வழங்கப்பட்ட ஜனங்களென்று கருதக்கூடாது. அவர்கள் புறத்தேசங்

அப்படியிருந்தும், ஆங்கிலங் கற்றவர்களுள்ளேயே மிகப்பெரும்பாலா ரும் தமிழ் மாத்திரங்கற்றவர்களுள்ளே சற்றுக்குறைய எல்லோருமே, சரித் திர உண்மைகளுள் வெகு லகுவும் அதிவிசதமுமான இவ்வுண்மையைத் தெ ரியாதிருக்கிறார்கள். கற்றவர்களே இவ்வாறிருக்கும்போது மற்றவர்களைப் பற்றிச் சொல்லவேண்டுமோ! தமிழர்சூத்திரரா? என்று கேட்டால்,"அதைப் பற்றி என்ன சந்தேகமிருக்கிறது, இப்படிப்பட்ட கேள்வி கேட்பது ஆச்சரி யமாயிருக்கிறது. இனித்திருடர் மனிதரா என்றசந்தேகமும் உண்டாய்விடும் போலிருக்கிறதே" என்று பலர் சொல்வார்கள். சில தமிழர் தம்மைச்சூத்திர ரென்பது இழிவென்றுணர்ந்து தாம் வைசியரென்றாவது க்ஷத்திரியரென்றா வது பிராமணரென்றாவது கூறுவர். பின்னும் சிலர் சூத்திரரைச் சற்சூத்திரர் அசற் சூத்திரரெனப் பிரித்துத் தம்மைச் சற்சூத்திர ரென்பர்.

இவர்களெல்லாரும் இவ்வாறு மயக்கங்கொண்டிருப்பதே நான் இந்த விஷயத்தைப்பற்றிப் பல இடங்களிலும் கூறுவதற்குப்போதிய நியாயமாகும். "இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய ஜாதிவரலாறும்" என்று என்னால் எழுதப்பட்டுத் தமிழ்த்தொன்மை ஆராய்ச்சிக்கழகத்தாரால் (The Tamilian Archaeological Society) அவர்களுடைய பிரசுரங்களுள் இரண்டாவதாகப் பதிப்பிக்கப்பெற்றிருக்கும் புஸ்தகத்தில் இந்த விஷயம் விரிவாக விவகரிக்கப்பட்டிருக்கிறது. அந்தப்புஸ்தகத்தில் உள்ள சில நியா யங்கள் இங்கேயும் அவசியமான விடங்களில் கூறப்பட்டிருக்கின்றன.

"தமிழர் சூத்திரரா" என்பதை விசாரிக்கு முன் தமிழர் என்ற பெய ருக்கும் சூத்திரர்என்ற பெயருக்கும் பொருள்கூறி வரையறுப்பது அவசியம். அவ்வாறு செய்யாமல் விவகரிக்கப்புகுவது "அரங்கின்றி வட்டாடியற்றே"

---

களினின்று குடிபுகுந்தோராயிருந்தால், கரைவழியாகவன்றிக் கடல்வழியாக வந்தோராகவும் ஆதியில் நாகரிகம் வழங்கிய தேசங்களெல்லாவற்றினும் முந்தி நாகரிகமடைந்ததேசங்களாகிய அஸ்ஸிரியா (Assyria) ஆசியாமைனர் (Asia Minor) என்ற பிரதேசங்களினின்றும் வந்தோராகவுமிருக்கவேண்டும். (ஷை ஷை 5-ம் பக்கம்)

ஸ்ரீ K. நடராஜையர் "இந்தியன் ஸோஷியல் ரிபார்மர்" என்ற பத்தி ரிகையின் 1893-ம் வருத்து அக்டோபர்மாதப் பிரசுரத்தில் எழுதியதன் கருத்து:—தென்னிந்தியாவுக்கு [ஞானம்] பிரகாசத்தையும் நாகரிகத்தையும் கொண்டுவந்தவர்கள் பிராமணரென்பதை நாம் ஆக்ஷேபஞ் செய்யாமல் ஏற்றுக் கொள்ள அசக்தராயிருக்கின்றோம். (ஷை ஷை 11-ம் பக்கம்.)

"திராவிடருடைய புராதனத்தை நோக்குங்கால், ஆரியருடைய புரா தனமானது க்ஷண நேரத்துக்கு முன்பெற்ற ரூட்டர்தந்தி செய்தியை ஒக்கும் என மாஜி சென்னைக் கவர்னர் கிராண்டப் அவர்கள் பரீக்ஷாபட்டமளிக்கும் பிர சங்கத்திற் கூறியது இன்னும் அனேகருடைய நினைவிலிருக்கலாம்."

ஸ்ரீ V. செல்வகேசவராய முதலியார் M A. இயற்றியுள்ள தமிழ் என்ற (1906-ளும் பதிப்புப்) புஸ்தகம் 12-ம் பக்கம் )

என்பதற்கு உதாரணமாய் விடுமென்று சொல்ல வேண்டியதில்லை. இந்து தேசத்தவர்களை ஹிந்துக்கள் மகமதியர் கிறிஸ்தவரென்று மதம்பற்றிப் பிரிப்பது போல, தென்னிந்தியர்களைச் சாதி பற்றி ஆரியர் தமிழரென்று பாகுபாடு செய்யலாம். அப்படிப் பாகுபாடு செய்வதில் பெரும்பான்மை காரணமாகத் தமிழர் என்ற பெயர்ப்பொருளில் தெலுங்கர், கன்னடர், மலையாளிகள் என்ற பெயர்ப்பொருள்களும் அடங்கும். ஹிந்துக்களும் மகமதியரும் மிகுந்து வாழும் சென்னபட்டினத்திலே, ஹிந்துக்கள், மகமதிய ரென்று கூற வேண்டிய சமயங்களில் "தமிழாள், துலுக்காள்" என்று சாதாரண ஜனங்கள் சொல்வதுண்டு. இந்த வெகு ஜனவழக்குச் சொற்றொடரில் "தமிழாள்" என்பது "தெலுங்காளை" உள்ளிட்டிருப்பது கவனிக்கத்தக்கது இவ்வாறே மேற்கூறிய தமிழர் என்பதில் தெலுங்கர் முதலிய திராவிட ஜாதிகள் அடங்குவது சுபாவமானதே. தமிழர் என்பதும் திராவிடர் என்பதும் ஒரே பொருளைக்குறிப்பவைகளாக இங்கே பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன.

மேலே தமிழர் என்பதன் பொருள் இன்னதென்று கூறப்பட்டது. இனிச் சூத்திரர் என்பதன் அர்த்தம் விளக்கவேண்டியிருக்கிறது. ஆதியில் ஆரியருள்ளும் ஜாதிபேதமிருந்ததில்லை காலக்கிரமத்தில் அவர்களுள்ளே பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்ற வகுப்புக்கள் அந்தந்த வகுப்பார் கொண்ட தொழில்பற்றி யேற்பட்டன. * ஆரியரல்லாதவர்களுக்கு ஆரியர்கள் ஏவலரென்று பொருள்படும் சூத்திரரென்ற இழிவுப் பெயரிட்டு நால்வகைச்சாதி ஏற்படுத்தினர் இதுபற்றியே, கபிலர் பிராமணர்களை நோக்கி,

> ஒட்டியர் மிலேச்சர் ஊணர் சிங்களர்
> இட்டிடைச் சோனகர் யவனர் சீனத்தர்
> பற்பலர் நாட்டிலும் பார்ப்பா ரில்லையால்
>
> * * *
>
> நால்வகைச் சாதி இந்நாட்டில் நீர் நாட்டினீர்.

என்று சொன்னதாகக் கபிலரகவல் கூறுகின்றது

ஆரியர் இந்தியாவில் பிரவேசித்தபோது குளிர்தேசத்திலிருந்து வந்தவர்களாதலால், வெள்ளைநிறத்தவராயிருந்தார்கள் திராவிடர்கள், உஷ்ணதேசமாகிய இந்தியாவில் நெடுங்காலம் வசித்த காரணத்தால் மங்கினநிறமுடையவராயிருந்தனர். ஆரியர் ஜாதிவித்தியாசம் ஏற்படுத்தியதற்கு முக்கிய காரணங்களுள் ஒன்று இந்த வருணபேதமே. அவர்கள் ஜாதிதர்மமென்பதும் வருணாச்சிரம தருமங்கள் என்பதில் அடங்கிய வருணதருமமும் ஒன்றே.

* பிராமண சிரேஷ்டரும் ஸமஸ்கிருதத்தில் மஹா பண்டிதருமாகிய டாக்டர் G பந்தார்க்கர் 1894ஆம் சென்னபட்டினத்தில், ஜனசாரச் சீர்திருத்த விஷயமாகக் கூடிய கூட்டத்தார் முன்பு செய்த உபந்யாஸசாரம், தமிழ்த்தொன்மை ஆராய்ச்சிக் கழகத்தாரது (The Tamilian Archaeological Society) இரண்டாவது பிரசுரம் 39, 40, 41-ம் பக்கங்களில் பதிப்பிட்டிருப்பதைப் பார்க்க.

வருணதருமங்கள் என்பவை தேகத்தின் வருணம் அல்லது நிறம்பற்றி ஏற்படுத்திய தருமங்களே. வெள்ளையாயிருப்பவருக்கு உத்தமதருமமும் மங்கலாயிருப்பவருக்கு மத்திமதருமமும் கறுப்பாயிருப்பவருக்கு அதமதருமமும் விதிக்கப்பட்டன. முன்னமே சொல்லியபடி ஆரியர்கள் தங்கள் இனத்தவர்களைப் பிரம க்ஷத்திரிய வைசியரென்று மூன்று வகுப்பாகவும் அநாரியர்களைச் சூத்திரரென்று வேறொருவகுப்பாகவும் வகுத்தனர். ஆரியர்கள் எப்போதும் வெண்மையாயிருப்போமென்றெண்ணி வருணபேதம் (அதாவது நிறவேற்றுமை) காரணமாகத் தருமங்களை ஏற்படுத்தினார்கள்போலும். பிற்காலத்தில் அவர்களெல்லோருமே மங்கின கரியநிறம் அடையக்கூடுமென்பதை நினைக்கவில்லையென்று தோன்றுகிறது.

ஆரியர் இந்தியாவுக்கு வருமுன், இந்த நாட்டுச்சனங்கள் நிலம்பற்றிப் பகுக்கப்பட்டிருந்தனர். மலைநிலத்தாரைக் குறவரென்றும் முல்லை நிலத்தாரை இடையரென்றும் மருத நிலத்தாரை மள்ளரென்றும் நெய்தனிலத்தாரைப் பரவரென்றும் பாலைநிலத்தாரை மறவரென்றும் கூறுதல் மரபாயிருந்தது. இன்றும் இச்சாதியார்கள் இப்பெயர்களாலே வழங்கப்படுகின்றனர். இவர்களுள் ஒருசாதி உயர்ந்தது ஒருசாதி தாழ்ந்த தென்றிருந்ததில்லை. ஒருசாதியோடு மற்றெந்தச்சாதியும் உடனுண்ணலும் பெண்கொண்டு கொடுத்தலும் நிகழ்ந்தன. சிந்தாமணிக் கதாநாயகனாகிய சீவகன் பலசாதி மாதரைமணந்து அப்பல சாதியார்களோடு உண்டு உறவாடிக்களித்தது மேற் கூறியதை நன்கு விளக்கும்.

ஆரியரும் நெடுங்காலம் திராவிடமாதரை மணஞ்செய்து திராவிடரோடு கலந்து ஐக்கியம் பாராட்டிவந்தனர். பிற்காலத்திலே அவ்வாறான மணங்களும் ஐக்கியபாவனையு வரவரக்குறைந்து கடைசியாக நிகழாதொழிந்தன. ஆதியில் ஆரியரையும் திராவிடரையும் பிரித்துக்காட்டத்தக்க உருவவேறுபாடுகள் இருந்திருக்கலாம். அந்த ரூபபேதங்கள் நெடுங்கால ரத்தக்கலப்பினால் படிப்படியாக ஒழிந்து போய்விட்டன. இப்போது மேற்கூறிய இருவகுப்பாரும் இயற்கையினால் ஒருசாதியாராயும் செயற்கையினால் இருவேறு சாதியாராயும் இருக்கின்றனர். இயற்கைச்சாதி செயற்கைச்சாதி யென்பவை பின் வருவதனால் விளங்கும்.

* "நீண்ட முகமும் நெடுகி நெருங்கிய கொம்பும் தொங்கிய கோசமும் உள்ள ஆலம்பாடி மாடு, பரந்தமுகமும் மிகநீளாமலும் நெருங்காமலும் உள்ள கொம்பும் ஒட்டுகோசமும் உள்ள காங்கேயநாட்டு மாடுபோன்ற வெவ்வேறான மாட்டுச்சாதிகள் இயற்கைச் சாதிக்கு உதாரணங்கள். இவ்வாறே மனிதருள்ளும் பல இயற்கைச் சாதிகள் உண்டு. தடித்துத்தொங்கும் உதடு, சப்பைமூக்கு, பெருத்துப்புடைத்த கன்னமோவா யென்புகள் முதலிய உருவ விசேடமுடைய நிகிரோவரும், சாய்ந்தகண் பரந்து தட்டையான முகம் முத

* இராமயண உள்ளுறைபொருளும் தென்னிந்தியா சாதிவரலாறும் என்ற புஸ்தகத்தின் 34-35-ம் பக்கங்களிலிருந் தெடுத் தெழுதப்பட்டது.

லிய அடையாளமுள்ள சீனரும், வெவ்வேறான இயற்கைச்சாதிகள். இவ்வாறு இயற்கையான பேதமில்லாமல் மனிதரால் ஏற்படுத்திய வித்தியாசமுடைய சாதிகளே செயற்கைச் சாதிகள். ஆனால் தென்தேசந்து ஆரியர் மேலே சொல்லியபடி நெடுங்காலம் திராவிடப் பெண்களைப் பல நூற்றாண்டுகளாக மணந்து மிகவுங் கலப்புற்றுத் திராவிடரினின்றும் பிரித்தறியக்கூடிய இயற்கை அடையாளங்கள் அனைத்தையும், முற்றும் அல்லது சற்றேக்குறைய முற்றும், இழந்திருக்கின்றனர். † திராவிடருள் அடங்கியவேளாளர் மறவர் இடையர் கம்மாளர் முதலிய சாதிகள், பல செயற்கைச்சாதிகளாயும், ஒரே இயற்கைச் சாதியாயுமிருக்கின்றனர். பிராமணரிற் சிலர், வேளாளரிற் சிலர், மறவரிற் சிலர் இடையரிற் சிலர் கம்மாளரிற் சிலர் மற்றைய சென்னிந்திய சாதிகளொவ்வொன்றிலும் சிலர் ஆகிய இவர்களை ஒரேவகையாகச் சவரம் செய்வித்து, ஒரேவிதமாக உடை உடுப்பித்து, ஒருசேர நிறுத்திடுவோர், அவர்களுள் இன்னார் இன்னசாதி இன்னார் இன்னசாதியென்று 'மனிதநூல்' வல்லாரே பகுத்தறிய மாட்டார்கள் சற்றுமுன் நீகிரோவென்னு சாதிகளைப்பற்றிக் கூறியபோது, வேண்டுமென்றே அவர்களது நிறவேற்றுமை கூறாது விடுவித்தேன். நிகிரோவர்களிற் பிறந்தினார் சிலர் மஞ்சள் வருணத்தினர். அமெரிக்கர் இந்தியரென்றசாதிகள் இவ்விருசாதியினின்றும் பிரித்துக்காட்டும் உருவபேதத்தோடு செம்புநிறமுடையவர். இம்மூன்று சாதிமனிதரையும்முன் சொன்னபடி ஒரே வகையாகச் சவரஞ்செய்வித்து உடையுடுப்பித்தலேயன்றி, எல்லாருக்கும் ஒரே வருணம் பூசிவிட்டாலும், இவர்களை வெகு லகுவாக இன்னின்னசாதியென்று யாவரும் பகுத்தறியக்கூடும்". இவ்வாறு தென்னிந்திய பிராமணரையும் திராவிடரையும் பிரித்தறிதல் அசாத்தியமென்பது தானே விளங்கும்.

ஆரியர் மற்றைச் சாதியாரை சூத்திரரென்றதுபோல, ஒரு சாதியார் பிற சாதியார்களையும் ஒருமதத்தார் வேறு மதத்தார்களையும் இழிபெயரிட்டு வழங்குவது சகசம். இழிபெயரிட்டவர்கள் அப்பெயரை ஏற்றுக்கொண்டு தங்களைத்தாங்களே அப்பெயரால் வழங்குவதுதான் ஆச்சரியம் இப்படிப்பட்ட ஆச்சரியம் நம்முடைய நாட்டைத் தவிர மற்ற நாடுகளில் நிகழ்வதற்கு உதாரணங்கள் காண்பது அரிது. சரித்திர நிகழ்ச்சிகள் திரும்பத்திரும்ப நிகழ்கின்றன என்பது ஆங்கிலப்பழமொழி யொன்றின் கருத்து * அப்பழமொழிக் கோருதாரணமாக, முன்காலத்தில் ஆரியரிட்ட சூத்திரப்பெயரைத் திராவி

† Bishop Caldwell says:— "When we compare the physical type of cultivated high caste Dravidians with that of the Brahmins, no essential difference whatever, and very little difference of any kind, can be observed" (Quoted in Page 5,8,9, the Tamil book entitled 'Tamil' Published in 1905 by Mr. T. Chelvakesavaraya Mudaliar, M. A.)

* "History repeats itself."

டர் ஏற்றுக்கொண்டதுபோல, இக்காலத்தில் கிறிஸ்தியர் பிறமதத்தாருக்கு இட்டு வழங்கும் அஞ்ஞானி (Heathen)ப் பெயரை இந்துக்களனேகர் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். கிறிஸ்தியர்கள் மிகுத்திருக்கும் கிராமத்தில் இந்துக் குடியானவனொருவனை 'நீ கிறிஸ்தியனா?" என்று கேட்டால் "இல்லை, நான் அஞ்ஞானி" என்று அவன் சொல்வது பலர் அறிந்தது. இப்படிச் சொல்லுவதைக்கேட்டும் தமிழர்கள் சிரிப்பார்கள். அந்தத் தமிழர்களே தங்களைத் 'தாங்களே சூத்திரரென்பதும் நகைப்புக்கேதுவானதென்று உணராதிருப்பது ஆச்சரியம்.

ஆரியர் தமிழரைச் சூத்திரரென்று கூறுவது அவர்களுடைய கொள்கையோடு பொருந்தியதே. அவர்கள் ஆங்கிலேயர் பிரான்சியர் முதலியவர்களைச் சூத்திரரென்று வழங்காததுதான் அவர்கள் கொள்கைக்குப் பொருந்தாதது. அவர்கள் ஆங்கிலேயனொருவனைச் சூத்திரனென்றால், அவன் ஒப்புக்கொள்ளானென்று அவனைச் சூத்திரனென்று சொல்லத் துணிவதில்லை. அப்படியே தமிழரும் ஒப்புக்கொள்ளாதவராய்விட்டால் ஆரியர் அவர்களைச் சூத்திரரென்று சொல்லுவதை நிறுத்திவிடுவார்கள். கோலையூன்றிக் குனிந்துகொண்டுநின்று இராமாயணப் பிரசங்கம் கேட்டுக்கொண்டிருந்த ஒருவன் முதுகிலே அப்பிரசங்க முடியுமட்டும் மற்றொருவன் ஏறியிருந்து கேட்டானென்றும், அவ்வாறு சுமந்தவனுடைய மனைவி அவனை ராமாயண கதை எப்படியிருந்ததென்று கேட்டபோது, அது ஒராட் சுமைக்குச் சரியாயிருந்ததென்று சொன்னானென்றும், வழங்குங் கதை பிரசித்தமானது. அவ்வாறே சூத்திரரென்ற பெயரைச் சுமப்பதற்குத் தமிழர் ஏற்றவர்களென்று அவர்கள் மேல் ஆரியர் அச்சுமையை ஏற்றியிருக்கிறார்கள். அதனைச் சுமந்துகொண்டிருப்பவர்கள் இறக்கிவிடவேண்டுமே யன்றி ஏற்றியவர்கள் இறக்கார்களென்று தோன்றுகிறது. அதி சமீபகாலத்தில், ஆனரெபிள் திவான்பஹதூர் ரகுநாதராவவர்கள் ஆனரெபிள் பொப்பிலி மஹாராஜா அவர்களைச் சூத்திரரென்றெழுதி 1910ம் ஆு ஏப்ரல்மீ 23உ பிரசுரமான ஹிந்து பத்திரிகை வாயிலாக வெளியிட்டதை அநேகர் அறிந்திருப்பார்கள் ஆரியர்கள், அவர்களால் சூத்திரரென்று கூறப்பட்டவர்கள் விஷயத்தில் எவ்வித மனோபாவமுடையவர்களென்பதும் பிராமணரைப் பற்றி எவ்வகை நோக்கமுள்ளாரென்பதும் பின்வரும் மநுதர்ம சாஸ்திரவிதிகளால் விளங்கும்:—

பிராமணனுக்குத் தலையை முண்டிதஞ்செய்வது கொலைத்தண்டமாகும். மற்ற வருணத்தாருக்குக் கொலைத்தண்டமுண்டு.

மனு. அத். XI, 379.

அந்தணன் பூனை, அணில், காடை, தவளை, நாய், உடும்பு, கோட்டான், காகம், இவைகளைக்கொன்றால் ஒரு சூத்திரனைக்கொன்றதற்குச்செய்யவேண்டிய பிராயச்சித்தம் செய்ய வேண்டும். மனு. அத். IX, 132.

வைதீக கருமமாயிருந்தாலும் லௌகீக கருமமாயிருந்தாலும் அக்கினி எப்படி மேலான தெய்வமாயிருக்கிறதோ, அப்படியே பிராமணன் ஞானியாயிருந்தாலும் மூடனாயிருந்தாலும் அவனே மேலான தெய்வமாவான்.

மனு. அத். VI, 317.

பிராமணன் துர்ச்செய்கையுள்ளவனுயிருந்த போதிலும் சகலமான சுபா சுபங்களிலும் பூசிக்கத்தக்கவன்; அவன் மேலான தெய்வமாதலால்.

மனு. அத். VII, 318-3-19.

கருமானுஷ்டான மில்லாத பிராமணனேனும் அவன் அரசன் செய்ய வேண்டிய தீர்ப்புகளைச்செய்யலாம். சூத்திரன் ஒருபோதுஞ் செய்யக்கூடாது.

மனு. அத். VIII, 20.

சூத்திரன் விலை கொடுத்து அடிமையாக வாங்கப்பட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும் அவனைப்பிராமணன் நிர்ப்பந்தப்படுத்தி வேலை வாங்கலாம். ஏனென்றால் கடவுள் சூத்திரனைப்பிராமணனுக்கு வேலை செய்யும் ஒரே நிமித்தமாகவே படைத்திருக்கிறார். மனு. அத். VIII, 413,

பிராமணன் சூத்திரனுடைய பொருளை முழு மனச் சமாதானத்துடன் (சற்றுயினும் பாவமென்றெண்ணுமல்) கைப்பற்றிக்கொள்ளலாம், ஏனெனில் அவனுக்குச்சொந்தமான தொன்று மில்லை யாதலாலும், அவன் சொத்தை அவன் எஜமான் எடுத்துக்கொள்ளலா மாதலாலும்.

மனு. அத். VIII, 417.

ஒருபிறப்பாளன் (சூத்திரன்) இருபிறப்பாளரைத்திட்டினுல் அவன் நாவை யறுத்தெறிய வேண்டும். மனு. அத். VIII, 270.

அவன் அவர்கள் பேரையாவது சாதியையாவது தூஷித்தால், பத்து விரல் நீளமுள்ள பழுக்கக்காய்ச்சிய இரும்பை அவன் வாய்க்குள் செலுத்த வேண்டும். மனு. அத். VIII, 271.

அவன் அகந்தையினுல் குருமாருக்கு அவர்களுடைய கடமைகளைப்பற்றிப் போதிப்பானுனுல், அவன் வாய்க்குள்ளும், காதுகளுக்குள்ளும் கொதிக்கிற எண்ணெயை ஊற்றும்படி செய்வது அரசன் கடமை.

மனு. அத் VIII 272

அவன் உயர் குலத்தானை (அடிப்பதற்கு) கையையாவது தடியையாவது உயர்த்தினுல், அவன் கையை வெட்டி யெறிந்து விடவேண்டும் அவன் கோபத்தினுல் அவனை உதைத்தால், அவன் காலை வெட்டி யெறிந்து விட வேண்டும். மனு அத். VIII, 280.

தாழ்ந்த குலத்தான் உயர் குலத்தானேடு சமமாக உட்கார வெத்தனித்தால் அவனை இடுப்பிற் சூட்டுக்கோல் கொண்டு சுட்டுத் தேசத்தை விட்டுத் துரத்தி விடவேண்டும். அவன் பின் பக்கத்தை வெட்டி யெறிந்து விடலாம்.

மனு. அத். VIII. 281.

அவன் அகந்தையால் அவன் மேல் உமிழ்ந்தால் அவன் உதடுகளிரண்டையும் அரசன் வெட்டி யெறியும்படி செய்யவேண்டும்.

மனு அத். VIII, 282.

மேற்கூறிய ஆரிய தர்மவிதிகளுக்கும் "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமையால்" என்ற தமிழர் அறநெறிக்கும் உள்ள வித்தியாசம் சற்று ஊன்றி நோக்குவோர்க்கு விளங்காதிராது.

ஆரியரது புராதன தர்மவிதிகள் இவ்வாருயிருக்க, தற்காலத்தில் திராவிடர் விஷயத்தில் அவர்களுடைய அநுஷ்டானம் எப்படியிருக்கிறதென்று கவனிக்க வேண்டும். மைசூர் இராச்சியத்தில் ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருத கலாசாலை யொன்று ஸ்தாபிக்கப்போகின்ருர்களாம். அக்கலாசாலையில் பிராமணர் மாத்திரம் போதிக்கப்பெறுவார்களாம். அக்கலாசாலையோ பொருளில்லாமல் ஸ்தாபகமாகாது. பொருளோ, ஸ்வாமிகள் சொந்தப்பொருள் அல்லது மைசூர் மஹாராஜா அவர்கள் அளிக்கும் பொருள் அல்லது வேறு சிஷ்யர்கள்சமர்ப்பிக்கும் பொருள் அல்லது இவைகள் ஒன்ருேடொன்று சேர்ந்ததாகிய பொருளாயிருக்கவேண்டும். எந்தப் பொருளாயிருந்தாலும் அந்தப்பொருள் திராவிடர் நெற்றி வேர்வை நிலத்திற் சிந்தப்பாடுபட்டுழைத்ததனுல் உண்டாகி நேராகவோ பலகைமாறியோ ஸ்வாமிகள் கைவசத்துக்கு வந்ததே. அப்படிப்பட்ட திராவிடர் பொருளைக்கொண்டுஸ்தாபித்து நடத்தப்பெறும் கலாசாலையின் உட்பக்கத்தைத்திராவிடர் பார்க்க வொட்டாமற் செய்வது ஆரிய தர்மாநுஷ்டானங்களிலொன்று. இந்த அநுஷ்டானத்துக்கு மைசூர் மஹாராஜா அவர்கள் இடங்கொடுக்கமாட்டார்களென்று சிலர் நம்புகிருர்கள். இது நிற்க.

மேற்படி கலாசாலையின் ஸ்தாபகத்துக்கு ஆதாரமாகிய பொருள் அநாரியர் பொருளென்று ஒப்புக்கொண்டாலும், அதில் போதிக்கப்படும் ஞானம் ஆரிய ஞானமன்ருே, அதை அநாரியராகிய திராவிடர்பெறுதற்கு என்ன பாத்தியமிருக்கிறது என்ருல், அந்த ஞானமும் ஸ்வாமிகள் கைக்குவந்த பொருள்போலவே, ஆதியில் அநாரியரிடத்திலிருந்தே வந்ததென்று சரித்திர வல்லோர் தெரிவிக்கின்றனர். * ஆரியரது ஞானத்திலே சிறந்த ஞானம் உபநிடதங்களிலே உள்ளது. அந்த ஞானத்தை இதாஜாதி ஆசிரியர்கள் ஆரியருக்கு உபதேசித்திருக்கிருர்களென்பது அந்த உபநிடதங்களிலே உள்ள வாக்கியங்களால் விளங்குகிறது. அப்படிப்பட்ட வாக்கியங்களுள் ஒன்று, பிர்ஹத் ஆரணியகத்திலே பிரவாஹன ராஜன் உத்தாலகனென்னும் பிராமணனை நோக்கிக் கூறியதாகிய "இந்த ஞானம் இதுவரையும் எக்காலத்திலும் எந்தப் பிராமணனிடத்தும் இருந்ததில்லை"—என்பது.

* ஸ்ரீ P சுந்தரம்பிள்ளை M. A. எழுதியிருப்பதன் கருத்து:—ஆரிய தத்துவ ஞானம், ஆரிய நாகரிகமென்று அறியாமையாற் கூறப்படுபவைகளில் பெரும்பான்மையானவை அடிப்படையில் தெளிவாகத்திராவிட ஞானம் திராவிட நாகரிகம் அல்லது தமிழ்ஞானம் தமிழ் நாகரிகமாகவிருக்கின்றன. ஜென்மம் கன்மம் மாயை அருள் என்னும் கருத்துக்கள் நேராக நம்மவைகளென்று ரூபிக்கக் கூடும்.

ஆரியராகக் கருதப்பட்டிருக்கிற சிறந்த அறிவாளிகள் தத்துவஞானிகள் மாத்திரமன்றிக் கவிஞருள்ளும் பெரும் பாலரை நம்மவர்களென்று ஐரோப்பியர் இப்போது தெரிய ஆரம்பித்திருக்கிருர்கள்.

மேற்கூறிய ஞானாசிரியர்கள் திராவிடர்களென்றால், அவர்கள் திராவிட பாஷையில் ஏன் தங்கள் ஞானங்களை யெழுதிவைக்கவில்லை, அவைகள் ஸம்ஸ்கிருத பாஷையில் உள்ள உபநிஷத்துகளிலன்றோ எழுதப்பட்டிருக்கின்றன என்ற ஆக்ஷேபனையுண்டாகின்றது. அதற்குத் திராவிட ஞான நூல்கள் தென்னாடு கடல்கொள்ளப்பட்டபோது மற்றைப் பூர்வ திராவிட நூல்களோடு இறந்தனவென்றும் இயல் இசை நாடகமென்ற முத்தமிழ் நூல்களுள், இசைநூல்களும் நாடகநூல்களும் இப்போது இல்லாததனால்

கோல்டுஸ்டக்கர் (Goldstucker) மூர் (Muir) கவல் (Cowel) டூஸன் (Deussen) சார்லஸ் ஜான்ஸ்டன் (Charles Johnston) முதலிய அமெரிக்க ஐரோப்பிய பண்டித சிரேஷ்டர்களால பின்வரும் உண்மை தட்டுத்தடையின்றி இதற்கு முன்னரே அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அவ்வுண்மையாவது ஹிந்து தத்துவஞானத்தின் மூலாதாரம் பிராமணருடையதன்று; அனைத்தும் தன்னுளடங்கலுற்று இயற்கையறிவுக் கெட்டாததாயுள்ள பிரமத்தைப் பற்றிய கொள்கையாவது, அதனுள் ஐக்கியமாக நாடிக்கொண்டிருக்கும் ஆன்மா, மாயை கன்மம் மறுபிறப்பு ஆகிய இவைகளுள் எதையேனும் பற்றிய கொள்கையாவது, தேவர்கள்பால் இம்மைப்பயன்களைப் பெறும் பொருட்டாசரிக்கும் வழிபாட்டுக்கும் [யாகாதி] கிரியைகோட்பாட்டுக்கும் பொருந்தாதது என்பது. இந்தியாவில் படையெடுத்து ஆக்கிரமித்த ஆதி ஆரியர் அவ்வழிபாடு கோட்பாடுகளை மட்டுமே மதமாகப் பாவிக்கும் சக்தியுடையாராயிருந்தனர். உலகத்தாருக்கு இன்னும் ஆச்சரியம் விளைத்துக்கொண்டிருக்கும் ஆதிப் பழந்திரட்டுகளாகிய உபநிடதங்களில் பெரும்பான்மையானவை வெண்ணிறப்புறத்தேசி (களான ஆரியர்) களுக்கு மாறாகச் சிவந்த நிறம்படைத்து, பிற்காலத்தில் க்ஷத்திரியரென்று பெயரிடப்பட்டு ஆரியவர்க்கத்திற் சேர்க்கப்பட்டிருந்தாலும், [அவ்வாரியருக்கு] முற்றும் புறம்பான வேறொரு ஜாதியார்பால் உற்பத்தியானவைகளென்பதற்கு மிகத்தெளிவான சாக்ஷியங்கள் அவ்வுபநிடதங்களிலேயே இருக்கின்றன. பிருஹதாரணியகத்தில் பிரவாஹன ராஜன் உத்தாலகன் என்னும் பிராமணனை நோக்கிக் கூறுமிடத்து வெளியிட்ட கட்டுரை சரித்திரசம்பந்தமாக விசேஷ அர்த்தத்தை உட்கொண்டிருக்கிறது. அவ்வரசன் கூறியதாவது:—"இந்த ஞானம் இதுவரையும் எக்காலத்தும் எந்தப்பிராமணனிடத்தும் இருந்ததில்லை" என்பது. பிரவாஹன ராஜனைப்போலவே, விசுவாமித்திரரும் ராஜானியராயிருந்தார். அவரே, பிராமணரால் பரிசுத்தமானவைகளென்று போற்றப்பட்டவைகளெல்லாவற்றினும் முதன்மைப் பரிசுத்தமுள்ள காயத்திரி மஹா மந்திரகர்த்தா. குணதிசைச்சோதி (The Light of the east) என்று கூறப்பட்ட புத்தரும் அதே அநாரிய சாதியைச் சேர்ந்தவர். ஒப்பற்ற இனிமையும் உண்மையும் வாய்ந்த பகவத்கீதையை அருளிய கிர்ஷணமூர்த்தி பிறந்த குலம் கருநிறம் பொருந்திச் சிறிது பேதப்பட்டதாயினும், ஷை அநாரிய ஜாதியைப்போல ஆரியருக்கு முந்தியதும் ஸிதிய (Scythian) வர்க்கத்தைச் சார்ந்ததும் ஆனது.

அந்த நூல்கள் தமிழில் என்றும் இருந்ததில்லை யென்று சொல்லலாமா வென்றும் சரித்திரம் வல்லார் சிலர் சமாதானங் கூறுகின்றனர். அவர்கள் வேறு சமாதானங்களும் கூறலாம்.

உபநிடதங்களிற் கூறப்பட்ட ஞானசிரியர்கள் போலவே பிற்காலங்களிலும் கீதா ஞான தாதாவாகிய கண்ணபிரானும் திரிபிடக கர்த்தாவாகிய புத்த மஹாதேவரும் மேலைக்கண்டத்துத் தத்துவஞானத் தந்தையாகிய ஸாக்கிரதீஸ் (Socrates) ஞானேசுவரரும் சுவிசேஷ நாயகராகிய கிறிஸ்து நாதரும், சர்வசமயசார போதக சிகாமணியாகிய ராமகிர்ஷ்ண பரமஹம்ஸ ஸ்வாமிகளும் தங்கள் தங்கள் ஞானங்களைப் பிறருக்கு ஓதினார்களேயன்றித் தாங்கள் எழுதிவைக்கவில்லை. அவ்வாறே உபநிஷத்துக்களிற் கூறப்பட்ட ஞானசிரியர்களும் தங்கள் ஞானங்களை எழுதவில்லை.

இது நிற்க. மேற்கூறியபடி புதிதாக ஸ்தாபிக்கும் ஸமஸ்கிருத கலா சாலையில் பிராமணரல்லாதார் பிரவேசிக்கக்கூடாதென்னும் தடையாகிய புதுச்சுமையை இப்போது திராவிடர்மேல் ஏற்ற முயலும் ஆரியர்கள் முன்னமே ஏற்றியிருக்கிற சூத்திரப்பேர்ப் பழஞ்சுமையைத் தாங்களே இறக்கி விடுவார்களா? இறக்கார்கள். சுமப்போரே அதை இறக்கவேண்டும். ஸமஸ்கிருத பாஷை, தமிழ் தெலுங்கு முதலிய திராவிட பாஷைகளுக்குத் தாயென்பது எவ்வாறு தத்துவ சாஸ்திரி (Philologists) களால் உண்மையன்றென ரூபிக்கப்பட்டிருக்கிறதோ, * அவ்வாறே தமிழர் சூத்திரர் என்பது மெய்யன்றென்று சரித்திரம் வல்லார்களால் நிராக்ஷேபமாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

* ஸ்ரீ செல்வகேசவராய முதலியார், M. A. இயற்றி 1906-ம் ௵த்தில் பதிப்பித்திருக்கிற "தமிழ்" என்ற புஸ்தகத்தில் 44-முதல் 50-ம் பக்கம் வரை பார்க்க.

# Tamil Language:

## Its one aspect of History

### and

## one aspect of Modern Requirements.

India is a vast country peopled by different races speaking different languages. It was, even from the earliest times, not free from foreign disturbances and at each period of such disturbances there was an amount of influence brought to bear upon the peoples and their languages. To trace the order in which the several changes took place is perhaps a difficult task and the difficulty is rendered greater when we see that we have only uncertain and unsafe materials to build any theories upon.

Tamil language has, however, an antiquity not much affected by foreign influences and we have in it a literature which may be called original. The earliest of our Tamil works in existence is தொல்காப்பியம். Its commentator நச்சினார்க்கினியார் says in his commentary that that work was written at the end of the first ஊழி or erosion. According to Professor Elliot there were many erosions and the last of which was about 9000 years ago. Even taking the last erosion (ஊழி) as the basis of calculation, the Tamil language must have existed 9000 years ago. If it is as old as 9000 years, it must perforce have been an original and independent language as will be noticed later on.

Tamil language has, an originality and a singularity of its own and it cannot be classified under the Turanian group, particularly, where no striking or forcible similarity can be found between them. The distinction between வட

மொழி and தென்மொழி could have arisen only when there were two languages standing side by side, one in the north and the other in the south, both coming in contact with each other. The following peculiarities among others lend countenance to the position that Tamil must be a language independent of any other:—

1. In Tamil Grammar, gender and number are treated under one head பால், peculiar to Tamil language alone.

2. The indications of tense, present, past and future by the doubling of the root, by affixes and by interletter (இடைநிலை) for each tense are other peculiarities not found elsewhere.

3. Gender in Sanskrit is upon words. Gender upon meaning of words is peculiar to Tamil and not found in Sanskrit. For example கரம் which means hand is of masculine gender. தாரம் which means wife is also masculine, while களத்திரம் which also means wife is of neuter gender.

4. More than one half of தொல்காப்பியம் deals with பொருளதிகாரம் which is a branch of Grammar peculiar to Tamil language and to Tamil language alone.

5. The Tamil prosody especially வெண்பா, possesses rules which are peculiarly its own and such rules are not to be found in the prosody of any other language; the metre found in புறநானூறு is peculiar only to Tamil and the work itself is purely Tamil.

6. Words representing measurements and weights such as ஆழாக்கு, நாழி etc. and முந்திரி, அரைக்காணி etc. are found only in Tamil. These distinctive and other characteristics of the Tamil language had already been noticed by the great சிவஞானசுவாமிகள் in the following words viz., "தமிழ்மொழிப் புணர்ச்சிக்கட் படுஞ்செய்கைகளும் குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை, அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம்புற மென்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி, வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும்,

வெண்பா முதலிய செய்யு ளிலக்கணமும் இன்னோரன்ன பிறவும் வடமொ ழியிற் பெறப்படா." These and other peculiarities will go to show that Tamil is an original and independent language. It may have been influenced at subsequent times by other languages coming in contact with it.

The next question we have to consider is whether Tamil language continued to develop independently or whether it was influenced by its contact with other languages. There appears to have been several inroads. The one that has more largely affected Tamil is Sanskrit. The Aryan language was much richer and more copious and as such its influences could not but have been felt by the less rich Tamil language at least so far as its Vocabulary was concerned. It is generally said that Aryan migration to India was somewhere about 3000 B. C. If so, the Dravidians even by that time had developed their language to a nicety as may be gathered from the earliest Tamil works. In our earliest Tamil works we do not find much of Sanskrit admixture. தொல்காப்பியம், an out-and-out Tamil composition, treats of other departments of knowledge than Grammar. It is not until a very late period in Tamil language, do we find any large number of Sanskrit importations.

Writing, in India, is generally ascribed to Asoka and its introduction associated with the Edicts of that renowned Emperor as the earliest of written records. Though certainly we are not in possession of any earlier evidences of writing, yet there is mention made in குறள் and தொல்காப்பியம் of a practice which necessarily presupposes a knowledge of the art of writing. தொல்காப்பியம் says that it was an early practice to inscribe the names and exploits of warriors on stones and calls the same வீரக்கல்; "என்னைமுனில்லன்மின் றெவ்விர் பலரென்னை முன்னின்று கன்னின் றவர்". The premises from these two ancient works legitimately warrant the conclusion that the Tamils were conversant with the art of writing and that their knowledge of it must be dated at a time anterior to that of Asoka.

As elaborated by modern writers on sociology, there is another aspect to show that our language, with its literature and philosophy well developed, ought to have an antiquity of at least several thousand years. A nation or society takes very long before it takes to the culture of the land which is an index of its settled state and a measure of its highest civilization." Even anterior to this stage, they ought to have acquired skill in spinning, weaving, and even in the difficult art of working in metals. In the agricultural stage, as John Stuart Mill observes, "The quantity of human food which the earth is capable of returning even to the most wretched system of agriculture, so much exceeds what could be obtained in the purely pastoral stage that a great increase of population is invariably the result." As we most authentically learn of the Tamils through a monumental work of their literature, which, according to historical computation, is at least 2000 years old, they were organised into a nation with its ideas materialized in the advantages of economic self-sufficiency in clothing and food. According to that work, a work for all ages, namely, குறள், the Tamils had actually combated the puzzle of food problem. Its talented author, Divine Valluvar, lavishes quite a wealth of exhortations on the all-importance of Agriculture.

A society is an organised community of individuals united together by a common bond of intercourse. Language, therefore, is the one essential and the most indispensable, condition of such intercourse. The Tamils, with that type of civilization, broad-based and well-ordered, and a language with that standard of nicety and flexibility as is evidenced by குறள் itself, ought to have had an antiquity of several thousand years towards their evolution; and their language had rich ethics and civics, the latter with its singular mention of benevolent kingship.

The greatness of a nation is not to be judged by its ideas of material civilization alone, born though of extraordinary effort of genius. Its conceptions and ideals of social well-being are better data to determine such great

ness. Language is but the garb of such conceptions and ideas. Thought and language are but as the mould of form and the glass of fashion.

The Divine Poet, Valluvar, systematised the ethics of the Dravidian community and as well built up such a system for them; a system, not to be hedged in by the limitations of time. His system is a high water-mark of excellence. No less an authority than the late Herbert Spencer notices it in three different places in his great work on the "Principles of Ethics." Valluvar is a utilitarian of the noblest type and a thinker of the loftiest order. His right noble conception of the good of the community, and the law of service charged upon the member of that community to contribute to that good is the best yet conceived. His chapter on "ஒப்புரவறிதல்" gives abundant evidence of it.

To quote Spencer again. The "Mild Hindu" represents communal interest; his ideal being one to serve, if possible, his remotest kith and kin; on the other hand, the Englishman represents national well-being; his ideal being one to serve to uplift the nation of which he is a member. The said chapter of Valluvar pronouncedly formulates the more comprehensive and the more far-reaching ideal of service to the good of the community or nation.

In the thought-region, Valluvar is a prodigy and a type of Dravidian intellect nothing short of meteoric. With all that, he must in a large measure represent the general culture in which he was born and brought up. He must be a product of pre-Sangam culture which ought to have stocked his mind and which should be itself rich and copious. The then linguistic equipments of Tamil ought to be very high and varied as well. சிலப்பதிகாரம் and மணிமேகலை follow குறள். Their poetic, literary, and other merits will command for ever a high value. There were Dravidian instances which, by coming up to and acting up the highest ideal, fired the imagination of poets to further enrich Tamil literature by

their narration of them. அமணன், driven into exile by his junior brother குமணன், offered his head to an impecunious bard to realise the price set upon it by the latter (குமணன்). பாரி, a small hill-chief, was matchless in his gift. He was one whose heart was glowing with feelings of genuine sympathy; a tangible proof of which he gave when he drew back his car of procession in the interest of the spontaneous growth of முல்லை creeper. His munificence is also made mention of by the holy saint சுந்தரமூர்த்தி நாயனர், "கொடுக்கிலா தானை பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை." The heroic poem சிந்தாமணி is full of details of Tamil origin making up that epic. Every one of these works from its conception to its consummation is mainly Tamil, though not purely and individualistically so, because of some foreign mixture.

As Carlyle puts it, poetry is painting of emotions and feelings. According to this idea, in the rank of the Tamil poets, there is quite a galaxy of them whose fame will last all time.

The age of poetry is followed by one of commentary. Commentary is critcal thinking and art appreciation. The line of commentary well serves to clip the wings of wild exuberance. பேராசிரியர், நச்சினார்க்கினியர், சேனவரையர், இளம்பூரணர், and பரிமேலழகர் are our prominet commentators. Their critical estimate of the high settings of thought of our classical authors with their own (commentators') literary vigour and gloss of diction is entitled to our nation's gratitude.

The system of Tamil philosophy evidences the highest and the keenest mental perception. Language in the hands of these poetic philosophers formed the effective medium of popularising their spiritual truths among the masses. They had an intelligent following and a large one too. From the rank of philosophers, I will single out Saint Manikkavasakar and திருநாவுக்கரசு whose rhapsodies and spiritual yearnings are soul-stirring.

Of our later poets I will choose to mention Kamban, புகழேந்தி and Kumaraguruswamigal. Kamban cut an excellence for himself by fashioning an epic in Tamil with fullness of detail, vigour of narration, elevation of diction and force of argument. Kumaraguru, with his chaste and elegant language and his original ideas, is almost a nature poet. His lines, "செல்வமென்பது சிந்தையானிறைவே அல்கா நல்குரவு அவாவெனப்படுமே," bear quite a parallel to the same idea in Milton,

> "Mind is its own place and in itself can make
> A heaven of hell, a hell of heaven."

It is all one idea given two different coats.

Tamil language has quite a mine of proverbs, the truths of concrete experience. These exhort the nation to pursue and to develop the resources of agriculture; extol other economic virtues; many of them set forth the virtues of industry and warn against the penalties of waste. Sloth and indolence are condemned. Principles of self reliance are vehemently advocated. Ideas of economic self-sufficiency are plentiful. Knowledge is simply idolised.

In common with the rest of the civilised nations, our ancients were developing our literature in the shape of poetry. But at the present time, we have far far out-grown their needs. Prose-writing is our present day absolute need. Prose literature is the best and the most effective medium to widen the horizon of the popular mind. We are all aware the problem of moral education is engaging the attention both of the Government and the people. Almost every standard author of ours based his work on the bed-rock of truths, physical, ethical, and psychological. When one begins to reflect upon the several phases of thought passing through Seetha in her solitude, as portrayed by the fertile imagination of Kamban, a number of handy volumes in prose can be put forth embodying the virtues of passivity, resignation, modesty, chastity, absolute faith in rectitude and quite a number of others. In this connection I will refer to a piece of information. The psychological truth embodied in the stanza,

"கரனையுமறந்தான் றங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையுமறந்தா னுற்றபழியையு மறந்தான் வெற்றி
அரனையுங்கொண்ட காமனம்பினான் முன்னைப் பெற்ற
வரனையு மறந்தான் கேட்ட மங்கையை மறந்தி லாதான்."

attracted the admiration of an eminent English psychologist some years ago. If similar works are likewise sifted in some cardinal aspects, there will be plenty of room for a good prose out-put on many-sided morality. Our future prose-writers touching this phase of the question will not fail to somewhat largely incorporate in their writings our didactics chiefly intended to properly drill the minds of our youths. They will be effective guides in the hands of our youths in schools and colleges. Essays writing must be pursued. Ideas on the dignity of labour are to be amplified in the light of our innumerable adages and aphorisms, even going so far as to inculcate a worship of honest work.

There are our present day industrial and technical needs which should be popularised among our masses only through the medium of prose.

No spoken language can retain its pristine purity. Our modern requirements loudly call for the development of the resources of our language. Every progressive language will and do import in the process of its development a fair number of foreign elements, whether you will or no. When you think that indigenous elements will answer your purpose, make use of them by all means. In their absence, do not fight shy of enrichment by extraneous sources. I do not think our language will be badly off for such enrichment; nor do I think that borrowing for such a purpose will be derogatory. We will reckon with the times and do well to profit by their warnings.

---

# பத்துப்பாட்டின் காலம்.

பத்துப்பாட்டென்பது வெவ்வேறான பாட்டுக்கள் பத்தைச்சேர்த்து அவைகளின் தொகுதிக்குக் கொடுக்கப்பட்ட பெயர் அப்படிச் சேர்க்கப்பட்ட பத்துப்பாட்டுக்களாவன:—

1. மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப்படை.

2. முடத்தாமக்கண்ணியார் பாடிய பொருநாறாற்றுப்படை

3. இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடிய சிறுபாணாற்றுப்படை.

4. கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பெரும்பாணாற்றுப்படை.

5. காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டு.

6. மாங்குடி மருதனார் பாடிய மதுரைக்காஞ்சி.

7. மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய நெடுநல்வாடை.

8. கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டு.

9 கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலை.

10. இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடிய கூத்தராற்றுப்படை யென்னும் மலைபடுகடாம்.

இப்பத்துப்பாட்டுக்களில் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை யென்ற மலைபடுகடாம் ஆகிய நான்கும் இரவலனொருவன் பொருளின்றி வறுமையால் வருந்தி வருவானொருவனை ஓர் கொடையாளியிடம் ஆற்றுப்படுத்தி யனுப்பும் பாவனையாக அக் கொடையாளியின் குலம், குணம், வலி, ஆக்கம் முதலியவற்றைப் புகழ்ந்து பாடியவை. அவைகளில் முறையே சோழன் கரிகாற் பெருவளத்தானும், எறுமாநாட்டு நல்லியக்கோடனும், தொண்டைமான் இளந்திரையனும், பல் குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன் சேய் நன்னனும் புகழப்பட்டுள்ளார். முதலாவதாகிய திருமுருகாற்றுப்படையில் வீடு வேட்கையோனொருவனை முருகனிடத்து ஆற்றுப்படுத்தும் பாவனையாகத் தன் அநுபவத்தையும் முருகவேள் பெருமையையும் நக்கீரனார் கூறுகின்றார்.

மதுரைக்காஞ்சியில் மாங்குடி மருதனார் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனை அவன் செல்வ முதலியவற்றைக் கூறிப்புகழ்ந்து,

> 'அன்னாய் நின்னொடு முன்னிலை யெவனோ
> கொன்னொன்று கிளக்குவ னடு போரண்ணல்
> கேட்டி சின்வாழி கெடுக நின்னவலம்'

என்ற அடிகளில் பொருள்களின் நிலையின்மையையும் வீடு பேற்றிற்காக முயலுதலின் அவசியத்தையும் அவனுக்கு வற்புறுத்து கின்றார். மற்ற

நான்கு பாட்டுக்களும் அகப்பொருட் பாலன. முல்லைப்பாட்டில், தலைமகள் தன் கொழுநன் போருக்குச்சென்றவன் வரவில்லை யென்று வருந்தியிருந்த போது அவன் வந்ததைக்கூறி யிருக்கின்றது. நெடுநல்வாடையில், கொழு நன்போர்முகத்ததச்சென்றானாக அவன் பிரிவை யாற்றாது வருந்தும் தலைவி அடுத்திருந்தோர் ஆற்றியும் ஆற்றாளாய்ப் புலம்பொடு வதிவதை வர்ணித்திருக் கின்றது. குறிஞ்சிப்பாட்டில் தன்னைத் தலைவன் கந்தருவமாக மணந்ததும் தான் அவன் வழிப்பட்டு அவனை அடிக்கடி சந்திப்பதும் அவனுக்கு வழியில் இடுக்கண் நேரிடக்கூடியவைகளை நினைந்து வருந்துவதுமாகிய தலைவியின் அனுபவங்களை வெகு நன்றாக எடுத்துச்சொல்லியிருக்கின்றது. பட்டினப் பாலை தன் வறுமை காரணமாகக் கரிகாற்பெருவளத்தானிடம் பரிசில் பெ றச் செல்லுவதை உள்ளிய புலவன் தன் மனைவியைப் பிரிந்துபோக மனங் கொள்ளானாய், அவளை உடன் கூட்டிப்போக வென்றால் வழியில் இருக்கும் கஷ்டங்களை யோசித்து அதற்கும் உடன்படானாய்க் கூறியது.

I. இப்பத்துப்பாட்டுக்களும் ஒரே காலத்தனவா அன்றி வெவ்வேறு காலத்தனவா?

II. இதை ஒவ்வொன்றும் எழுதப்பட்ட காலவரை எது?

III. இவைகள் ஒன்றாகச் சேர்த்துத் தொகுக்கப்பட்டது எப்போது? என்பன யாம் இப்பொழுது ஆராயவேண்டிய விஷயங்கள்.

I. திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரனாரே தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனை நெடுநல்வாடையில் பாடியிருப்பதாலும் மதுரைக்காஞ்சி அந்த நெடுஞ்செழியனைப்பற்றியே மாங்குடி மருதனார் பா டிய தாதலாலும் முல்லைப்பாட்டு அவன் மீதே பாடப்பட்டதாகப் பலர் அபிப் பிராயப்படுவதாலும் இந்நான்கு பாட்டுக்களும் ஒரே காலத்தன என்று வெ ளிப்படும்.

மாங்குடி கிழாரென்னு மோர் நல்லிசைப்புலவர் புறநானூறு 24, 26, 372, ஆகிய செய்யுட்களில் மேற் சொன்ன நெடுஞ்செழியனைப்பாடியவர், புறநானூறு 396-வது செய்யுளில், கடை யெழு வள்ளல்களில் ஒருவனான வட்டாற்றெழினியாத னென்னும் சிற்றரசனைப்பாடியுள்ளார். அந்த எழினி யாதனைப் புறநானூறு 230-வது செய்யுளில் பாடிய அரிசில் கிழார் கடை யெழுவள்ளல்களில் மற்றொருவனான பெரும் பேகனைப் புறநானூறு 146-வது பாட்டில் பாடியுள்ளார். பெரும் பேகனைப் புறநானூறு 141, 142, 144, 145, இச்செய்யுள்களில் பாடிய பரணர், பொருநராற்றுப்படையும் பட்டினப்பாலையும் கொண்ட சோழச்சக்ரவர்த்தியாகிய கரிகாற் பெருவளத் தானின் தந்தையாகிய உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியையும் புறநானூறு 4-வது பாட்டில் புகழ்ந்துள்ளார்: ஆகையால், கரிகாற் பெருவளத்தான் மேற்சொன்ன நெடுஞ்செழியன் காலத்து இருந்திருக்கவேண்டும். அல்லது அவனுக்குச்சற்றுப் பின்னே ஆட்சி புரிந்தவனாதல் வேண்டும். கரிகாற் பெரு வளத்தானைப்பாடிய பொருநராற்றுப்படையும், பட்டினப்பாலையும் பட்டி

னப்பாலை பாடின கடியலூர் உருத்திரங்கண்ணனாரால் பாடப்பட்ட பெரும் பாணாற்றுப்படையும் மேற் கூறிய திருமுருகாற்றுப்படை, நெடு நல்வாடை, மதுரைக்காஞ்சி, முல்லைப்பாட்டு ஆகிய நான்கு பாட்டுக்களும் எழுதப்பட்ட காலத்திலாவது அவைகளுக்குச்சற்றுப் பின்னாவது எழுதப்பட்டிருத்தல் வேண்டும். குறிஞ்சிப்பாட்டுப் பாடிய கபிலரும் பெரும் பேகனைப் புறநானூறு 143-வது பாட்டில் பாடியிருப்பதால் அவரும் 'கரிகாற் பெருவளத்தான் காலத்திலாதல் அவன் தந்தையின் காலத்திலாதல் இருந்திருக்கவேண்டும். ஆகவே, கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டும்' திருமுருகாற்றுப்படை முதலிய பாட்டுக்கள் பாடப்பட்ட காலத்தே பாடப்பட்டதாகும்.

சிறுபாணாற்றுப்படை 48-முதல் 50-வரையுள்ள வரிகளில்,

'வடபுல விமயத்து வாங்குவிற் பொறித்த
வெழுவுறழ் திணிதோ ளியறேர்க்குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே'

என்று அக்காலத்து மிகச்சிறப்புப் பெற்றிருந்த செங்குட்டுவனைவிடக் கொடையில் ஏறுமானாட்டு நல்லியக்கோடன் மேம்பட்டவனென்று பொருள்படச்சொல்லியிருப்பதாலும், செங்குட்டுவன் அக்காலத்து உயிருடனிருந்தால் அன்றி அவ்விதஞ் சொல்லவேண்டியதில்லை யாதலாலும் சிறுபாணாற்றுப்படை பாடிய நல்லூர் நத்தத்தனார் செங்குட்டுவன் காலத்தவராவர். அச்செங்குட்டுவன் கரிகாற்பெருவளத்தான் காலத்தவனென்பது சிலப்பதிகாரத்தால் தெரியவருகின்றது. ஆகவே நத்தத்தனாரால் பாடப்பெற்ற நல்லியக்கோடன் கரிகாற் பெருவளத்தான் காலத்தவனென்று பெறப்படும். மேலும் சிறுபாணாற்றுப்படை 84-முதல் 115-வரையுள்ள அடிகளில் கடையெழு வள்ளல்களுக்குப்பின் அவர்கள் செய்துவந்த பரிசிலருக்கு ஈயும் தொழிலை நல்லியக்கோடனே பூண்டுளானென்னும் பொருள்படக்கூறியிருத்தலால் நல்லியக்கோடன் கடையெழுவள்ளல்களின் காலத்துக்குச் சற்றுப் பிந்தியவனாயிருக்கவேண்டும். புறநானூற்றிலிருந்து கடையெழு வள்ளல்களும் அநேகமாக ஒரேகாலத்தில் இருந்தவர்களென்று தெரிவதால் அவர்களைப் பாடிய கபிலர் முதலியவர்களுக்குச் சற்றுப் பின்னர் நல்லூர் நத்தத்தனார் இருந்திருக்கவேண்டும், அதாவது அவர் தலையானங்காலத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்துக்குச் சற்றுப் பிந்தியவராவர். ஆகையால் சிறுபாணாற்றுப்படை மேற்சொன்ன எட்டுப்பாட்டுக்களும் பாடப்பட்ட காலத்தை அடுத்தே பாடப்பட்டதாகும்.

பெருங்கௌசிகனார் மலைபடுகடாமில் பாடிய நன்னன், புறநானூறு 151-வது பாட்டினால் அதிற் சொல்லப்பட்ட இளவச்சிரக்கோவின்குலத்து முன்னோன் என்று தெரிகிறது. மேலும் அந்தப்பாட்டில் பெருந்தலைச் சாத்தனார்,

'.......................... ..............பொலந்தேர்
நன்னன் மருகனன்றியு நீயு
முயங்கற் கொத்தனை......................'

என்று கூறியிருப்பதால் நன்னன்காலம் இளவச்சேரக்கோ காலத்துக்குச்சற்று மூந்தியது மென்றுந் தோன்றுகிறது. பெருந்தலைச் சாத்தனரால் புறநானூறு 166-வது பாட்டில் பாடப்பட்ட குமணனையே பெருஞ்சித்திரனர் என்னும் புலவரும் புறநானூறு 158-முதலாகப் பலபாட்டுக்களில் பாடியிருக்கிறர். 158-வது பாட்டில் கடையெழுவள்ளல்களுக்குப் பின் பரிசிலருக்கு உதவி அவர்கள் வருத்தம் தீர்க்கும் தொழிலைக் குமணனே ஒப்புக்கொண்டுள்ளானென்று பொருள்பட,

> 'எழுவர் மாய்ந்த பின்றை யழிவரப்
> பாடி வருநரும் பிறருங் கூடி
> யிரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவ
> ணுள்ளி வந்தனன் யானே'

என்று பாடியிருத்தலால், பாடப்பட்ட குமணனும் அவனைப்பாடிய பெருந்தலைச் சாத்தனரும் பெருஞ்சித்திரனரும் கடையெழுவள்ளல்களில் இருவராகிய பெரும்பேகன் வட்டாற்றெழினியாதன் இவர்கள் காலத்துக்குச் சற்றுப் பின்னர் இருந்திருக்கவேண்டும். ஆகையால் பெருந்தலைச் சாத்தனர் பாடிய இளவச்சிரக்கோவின்முன்னேன் நன்னனும் அவனைப்பாடிய பெருங்கௌசிகனும் கடையெழுவள்ளல்களின் காலத்தவராதல் அல்லது அதற்குச் சற்று முந்தியகாலத்தினராதல் வேண்டும் மலைபடுகடாமும் திருமுருகாற்றுப்படை பாடப்பட்ட காலத்தாவது அதற்குச் சற்று முந்தியாவது பாடப்பட்டிருக்க வேண்டும்.

மேற்சொன்ன காரணங்களால், பாட்டெனத் தொகுக்கப்பட்ட பத்துப் பாட்டுக்களும் கடையெழுவள்ளல்களில் ஒருவனை பெரும்பேகன் காலத்துச்சிலவும் அவன் காலத்துக்குச் சற்றுமுந்திச் சிலவும் அவன் காலத்துக்குச் சற்று பிந்திச்சிலவுமாகப் பாடப்பட்டிருக்கவேண்டுமென்று ஏற்படுகின்றது. அதாவது அவைகளெல்லாம் ஒரு நூற்றாண்டுக்குள் எழுதப்பட்டிருக்கவேண்டும். ஆகையால் அவைகளையெல்லாம் ஒரேகாலத்து எழுதப்பட்டன என்று கொள்ளலாம்.

II. இனி இந்தப் பத்துப்பாட்டுக்களும் பாடப்பட்டகாலம் எது என்று ஆராய்வோமானல், அதுதான் உருவப்பஃறேரிளஞ்சேட்சென்னியும், கரிகாற்பெருவளத்தானும் சோழவரசர்களாகவும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாண்டியவரசனாகவும் செங்குட்டுவன் சேரவரசனாகவும் இருந்து அரசுபுரிந்தகாலமும் அதற்குச் சற்று முன்னும் பின்னுமான காலமும் என்று மேலேசொன்ன விஷயங்களால் வெளியாகின்றது. நமக்குக் கிடைத்திருக்கும் தமிழ்நூல்களிலிருந்து மேற்கூறிய சேரசோழ பாண்டியர்களுக்கு முன்னும் பின்னுமிருந்த சில தமிழ் அரசர்களைப்பற்றிய வரலாறும் நமக்குத்தெரிகிறது. மேற்சொன்னவரோடு அக்காலத்து ஒருவருக்குப்பின் ஒருவர் அரசாண்டவராக ஒன்பதுசேரர்களையும் எட்டுசோழர்களையும் எட்டுப் பாண்டியர்களையும் பற்றிநாம் கேள்விப்படுதலால், அவர்கள் ஆட்சி ஒருங்குசேர்த்துச் சுமார் 200-வருஷங்கள் நடந்திருக்கலாம். இங்

தக் காலத்துத்தான் கடையெழுவள்ளல்களும், குமணன், நல்லியக்கோடன், ஆய் முதலிய சிற்றரசர்களும் இருந்தது. இக்காலத்துத்தான் எட்டுத் தொகையுள் அடங்கிய பாக்களில் பெரும்பான்மையும், பத்துப்பாட்டும், சிலப்பதிகாரம் மணிமேகலையும் எழுதப்பட்டது. திருக்குறள் இக்காலத்துக்குக் கொஞ்சம் முன்னர் எழுதப்பட்டிருக்கவேண்டும். இந்தகாலத்துத்தான் நக்கீரர், கபிலர், பரணர், ஔவையார், மாங்குடிமருதனர், சீத்தலைச் சாத்தனர், இளங்கோவடிகள் முதலிய பெரும் புலவர்கள் இருந்தது. ஆகவே, தமிழ்மொழியின் உயர்நிலை இக்காலமேயாம்.

இங்ஙனம் தமிழ் உயர்நிலை யடைந்திருந்தகாலமானது நம் தமிழ்நாட்டிற் கோரணிகலம் போலவிருந்து பலரும் வருந்தச் சிலகாலத்துக்கு முன் இறந்துபோன ஸ்ரீமான் V. கனகசபைப் பிள்ளையவர்களால் வரையறுக்கப் பட்டிருக்கிறது. சேரன் செங்குட்டுவன் பத்தினிக்கடவுளாகிய கண்ணகிக்குக் கட்டிய பிரதிஷ்டைசெய்வித்த கோயிலில் இலங்கைத்தீவின் அரசனை கயவாகு வென்பான் வந்து தொழுததாகச் சொல்லப்பட்டிருப்பதால் செங்குட்டுவன் காலமும் அக்கயவாகுவின் காலமும் ஒன்றாதல்வேண்டும். இலங்கைத்தீவில் இரண்டு கயவாகுக்கள் இருந்திருக்கிறார்கள் அவர்களில் முந்தியவன் கி. பி. இரண்டாவது நூற்றாண்டிலும் பிந்தியவன் கி. பி. பன்னிரண்டாவது நூற்றாண்டிலும் இருந்ததாக இலங்கைத்தீவின் சரித்திரங்களுள் ஒன்றாகிய மகாவம்சத்தினால் தெரிகிறது. ஸ்ரீ V. கனகசபைப் பிள்ளையவர்கள் சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்ட கயவாகு முந்தியவன்றான் என்று வேண்டிய ஆதாரங்களைக்காட்டி தமது நூலில் விளக்கியுள்ளார். ஆகவே நம் தமிழ்ப் பாஷையானது உயர்நிலையடைந்த காலம் அந்தக்கயவாகுவோடு ஒரேகாலத்தவனான செங்குட்டுவன் காலமும் அதற்கு முன்னும் பின்னுமாக கி. பி. முதல் நூற்றாண்டின் பிற்பாகத்திலிருந்து கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் கடைப்பாகம்வரையுள்ள இருநூறுவருஷங்கள் என்று கொள்ளககிடககிறது. இக்காலவரையுள் தான், பத்துப்பாட்டும் பாடப்பெற்றன.

ஸ்ரீ. V. கனகசபைப் பிள்ளையவர்களும் அவருக்குப் பின் ஸ்ரீ. S. கிருஷ்ணசாமி ஐயங்காரவர்களும் பத்துப்பாட்டு முதலிய நூல்கள் எழுதப் பட்ட காலம் இதுதானென்று விஸ்தாரமாகப் பிரமாணங்கள் காட்டியெழுதியும் கவர்ன்மெண்ட் எபிகிராபிஸ்ட் ஸ்ரீ V. வெங்கய்யா அவர்கள் அதை ஒத்துக்கொண்டிருந்தும், நம்நாட்டின் நாகரீகத்தின் பழமையையும் நம்பாஷையின் நிலைமையையும் நம் நூல்களின் பெருமையையும் அறிய மாட்டாத சென்னை ஐகோர்ட்டு ஜட்ஜாக இருந்த ஜே. இன்ஸ்துரை (Mr J. Inns) உள்ளிட்ட சிலர் நக்கீரர் முதலிய நல்லிசைப்புலவர் இருந்தது கி பி. 12-வது நூற்றாண்டாக இருக்கவேண்டுமென்று வாதாடுகிறார்கள். அவர்கள் சொல்லுவது நமக்குத்தமிழ் நூல்கள் மூலமாகவும் செம்புப்பட்டய சிலாசாசன மூலங்களாகவும் தெரிந்திருக்கும் விஷயங்களுக்கு மாறாயிருப்பதால் சரியல்ல வென்று காட்டுவது மிக எளிது.

நம் பழந்தமிழ் நூல்களினால் அவைகள் எழுதப்பட்ட காலத்து இருந்த அரசர்கள் யாவரென்று தெரிகின்றது. யான் ஆராய்ந்த மட்டில், நம் தமிழுக்குத் தெரிந்தமுதல் அரசன் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன். இவன் பாரதப்போரின்போது 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்த' தாகச்சொல்லப்பட்டிருக்கிறது. அவனுக்குப்பின் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி யென்ற பாண்டியன் அநேக சிற்றரசரை வென்று தன் இராஜ்யத்தைப் பரவச்செய்ததாகவும் இவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் முன்னோன் என்றும் புறநானூற்றாலும் மதுரைக்காஞ்சியாலும் தெரிகிறது. சிலாசாசனங்களிலும் இவன் பெயர் பாண்டிய வரசர்களின் முன்னோனாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இவன் எப்போதிருந்தானென்று தெரியவில்லை. இவன் காலத்துக்கு ஒன்று அல்லது இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்னே அரசாண்ட ஒன்பது சேரர்களையும் எட்டுச்சோழர்களையும் எட்டுப்பாண்டியர்களையும் பற்றி, நான் முன்கூறியபடி கொஞ்சம்விரிவாக நமக்குத்தெரிய வருகிறது. இக்காலத்துத்தான் பத்துப்பாட்டு முதலிய நூல்கள் எழுதப்பட்டனவாக மேலே சொல்லியிருக்கின்றேன். இவர்கள் காலத்துக்குப் பின்னே கோப்பெருஞ்சோழனும் அவனுக்குப்பின்னே சோழன் கோச்செங்கண்ணானும் சேரமான் கணைக்காலிரும்பொறையும் இருந்திருக்கிறார்கள் புறநானூறு முதலிய நூல்களைப்பார்க்கும்போது நான் மேலே பத்துப்பாட்டின் காலமென்று சொன்ன காலத்திலிருந்த சோழர்களில் கடைசியானவனான இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் காலத்துக்கும் கோச்செங்கண்ணான் காலத்துக்கும் இடையே குறைந்தது ஒரு நூற்றாண்டு வித்தியாசமிருக்கலாமென்று தோன்றுகிறது. சிலாசாசனங்களநேகத்தில் சோழவம்சத்தில் பழமையான அரசர்களில் கரிகாற்பெருவளத்தானை முன்னும் கோச்செங்கண்ணானைப் பின்னும் அரசாண்டதாக எழுதப்பட்டிருக்கிறது. இந்தக் கோச்செங்கண்ணான் பெரிய சிவபக்தனாக இருந்து கோயில்கள்கட்டுவித்தான். இவன் பக்தியை வியந்து திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவானைக்காவில் பாடிய பாசுரத்தில்,

> 'செங்கட்பெயர் கொண்டவன் செம்பியர்கோ
> னங்கட்கருணை பெரிதாயவனே'

(இராமசுவாமிபிள்ளை பதிப்பு பக்கம் 3143)

என்று பாடியுள்ளார் நம் தமிழ் நூல்களின் சரித்திரத்துக்கு மூல புருஷராகச்சொல்லக்கூடிய, சில வருஷங்களுக்கு முன் காலஞ்சென்ற, ஸ்ரீ. சுந்தரம்பிள்ளையவர்கள் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் காலம் 6-வது நூற்றாண்டின் கடைசிப்பாகம் என்று நிரூபித்துள்ளார். மேலெடுத்துக்காட்டிய பாசுரத்திலிருந்து கோச்செங்கண்ணான் நம் சுவாமிகள் காலத்துக்குக் கொஞ்சம் முந்தியிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. ஆகையால் கோச்செங்கண்ணான் காலம் நாலாம் நூற்றாண்டின் கடைசியாகவாவது ஐந்தாவது நூற்றாண்டின் ஆரம்பமாகவாவது இருக்கலாம். அப்படியிருந்தால் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியின் காலம் மூன்றாம் நூற்றாண்டின் கடைசிப்பாகமாக

இருக்கவேண்டும். நான் மேலே பத்துப்பாட்டின் காலமென்று சொன்னதில் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்கு முன் ஏழு சோழவரசர்கள் இருப்பதால் எட்டு அரசர்களுக்குமாக இருநூறு வருஷங்கள் வைத்துக்கொண்டால் பத்துப்பாட்டின் காலவாரம்பம் முதல் நூற்றூண்டின் கடைசிப்பாக மாகும். அந்த எட்டுச்சோழர்களில் நாலாவதவனான கரிகாற் பெருவளத்தான் காலம் இரண்டாம் நூற்றூண்டின் மத்திய பாகமாக இருக்கலாம். அதாவது இலங்கையில் முதல் கயவாகு இருந்த காலம்

இஃதன்றி, அக்காலத்து மதங்களின் நிலைமைகளையும் மற்றும நமகருத் தமிழ் நூல்கள் மூலமாகத் தெரிந்திருக்கும் சரித்திர விஷயங்களையும் ஆராய்ந்தாலும் அது நான் மேலே சொன்ன காலவரையறையை உறுதிப்படுத்துவதாகும் நம்முடைய பெரிய புராணம் 1063-முதல் 1112-வரை அரசாண்ட அனபாயனென்றும் இராஜகேசரிவர்மனென்றும் பெயருள்ள முதலாவது குலோத்துங்கன் காலத்து எழுதப்பட்டிருக்கிறது. நம்முடைய சைவத்திருமுறைகள் 10-வது நூற்றூண்டில் தொகுக்கப்பட்டிருக்கின்றன. சுந்தரமூர்த்தி சுவாமிகள் 8-வது நூற்றூண்டிலும் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளும் அவரோடு ஒரு காலத்தவரான திருநாவுக்கரசு சுவாமிகளும் 6-வது நூற்றூண்டின் பிற்பாதியிலும் இருந்திருக்கிறூர்கள். மாணிக்கவாசக சுவாமிகள், அவர்கள் காலத்துக்கு முந்தியோ பிந்தியோ, 10-வது நூற்றூண்டிற்கு முன் இருந்திருக்கிறூர். இவர்களைச் சார்ந்தும் பெயர்ந்தும் அநேகஞ் சிவபக்தர்கள் தேசமெங்கும் பரவியிருந்திருந்தார்களென்பது நம் சமயாச்சாரியர்கள் பாசுரங்களினுலும் பெரிய புராணத்தாலும தெரிகிறது. 10—வது நூற்றூண்டிலேயே தேவாரப்பதிகங்கள் சிவாலயங்களில் பாடும்படி ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. தேவார திருவாசகங்களைப் பார்க்கும்போது எங்கு பார்த்தாலும் சிவாலயங்கள் கட்டப்பட்டிருந்ததாகவும் அக்காலத்தே கோயில்கள் ஏறக்குறையப் பழமை யடைந்திருக்கலாமென்றும் தோன்றுகிறது. இம்மாதிரியாக, வைஷ்ணவ ஆழ்வார்கள் பலர் 8, 9-வது நூற்றூண்டுகளில் இருந்திருக்கிறூர்கள். 11—வது நூற்றூண்டிலிருந்து வைஷ்ணவாலயங்களில் நாலாயிரப்பிரபந்தப் பாசுரங்கள் பாட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. நாலாயிரப்பிரபந்தத்திலிருந்தும் ஆழ்வார்கள் காலத்து வைஷ்ணவம் அதிகமாகத் தமிழ் நாட்டில் பரவியிருந்த தாகவும் வைஷ்ணவக் கோயில்களும் அநேகம் இருந்ததாகவும் அறிகிறேம். ஆகையால், 6—வது நூற்றூண்டு ஆரம்பத்திலிருந்தாவது சைவவைஷ்ணவங்கள் ஜனங்கள் பெரும்பாலாரால் தழுவப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. கோச்செங்கண்ணன் காலத்தே சைவம் தலையெடுக்க ஆரம்பித்து விட்டது என்று சொல்லலாம். இதைவிட்டு நாம் மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய நூல்களைப் பார்ப்போமானுல் அவைகள் எழுதப்பட்டகாலத்து அதிகமாகப்பரவி யிருந்த மதம் பௌத்தமென்றும் சைவவைஷ்ணவமதங்கள் மிக அருகின நிலைமையிலிருந்தனவென்றும் இந்திரன், முருகன் முதலிய தெய்வங்களுக்குத்தான் கோயில்கள் கட்டப்பட்டிருந்தன வென்றும் விழாக்கள் கொண்டாடப்பட்டனவென்றும்

தெரிகிறது. பிற்காலத்து இந்திரன் பெயர்தானும் சொல்வாரில்லாமல் போயிற்று. முருகனுக்கு அக்காலத்திருந்த பெருமையில் இப்போது ஒரு சிறுபாகமே எஞ்சியிருக்கிறது. திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் காலத்திலேயே இந்திரனை வழிபடுதல் அநேகமாக நின்று விட்டதென்று சொல்லலாம். கி. பி. 1005-வது வருஷத்தில் பௌத்தப்பள்ளி யொன்றுக்கு நாகபட்டணத்தில் ஒரு இனும் கொடுக்கப்பட்டிருந்தாலும் 6-வது நூற்றாண்டிலேயே பௌத்த மதம் குன்றி 7, 8-வது நூற்றாண்டுகளில் பௌத்த மதம் தனிமதமாகத் தமிழ் நாட்டில் தலைகாட்டாது ஒழிந்திருக்கவேண்டுமென்றும் அதற்குப்பின் சிற் சில இடங்களில் மட்டும் பௌத்தப்பள்ளிகள் வெகு சிலரால் ஆதரிக்கப்பட்டு வந்திருக்கவேண்டுமென்றும் காணப்படுகின்றது. ஆனால் திருஞானசம்பந்த சுவாமிகள் காலத்துப் பௌத்த மதம் கொஞ்சம் பலம் கொண்டிருந்த தென்பதற்கு அவர் பாசுரங்களில் பௌத்தர்களையும் அவர்கள் கொள்கைகளையும் பற்றி அவர் சொல்லியிருப்பவைகளே சான்றாகும். ஆகையினாலே பௌத்த மதமானது கோச்செங்கண்ணான் காலத்தே சீர் குன்ற ஆரம்பித்து திருஞானசம்பந்த சுவாமிகள் காலத்துப் பங்கப்பட்டு பின்னொன்றிரண்டு நூற்றாண்டுகளில் மீதியிருந்த செல்வாக்கும் இழந்து ஜனங்களால் கைவிடப்பட்டதாகச்சொல்லலாம். மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் எழுதப்பட்ட காலத்து பௌத்த மதம் மிகப்பரவி உயர் நிலைபெற்றிருந்ததைப்பார்த்தால் அது தன்னிலைத் தவறி செல்வாக்குக்குறைய ஆரம்பித்தது 2, 3, நூற்றாண்டுகளுக்கேனும் பின்னரேயாகவேண்டும். ஆகையினாலே பௌத்த மதம் அழிய ஆரம்பித்தது 6-வது நூற்றாண்டென்று வைத்துக்கொண்டபோதிலும் மணிமேகலை முதலிய நூல்கள் 3-வது நூற்றாண்டு அல்லது அதற்கு முன்னர்தான் எழுதப்பட்டிருக்கவேண்டும்.

வீரசோழிய உரையாசிரியர் நூலாசிரியரான புத்தமித்திரரின் மாணாக்கரென்று சொல்லப்படுகின்றார். வீரசோழிய உரையில் சேர்ப்பம், கூடல் சங்கமம் என்னும் இரண்டிடங்களில் வெற்றிபெற்ற சோழனைப் புகழ்ந்து பாடப்பட்ட பாட்டுக்கள் உதாரணமாக எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. சேர்ப்பம், கூடல்சங்கமம் இரண்டிடத்திலும் வெற்றிபெற்ற சோழன் கி. பி. 1064-முதல் 1070-வரை அரசாண்ட வீர ராஜேந்திர சோழன். அவன்தான் புத்தமித்திரருக்கு உதவிபுரிந்தவன். ஆகையால் வீரசோழிய உரை 11-வது நூற்றாண்டின் கடைசியில் எழுதப்பட்டிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. அந்த உரையில் எட்டுத்தொகை முதலிய நூல்களிலிருந்து உதாரணச் செய்யுட்கள் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. மேலும் கி. பி. 1063-முதல் 1112-வரை அரசாண்ட முதலாவது குலோத்துங்கன் காலத்து ஜயங்கொண்டாரால் பாடப்பட்ட கலிங்கத்துப் பரணியில்

'.........................................தழுவு
செந்தமிழ்ப் பரிசுவாணர் பொன்
பத்தொடாறு நூறாயிரம் பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்'

என்று குலோத்துங்கன் குலத்தில் வெகுகாலத்துக்கு முந்தியவனுகக் கரிகாற்பெருவளத்தானைப் பற்றிச் சொல்லும்போது சொல்லியிருக்கிறது. இப்படியிருந்தும் பத்துப்பாட்டாதிய நூல்கள் 12-வது நூற்றுண்டில் எழுதப்பட்டிருக்கலாமென்று வாதிப்பார் வாதம் எத்தன்மை என்னலாம்?

7-வது நூற்றுண்டுமுதல் 13-வது நூற்றுண்டுவரையும் தமிழ் நாட்டின் சரித்திரம் அநேகமாக ஸ்ரீ V. வெங்கய்யா அவர்கள் நன்முயற்சியால் நமக்கு இப்போது கிடைத்திருக்கிறது. 7, 8, நூற்றுண்டுகளில் சோழராஜ்யமானது வடபாதி பல்லவ அரசர்களாலும் தென்பாதி பாண்டியர்களாலும் ஆக்கிரமிக்கப்பட்டு, 9-வது நூற்றுண்டில் விஜயாலயன் அரசுபுரிய ஆரம்பித்த காலம்வரையும், சோழர்கள் வலிகுன்றி பெயர்கெட்டு இருந்தார்கள். 9-வது நூற்றுண்டுக்குப்பின் அவர்கள் பல்லவமன்னரைத் தோற்கடித்து அவர்களை வடக்கே துரத்தினுர்கள்: பாண்டியர்களிடமிருந்தும் பூமிகளைக் கவர ஆரம்பித்தனர். சோழர்கள் பலம் அதிகரிக்கவே பல்லவர்கள் நாசமடைந்தனர், பாண்டியர்களும் வலிகுன்றினர். கி. பி. 1063–முதல் 1112–வரை அரசாண்ட குலோத்துங்கன் காலத்துத்தான் சோழராஜ்யம் உயர்நிலைபெற்றது. 11-வது நூற்றுண்டில் பாண்டியதேசத்தின் ஓர்பாகம் சோழபாண்டியர்களென்று பெயர் வைத்துக்கொண்டு அரசாட்சி புரிந்த சோழவரசகுலத்தவர்களால் ஆளப்பட்டது. கொங்கு கேரள ராஜ்யங்களின் பாகங்களும் சோழ இளவரசர்களால் ஆளப்பட்டன. ஆனுல் 12–வது நூற்றுண்டின் கடைசிப்பாகத்திலிருந்து சோழர்களுடைய பலமும் குன்றிப்போய்விட்டது.//12–வது நூற்றுண்டின் பிற்பாகத்தில் பாண்டிய ராஜ்யத்தில் இரண்டு அரசிளங்குமரர்க்குள் யார் சிம்மாசன மேறுவதென விரோதமுண்டாய் அவருள் ஒருவன் இலங்கைத்தீவின் மன்னனுன பராக்கிரமபாகுவின் உதவிபெற்றும் பெரும்பாரதப் போர் செய்துகொண்டனர். முதலில் இலங்கை வீரர் ஜயம்பெற்றும் பின்னர் காரியசித்தியடையாமல் ஊர்போய்ச் சேர்ந்தார்கள்.//சேரர்கள் ஆரம்பத்திலேயே தங்கள் நாடெல்லாம் மராட்டகுலவரசர்களாலும் சோழர்களாலும் மற்றும் பின்வந்த அரசர்களாலும் கவரப்பெற்று அவர்கள் சிற்றரசர்களாக ஒடுங்கிப் பின்னர் அவர்கள் குலம் இருந்த இடமும் தெரியாமல் மறைந்துவிட்டார்கள். 8, 9, நூற்றுண்டுகளுக்குப் பின் அவர்களைப்பற்றி நமக்கொன்றும் தெரியாது. பின்காலத்தில் சில சிற்றரசர்கள் சேரகுலத்தவர்களென்று சொல்லிக்கொள்வதை மாத்திரம் பார்க்கிறோம். உதாரணமாகத் தகடூரிலிருந்த எழினி வம்சத்தவனுன அதியமான் என்பவன் சேரகுலத்தவனென்று சொல்லிக்கொள்கிறுன். ஆனுல் பதிற்றுப்பத்திலிருந்து சேரனொருவன் அதியமானின் ஊராகிய தகடூரை அழித்து அது காரணமாகத் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையென்று பெயர்பெற்றிருப்பதாய் நாம் அறிவதால் அதியமான்கள் சேரகுலத்தவர்களாக இருக்கமாட்டார்களென்று யூகிக்கவும் இடம் உண்டு. மேலும், 7-வது நூற்றுண்டுக்கு முன்னிருந்தே தமிழ் நாடுமுழுவதும் சில ராஜவம்சங்களால் முழுதும் அடக்கப்பட்டு அவர்களால் நேராகவும் பிரதிநிதிகள் மூலமா

கவும் ஆளப்பட்டுவந்தது. அதற்குப்பின் அவர்களுக்குட்படாத சிற்றரசர்கள் இருக்க இடமில்லை. //13-வது நூற்றாண்டிலிருந்தே மகம்மதியர்களும் விஜயநகரவரசர்களும் தெற்கே ஆதிக்கம்பெற்றுத் தங்கள் தளகர்த்தர்களைத் தங்கள் பிரதிநிதிகளாகவைத்து அரசாளத்தொடங்கிவிட்டார்கள். இதுதான் நமக்குத் தெரிந்தபடி 7-வது நூற்றாண்டுமுதல் 13-வது நூற்றாண்டுவரைத் தமிழ்நாட்டுச் சரித்திரம்.

பத்துப்பாட்டாதிய நூல்கள் பிற்காலத்து எழுதப்பட்டிருப்பின் மேற்கூறிய விஷயங்களைக் குறித்திருக்கவேண்டுமே. அப்படியொன்றுங்காணோம்? அதைவிட்டு அவைகளில் தமிழ் நாட்டின் சரித்திரம் வேறு விதமாகக்காணப்படுகிறது. அக்காலத்துச் சேரர்கள் வெகு பராக்கிரமசாலிகளாக இருந்ததுமன்றி அவர்கள் ராஜ்யம் வெகுகாலம் பரவியிருந்தது. செங்குட்டுவன் பத்தினிக்கடவுளுக்குக் கோயில்கட்டிப் பிரதிஷ்டைசெய்தபோது வடக்கே வெகுதூரஞ்சென்று ஆரிய அரசர்களைவென்று கங்கை நீரும் நடுகல்லும் கொண்டு வந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவன் தகப்பனான இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆற்றலை அவன் பெயரோடு அடைமொழியாகச் சேர்க்கப்பட்டிருக்கும் 'இமயவரம்பன்' என்பதே காட்டும். செங்குட்டுவனுக்குப் பின்வந்த சேரர்களும் அவனைப்போலவே பராக்கிரமமுடையவர்களாக இருந்தார்கள். சேரர்களெல்லாருமே புலவர்களிடம் அன்பு பூண்டு அவர்களைப் போற்றிவந்தார்கள். சேரர்களின் பராக்கிரமத்தையும் அவர்கள் ராஜ்யம் அக்காலத்துச் சிறப்புற்றிருந்ததையும் அவர்கள் புலவர்களை ஆதரித்ததையும் காட்ட அவர்கள் வம்சஅரசர்களைப்பற்றிப் பாடியபாக்கள்மாத்திரம் ஒருதொகை நூலாக தொகுக்கக்கூடியதாக இருந்ததே தகுந்த சான்றாகும். சேரர்கள் இம்மாதிரி பிரபல்யம் மிக்கவர்களாக இருந்தாலும் மற்ற அரசர்களும் பராக்கிரமமும் பெருந்தன்மையும் உள்ளவர்களாக இருந்தார்கள். கரிகாற் பெருவளத்தான் இமயமலைவரைச்சென்று தன் வெற்றிக்கொடி நாட்டியவன். பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனும் உக்கிரப்பெருவழுதியும் தங்கள் காலத்திலிருந்த மற்ற அரசர்களுக்கு எவ்விதத்திலும் குறைந்தவர்களல்லர். அக்காலத்தில்பெரிய அரசர்களெல்லாம் வடக்கேவெகுதூரம் சென்று அவ்விடமிருந்த ஆரியமன்னரிடம் திறைபெற்றுவந்தனர். அவர்கள் காலத்துக்குப்பின் தமிழ் நாட்டரசர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொள்வதன்றிப் பிற நாடுகளுக்குப் படையெடுத்துச் சென்றதாகத் தெரியவில்லை. அக்காலத்து சேரசோழ பாண்டியர்களல்லாமல் அநேக சிற்றரசர்கள் இவர்களுக்குக் கீழ்ப்பட்டவராயன்றிச் சுயஆட்சி செய்து மிருந்திருக்கிறார்கள். அவர்களுள் பெரும் பேகன் சேரசோழ பாண்டியர்க்குச் சமமான பலமும், பராக்கிரமும் அதிகமான குணமும் உள்ளவனாக இருந்தான். பிற்காலங்களில் பிரபல மடைந்த பல்லவர், மராட்டர், ஆய்சாலர் முதலியவர்களின் பெயரையும் பத்துப்பாட்டாதிய நூல்களில் காணோம். ஆகையால் பத்துப்பாட்டாதியநூல்கள் எழுதப்பட்டகாலம் 7-வது நூற்றாண்டுக்கு வெகு காலத்துக்கு முந்தியிருக்கவேண்டுமென்று தோன்றவில்லையா ?

இன்னிஸ் துரையவர்கள் பத்துப்பாட்டாதியவற்றின் காலம் சுந்தர மூர்த்தி சுவாமிகளின் காலத்துக்கு முந்தியதானால் அவர் திருத்தொண்டத் தொகையில் நக்கீரனார், திருவள்ளுவர் முதலியவர்களைக் கூறாமல்விட்டதன் காரணமென்னவென்று கேட்கிறார். திருத்தொண்டத்தொகையில் சிவபக்தர் களின் பெயர்கள்மாத்திரம் கண்டிருக்கிறதேயன்றி பெரிய வித்வான்களின் பெயர் காணவில்லை. திருவள்ளுவர் இன்னமதத்தினரென்று இப்போதும் சொல்லக்கூடாமல் ஒவ்வொரு மதத்தினரும் தத்தம் மதத்தினர் என்று இவரைக்கொண்டாடக்கூடியதாக இருக்க அவரைச் சிவபக்தராக வேன்கூற வில்லையென்று கேட்டாலெப்படி? நக்கீரர் பிற்காலத்துச் சிவபக்தராக நினைக்கப்பட்டு அவர் பாடிய திருமுருகாற்றுப்படை சைவத்திருமுறைக ளில் இடம்பெறினும் அவர் குமரக்கடவுள் பக்தரேயன்றிச் சிவபக்தரல்லர். அவர் சோமசுந்தரக்கடவுள் பாட்டில் குற்றங்கண்டுபிடித்து 'நெற்றிக்கண் திறப்பினும் குற்றங்குற்றமே' என்று கூறியதும் ஞாபகத்துக்கு வரலாம். ஆகையால் திருவள்ளுவர் பெயரும் நக்கீரர்பெயரும் திருத்தொண்டத்தொ கையில் இடம்பெறாததாலேயே அவர்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத் துக்குப் பிந்தியவர்களாகத்தான் இருக்கவேண்டுமென்று சொல்ல இசை யாது.

எல்லாவிஷயங்களையும் யோசிக்கும்போது நான் மேலே சொன்னபடி பத்துப்பாட்டாதிய நூல்களின் காலம் கி. பி முதல் நூற்றாண்டின் கடைசி யிலிருந்து மூன்றாம் நூற்றாண்டின் கடைசிவரையாகத்தான் இருக்கவேண்டு மென்று உறுதிப்படுகின்றது.

III. பத்துப்பாட்டுத் தொகுக்கப்பட்ட காலம் எதுவென்று நாமிப்போது அறிந்து கொள்ளுவதற்கு வேண்டிய சாதனங்கள் நமக்குக்கிடைத்ததில் பத் துப்பாட்டின் காலத்தனவாகச் சொல்லக்கூடிய எட்டுத்தொகைகளில் ஐங்குறு நூறு யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை காலத்துத்தொகுக்கப் பட்டதாகச் சொல்லப்பட்டிருப்பதால் அவை எழுதப்பட்ட காலத்துக்கு அடுத் தே தொகுக்கப்பட்டிருக்க வேண்டும். பதிற்றுப்பத்தில் முதற் பத்தும் கடைப்பத்தும் களைந்து போனமையால் அது எப்போது தொகுக்கப்பட்ட தென்று சொல்லக்கூடவில்லை. கலித்தொகையை நல்லந்துவனார் தொகுத்த வரோ இயற்றியவரோ? நமக்குத்தெரிய வில்லை. ஆதலால் இதைப்பற்றியும் இப்போது பேசுதற்கு இடமில்லை. பரிபாடலைப்பற்றி நமக்கு அதிகமாகத் தெரிந்திருக்கவில்லை. மற்றத்தொகை நூல்களாகிய அகநானூறு,புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நான்கிலும் அவைகள் 400-பாட்டுக்கள் ஒவ் வொன்றிலும் சேர்த்துத்தொகுக்கப்பட்ட பின் பாரதம் பாடிய பெருந்தேவ னாரால் கடவுள்வணக்கம் பாடிச்சேர்க்கப்பட்டிருப்பதால், அவைகள் அவர் கா லத்துக்கு முன் தொகுக்கப்பட்டிருக்க வேண்டுமென்று மாத்திரம் தெரிகி றது. பெருந்தேவனார் தெள்ளாற்றில் போர்வென்ற நந்தி போத்தராயனைப் புகழ்ந்திருக்கிறார். கி. பி. 733-முதல் 746-வரை அரசாண்ட இரண்டாவது விக்ரமாதித்தன் காலத்தவனான நந்திவர்மன் பல்லவன் தெள்ளாற்றில்

வெற்றி பெற்றவனும் நந்திகலம் பகம் கொண்டவனுமாக இருப்பவன்; அவனே நந்தி போத்தராயராக இருக்கலாமென்று ஸ்ரீ. V. வெங்கய்யா அவர்கள் யூகிக்கின்றார். அப்படியாயின், பெருந்தேவனார் 8-வது நூற்றாண்டின் மத்திய பாகத்தவராகிறார். ஆகவே, மேற்சொன்ன தொகை நூல்கள் 8-வது நூற்றாண்டின் மத்திய பாகத்துக்கு முன்னே தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று அறிகிறோம். குறுந்தொகை பூரிக்கோ என்னும் அரசன் காலத்துத்தொகுக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது ஆனால் பூரிக்கோ என்பவன் யார், எப்போதிருந்தவனென்று இன்னும் தெரியாமையால் குறுந்தொகை தொகுக்கப்பட்ட காலமும் நிர்ணயிக்கக்கூடவில்லை. புறநானூற்றில் கோச்செங்கண்ணன் காலத்திய பாட்டு (புறநானூறு 74) ஒன்றிருப்பதாலும் நான் மேலே காட்டியபடி கோச்செங்கண்ணன் 4-வது நூற்றாண்டின் கடைசியில் அல்லது ஐந்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இருந்திருக்க வேண்டுமாகையால் புற நானூறு 4-வது நூற்றாண்டுக்குப்பின் தான் தொகுக்கப்பட்டிருக்கவேண்டும். ஆகவே எட்டுத்தொகைகளும் கி. பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து எட்டாம் நூற்றாண்டுக்குள்ளாகத் தொகுக்கப்பட்டிருக்கலாமென்று மட்டுஞ்சொல்லத்தக்கனவாகின்றன. பத்துப்பாட்டும் அதேகாலத்துக்குள் தொகுக்கப்பட்டிருக்க வேண்டுமென்று சொல்லலாமேயன்றி குறிப்பாக இன்னகாலத்தில் தொகுக்கப்பட்டது என்றுசொல்ல முடியாது. தொல்காப்பியமும் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் பதினெண் கீழ்க்கணக்கும் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் சங்கச்செய்யுட்களென வழங்கிவருகின்றன. இவைகளில் பெரும்பாலன நமது கைக்கு எளிதிற் கிடைக்கும் வண்ணம் பெரிதும் சிரமம் எடுத்துக்கொண்டு ஏடுகளைப்பரிசோதித்து அச்சிடுவித்ததற்காக, மகோ மகோ பாத்தியாயர் ஸ்ரீ. உ. வே. சாமிநாதய்யரவர்களிடத்தும் காலஞ்சென்ற ஸ்ரீமான். சி. தாமோதரம் பிள்ளையவர்களிடத்தும் நன்றிபாராட்டத் தமிழுலகம் கடமைப்பட்டுள்ளது. ஸ்ரீ. சாமிநாதய்யரவர்களுக்குக்கிடைத்து இன்னும் அச்சிடப்பெறாத அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, உதயணன் கதை ஆகிய நூல்களும் சீக்கிரம் வெளிப்படுத்தப்படின் உலகுக்கு மிக்க உபகாரமாகும். நம் நாட்டின் சரித்திரம் இப்போது தெரியாமலிருக்கும் பாகங்களில் சில தெரியக்கூடியதாகவு மிருக்கும். பொதுவாக நான் மேலே சொன்னபடி சங்கநூல்களென்று பத்துப்பாட்டாதியவற்றை வழங்கினாலும் சங்கமென்பது என்ன, அது எப்போது இருந்தது என்பன முதலியசரியாகத்தெரியாமலிருக்கிறது. சென்னைப்பிரசிடென்சி காலேஜில் சமஸ்கிருத வித்வானாக இருந்து இறந்துபோன ஸ்ரீ. சேஷகிரி சாஸ்திரியாரவர்கள் மதுரையில் தமிழ்ச்சங்கங்கள் இருந்ததாகச்சொல்வது தப்பென்று சொல்லிப்போயினார். ஸ்ரீ. திருமலைக்கொழுந்து பிள்ளையவர்கள் தாமெழுதிய மாணிக்கவாசகர்காலம் என்னும் புத்தகத்தில், தமிழ்நூல்களில் மதுரைச் சங்கங்களைப்பற்றிச் சொல்லியிருப்பவைகளை நிலை நிறுத்தக்காரணங் காட்டியுள்ளார். இது சம்பந்தமாய்ச் சிற்சில கட்டுரைகளும் அப்போதைக்கப்போது வெளிவந்துள்ளன. யானும் என் ஆராய்ச்சியிற் கண்டபடி விஷயங்களை இங்கு சுருக்கமாய்ச்சொல்லி இவ்வியாசத்தை முடிக்கின்றேன்.

நமக்கு முதல் முதலில் மதுரையில் தமிழ்ச் சங்கங்கள் இருந்ததாகத் தெரிவது இறையனாரகப் பொருள் உரையிலிருந்து. அவ்வுரையானது நக்கீரரால் சொல்லப்பட்டதாக சொல்லியிருப்பினும் அந்த உரை நாமிப்போது காண்கிறபடி ஏற்பட்ட நிலை நக்கீரர் காலத்துக்குக் குறைந்தது இரண்டு நூற்றாண்டுகளுக்குப்பின்னாக இருக்கவேண்டுமென்பது உரை வரலாறு கூறியிருப்பதிலிருந்தே தெரிகிறது. ஆகையால் நான் பத்துப்பாட்டின் காலமாக மேலே சொன்னதின் இறுதிப்பாகமாகிய மூன்றாம் நூற்றாண்டின் கடைசியிலாவது நான்காம் நூற்றாண்டின் ஆரம்பத்திலாவது நமக்குக் கிடைத்திருக்கும் இறையனாரகப் பொருளுரை இப்போதிருக்கிறபடி எழுதப்பட்டிருக்கவேண்டும். ஆகவே மதுரையில் மூன்று தமிழ்ச் சங்கங்கள் இருந்து தமிழாராய்ந்ததாக சொல்லும் செய்தி நாலாம் நூற்றாண்டு முதலாகவாவது பிரஸ்தாபத்தில் இருந்ததாகக்கொள்ள வேண்டியிருக்கிறது. அந்தக்காலம் மூன்றாம்சங்கத்திலிருந்து தமிழாராய்ந்ததாகச்சொல்லப்பட்டிருக்கும் நக்கீரரால் பெருங்குன்றூர் கிழார் முதலியவர்கள் காலத்துக்கு அடுத்ததும் அதனோடுதொடர்புடையதுமானதால் மூன்றாம்சங்கமிருந்து தமிழாராய்ந்ததாகச் சொல்லப்பட்டிருப்பது கட்டுக் கதையென்று ஒருவாற்றானும் சொல்ல இயலாது. ஆனால் முதல் இரண்டு சங்கங்கள் இருந்தனவாகச் சொல்லப்பட்டுள்ள வெகு காலத்துக்குப் பின்னர் இறையனாரகப் பொருளுரை தோன்றியிருப்பதால் அவைகளைப்பற்றி நாம் நிஷ்கரிஷையாக ஒன்றும் சொல்லக்கூடவில்லை, ஆயினும் மூன்றாம் சங்கத்திலிருந்தோர் முதலிரண்டு சங்கங்கள் இருந்தாலல்லாமல் தங்கள் சங்கத்தை மூன்றாம் சங்கமெனச்சொல்லுதல் அசம்பாவிதமாகையாலும் நக்கீரர் முதலிய மூன்றாம் சங்கத்தார் காலத்துக்கு அடுத்து இருநூறுவருஷங்களுக்குப்பின் இருந்தவரே நக்கீரர் சங்கத்தை மூன்றாவது சங்கமென்று சொல்லியிருப்பதால் முன்னும் முதலிரண்டு சங்கங்கள் இருந்திருக்கலாமென்றே தோன்றுகிறது. இறையனாரகப் பொருளுரையில் முச்சங்கங்களையும் பற்றிக்கூறியிருக்கும் விஷயங்களைப் பார்க்கும்போது அவைகளை யெல்லாம் நாமுண்மை யென்று கூறக்கூடிய தாகவும் இல்லை. அதில் சொல்லியிருக்கும் காலங்களும் எண்களும் ஒருபோதும் நம்பக்கூடியனவாகவுமில்லை முதற் சங்கத்து இருந்து தமிழாராய்ந்ததாகச் சொல்லப்பட்டிருக்கும் வித்வான்களில் விரிசடைக்கடவுளும் முருகவேளும் தேவர்கள்! மனிதர்களாகக் கூறப்பட்டவர்கள் அகத்தியனாரும் முரிஞ்சியூர் முடிநாகராயரும். அகத்தியனார் காலத்தைப்பற்றி நாம் இப்போது ஒன்றும் சொல்லக்கூடியதாகவில்லை யாயினும் முடிநாகராயர் பாடின பாட்டொன்று புறநானூற்றில்காணப்படுகிறது. அதில் பாரதப்போரின் காலத்து இருகட்சிக்காரருக்கும் உணவளித்த பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதனை,

'திரியாச்சுற்ற மொடு முழுது சேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ.................'

என்று இவர் வாழ்த்திப்பாடியிருத்தலால் இவர் காலம் பாரதப்போர்க் காலம் என்றும் அது இற்றைக்குச்சுமார் 3000-வருஷங்களுக்கு முன்ன

ரென்று கொள்ளப்படுவதால் முடி நாகராயர் காலமும் இற்றைக்கு 3000-வருஷங்களுக்கு முன்னுள்ள தென்றும் கொள்ளக்கிடக்கின்றது. முதற் சங்கக்காலமும் அதுவேயாகும். இறையனாரகப்பொருளுரையில் கூறப்பட்டிருக்கும் காலமும் சங்கத்தைப்போற்றிய பாண்டியர்கள் எண்ணும் புலவர்கள் எண்ணும் மிக அதிகம். அவைகள் உயர்வு நவிற்சிகாரணமாக ஏற்பட்டவையென்றே நாம் ஒதுக்கிவிட வேண்டும்.

இனி இடைச்சங்கத்தின் காலம் தொல்காப்பியத்தின் காலமாக இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் இதுவரை தொல்காப்பியத்தின் காலத்தை ஒருவருமே திருப்தியாக வரையறை செய்யவில்லையாகையால் இடைச்சங்கத்தின் காலத்தைக்குறிப்பிட இப்போது முடியாது. இறையனாரகப்பொருளுரையில் இடைச்சங்க வரலாற்றில் சொல்லப்பட்டிருக்கும் காலமும் எண்களும் முதற்சங்க விஷயங்களைப்போலவே நம்பக்கூடியன வல்ல. நம்மவர் சரித்திர உண்மை வழி நில்லாது உயர்வு நவிற்சி கருதி விஷயங்களைப் பன்முறை பெருக்கிச்சொன்னதே நம்முடைய சரித்திர உண்மை இதுவரை விளங்காமற்போனதின் காரணம். இதனாலேயே அநேகர் உண்மையில் நடந்த காரியங்களையும் நம்பாமலிருப்பதற்கும் காரணம் ஏற்பட்டது. பெருந்தொகையான நூல்கள் முதலிரண்டு சங்கங்களில் ஆராயப்பட்டதாகவும் அக்காலத்து நூற்றுக்கணக்கான பிரபல வித்வான்கள் இருந்தார்களென்றும் சொன்னால் அவர்களெழுதிய நூல்களில் சில வேனும் எங்கே? அவைகளில் சங்கங்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறதா? என்று எவன் தான் கேட்காமல் விடுவான்? அதற்குக்கபாட புரம் கடல் கொள்ளப்பட்டது என்ற ஒரு உத்தரமே போதுமா? சங்கங்கள் மதுரையிலிருந்து தமிழாராய்ந்தது இறையனாரகப்பொருளுரையாலும், கல்லாடத்தாலும், திருக்கோவையாராலும் அவைகளுக்குப்பிந்தின உரைகளாலும் வெளிப்படுகின்றது மன்றி அவைகளைப்பற்றிய கதைகள் பல பல வாறாகக்கர்ண பரம்பரையிலும் வழங்கி வந்திருக்கின்றன. ஆதி மூலமான சங்கங்கள் இருந்தாலல்லவோ அவைகளைப்பற்றி கதைகள் ஏற்படக்கூடும். கதைகள் அநேகம் கட்டுக்கதைகளானாலும் அதிலிருந்தே சங்கங்கள் இருக்கவில்லை யென்று வாதிப்பது சரித்திர வாராய்ச்சி முறையாகாது.

இனிக்கடைச்சங்கக்காலமாவது "பெருங்குன்றூர்க்கிழாரும் நல்லந்துவனாரும் மருதனில நாகனாரும் நக்கீரரும் இருந்தகாலமாகிய நான்மேலே பத்துப்பாட்டின் காலமென்று சொன்ன கி பி. முதல் நூற்றாண்டின் பிற்பாகத்திலிருந்து மூன்றாம் நூற்றாண்டின் பிற்பாகம்வரை யென்று சொல்லலாம். நமக்கு மூன்றாம் சங்கத்தைப்பற்றிக் கொஞ்சம் விரிவாகத்தெரியக்கூடியதாகவிருக்கிறது. நமக்கு இப்போது பத்துப்பாட்டாதிய நூல்களிலிருந்து தெரிந்திருக்கும் விஷயங்கள் நாம் வெகு காலம் மூன்றாம் சங்கத்தைப்பற்றி வழங்கி வரும் கதைகளில் அநேகம் கட்டு ஆகத்தான் இருக்குமென்று யூகிக்க இடம் தருகின்றன. அவற்றுள் முதலாவது திருவள்ளுவர் திருக்குறளுக்குப்பின் மூன்றாம் சங்கம் அழிந்த தென்பது. நம் திருக்குறளானது மணிமேகலையில் சீத்தலைச்சாத்தனாரால்,

'தெய்வந்தொழா அள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய்'

(சிறை செய்காதை 59—61)

என்ற அடிகளில் குறிக்கப்பட்டிருப்பதிலிருந்து திருவள்ளுவர் சீத்தலைச்சாத்தனார் காலத்துக்கு ஒரு சிறிது முந்தியவராக இருக்கலாமென்று தோன்றுகிறது. மேலும் சிலப்பதிகாரத்தில்,

'நாளைச்செய்குவ மறமெனிலின்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினு நீங்கும்'

(நடுகற்காதை)

என்று சொல்லியிருப்பது கபிலரகவலின் பிரதிதொனியாகத் தோன்றவில்லையா? இந்தப்பிரதி தொனிகேட்டபின் கபிலரகவ லென்று வழங்குவது கபிலர் எழுதினதோ வென்று சந்தேகிக்க அதிகமாக இடமில்லை யென்று நினைக்கின்றேன். நான்மேலே பத்துப்பாட்டின் காலநிர்ணயத்தைப்பற்றிச்சொன்னதிலிருந்து கபிலர், திருவள்ளுவர் இவர்கள் காலத்துக்கும் செங்குட்டுவன் காலத்தவரான சீத்தலைச்சாத்தனார் காலத்துக்கும் இடையே 60, 70 வருஷங்களாவது சென்றிருக்குமென்று தோன்றும். சீத்தலைச்சாத்தனார் மூன்றாம் சங்கவித்வான்களில் ஒருவராகையாலே திருவள்ளுவர் காலத்துக்குப்பின் சங்கம் அழிந்ததாகச் சொல்வது சரியோ என்றுசந்தேகிக்க இடம் கொடுக்கிறது.

திருவள்ளுவமாலையில் பாடியதாகச் சேர்க்கப்பட்டிருக்கும் கவிகளெல்லாம் மூன்றாம் தமிழ்ச்சங்கத்தில் திருக்குறளரங்கேற்றப்பட்ட காலத்தில் அங்கிருந்த வித்வான்களால் பாடப்பட்டதாகவும் அவைகள் ஒரு காலத்தன வென்றும் கொள்ளப்படுதல் உண்டு. ஆராயின், அதுவும் சரியல்ல வென்றே தோன்றும். அசரீரி நாமகள், இறையனார் என்று தலைப்பெயரிட்ட செய்யுட்கள் யார் பாடின வென்று தெரியாது. உக்கிரப்பெருவழுதிதானும் மேலே பத்துப்பாட்டின் காலம் என்று நான் குறித்த காலத்தின் கடைசியாக இருந்த வரசன். அவன் காலம் கி பி. மூன்றாம் நூற்றாண்டின் பிற்பாகம். நான் மேலே கூறியதிலிருந்து கபிலரும் திருவள்ளுவரும் பத்துப்பாட்டின் காலமாகக்குறிக்கப்பட்டதின் ஆரம்பத்தில் அதாவது கி. பி. முதல் நூற்றாண்டின் கடைசியில் இருந்திருக்கவேண்டுமாகையால் உக்கிரப்பெருவழுதி திருவள்ளுவர் காலத்தவனாக இருக்க முடியாது. மேலும் உக்கிரப்பெருவழுதி தான் மூன்றாம் சங்கத்தை நடப்பித்த கடைசிப்பாண்டியன் என்று இறையனாரகப் பொருளுரையாலும் தெரிகிறது. மாமூலர் எக்காலத்தவரென்று தெரியவில்லை. கீரந்தையாரென்றொரு வித்வான் இரண்டாம் சங்கத்தில் இருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. திருவள்ளுவமாலையில் காணும் கீரந்தையார் அவரோ வேறொருவரோ தெரியவில்லை. பாரதம்பாடிய பெருந்தேவனார் கி. பி. 8-வது நூற்றாண்டி லிருந்திருக்கலா மென்று

ம-ா-ா-ஶ்ரீ V. வெங்கய்யா அவர்கள் அபிப்பிராயப்படுவதாக முன்னமே கண்டோம். இடைக்காடர் மூன்றும் சங்ககாலத்துக்கு வெகுகாலத்திற்குப் பிந்தி யிருந்தவர். மற்றவர்களில் பெரும்பான்மையோர் பத்துப்பாட்டின் காலமாக நான் மேலே சொன்ன இருநூறு வருஷங்களில் இருந்தவர்களாகத் தெரிந்தாலும் அவர்கள் அதன் பல பாகங்களிலும் இருந்திருப்பதால் திருவள்ளுவமாலை பின்னொருகாலத்தில் பின்னொருவரால் எழுதிச்சேர்க்கப்பட்டதேயன்றி திருக்குறள் அரங்கேற்றிய காலத்து இருந்த சங்கப்புலவர்களால் அப்போதே பாடப்பட்டதல்ல. மேலும் மூன்றும் சங்கம் நக்கீரர்காலம் முதல் உக்கிரப்பெருவழுதிகாலம் வரை இருந்தாலும் நக்கீரர் காலத்திய வித்வான்களே உக்கிரப்பெருவழுதி காலம்வரை இருந்திருக்க முடியாது. ஆகவே "மதுரையில் தமிழ்ச் சங்கமென்று ஒன்று நிறுவப்பட்டது. அதில் பாண்டியர்கள் அப்போதிருந்த பெரும்புலவர்களைச் சேர்த்துத் தமிழாராய்ந்து வந்தார்கள். சங்கப்புலவர்களெல்லாரும் ஒரு காலத்தினரல்லர்" என்று கொள்வதே தகுதியுடைத்து.

---

# VIBISHNAN BUDDHI.

In the forest of Dandaka there lived many an Aryan rishi with his family, whose modes of life and Hari worship were diametrically opposed to the free and easy life and devotion to Siva of the sylvan population. The Rakshasas, described as worse than cannibals, were Titanic in their physique and prowess who worked wonders and ranged in the primeval forest. South of the Vindhia mountains, the whole peninsula including Ceylon was the dominion of Ravana, and while princes like Kara bore sway in the north midland Janasthanam, the eastern seaboard was occupied by the hardy and enterprising Dravidians, who, from their diminutive size and black or brown colour were poetically described as monkeys. Evidently these nigger mannikins were paying homage to their overlord and writhed under his supremacy. True to the nature of subjugated humanity, these grumblers were looking for a time when they could shake off their subjection and assert their independence. The time arrived when Rama and Lakshmana, accompanied by Sita, marched into the forest of Dandaka in fulfilment of their paternal promise, and this auspicious advent was hailed by the aggressive Rishis, who could not brook the insults showered upon them by the curious dwellers and rangers in the woods. Rama, who had partaken of their simple fare and kindly hospitality for ten long years, was prevailed upon by the Rishis to subdue or exterminate the Rakshasas, differing as they did from the former *toto cælo*, and the champion of the meditative denizens of the Aranya, including Agastya, took a vow to that effect. In this way he assumed an hostile attitude to the inhabitants of the peninsula, especially to the Rakshasa population, and it would be too much to expect of these latter in the way of kindness, courtesy or hospitality to these sojourners of Ayodhia. However clever they might be as toxophiles,

Rama and Lakshmana could not overcome the subjects of Ravana by might or force. Discretion is the better part of valour and policy, sprung of discretion, was held up as the motto of the champion hero.

The first hostile person that the hero came across in the forest was Surpanaka, the widowed sister of Ravana, the Ten-headed or the Terrible. Enamoured of Rama, this lusty woman, it is alleged, importuned him against all female modesty to marry him and was mutilated for her carnal weakness, under the pretext that she attempted to lay violent hands on Sita. The mutilation was effected in cold blood, with the full knowledge that she was Ravana's sister, and it served as a challenge to Ravana for a combat. His feudatory princes met and fell. Surpanaka hastened to Lanka to tell her heroic brother the story of her misadventures in her attempt to get him Sita, in beauty and grace beyond compare. Flesh and blood could not bear the sight of the atrocious crime committed on the person of Surpanaka, and his righteous indignation was fired by the glowing account of the nonpareil among women, the wife of his implacable foe. The gauntlet was thrown and taken up, and the avengement must be had. Such was the attitude of Ravana.

As a shrewd man Rama knew that the mutilation of Surpanaka would provoke a terrible war and, therefore, set about making alliance with the murmuring subjects of Ravana. The ruler of the eastern seaboard was the mighty Vali, Ravana's dread. His brother Sugriva had desired to usurp the throne of Kishkinda, and, to realise his ambition, tried to shut him up in a huge cave whither he had gone on a daring enterprise. This treachery was punished by Vali as it richly deserved, and the wife of his unnatural brother was appropriated by him. The sad plight of this perfidious brother, who was disburdened of his bag and baggage, struck the chord of sympathy in the heart of the divine Rama, who found a firm ally in him and crowned him king. Having secured the alliance of the

hardy Dravidians, Rama thought that he could boldly enter the lists with Ravana and assembled the mighty monkey force on the coast under the generalship of Hanuman. The invasion of Lanka was imminent, and it was rendered doubly so by the carrying away of Sita as a tit for tat for the injury done to Surpanaka. Sita was lodged in the Asoka forest in the island of Lanka, and Rama was bent upon recovering her at any cost. He aimed at killing two birds with a single stone. He would exterminate the Rakshasas, to keep his word with the Rishis, and recover Sita traduced or seduced by Ravana. According to the ancient usages of war, the invitation to the last argument of kings was the abduction of the enemy's sweet-heart, and, in the case of Ravana, the mutilation of Surpanaka served as the *motif* for it. Hanuman was sent as envoy to the court of Ravana and returned from the jaws of death without redeeming Sita. War must be waged—that was the pass to which things had converged.

In Lanka Ravana sat in conclave with his generals, ministers and brothers. While all of them condemned his illicit amour, most of them advised him to declare war and put the Aryan mortals to death. Vibishna, the youngest brother of Ravana, humbly remonstrated with his brother to give up Sita and thereby avert the impending catastrophe and gave his counsel in this strain: "Lanka was in flames on account of the fire of Sita's chastity; it was not a feat of Hanuman's. Rama was Vishnu himself. In this incarnation he had already killed Kara, Thushana, etc., and was an expert archer-conqueror of Vali. Ravana had no divine blessing to conquer mortals, as witnessed in the wars of Karta Viriyarjuna and Vali. Further he had a curse from the lips of the Rishi's daughter Vedavati, whom he had tried to seduce but who died leaping into the flames saying that a woman would be the cause of his ruin. That woman was Sita, Vedavati once more in the flesh. To attain salvation Rama must be worshipped and Sita immediately rendered back to him."

Our object here is to see how far this counselling of Vibishna was sincere or disinterested. But before we do so we should consider how this advice was taken and what followed it. Ravana whose blood boiled at the bloody sight of his sister, could not pursue the peace-policy and told Vibishna in an angry tone to get off from the conclave and to shut himself up in his own castle, were he such a great coward as not to accompany him to the scene of war.

He added that he had already smelt a rat in his dealings with Hanuman and that in his ambition to get to his throne he had secretly plotted with Rama. Vibishna, therefore, left Lanka with his four great ministers under cover of night and sought refuge with Rama. Rama hesitated over making a compact with him and held a council with Sugriva, Hanuman and others. Sugriva was against taking Vibishna into the fold, whereas Hanuman saw deeply into the matter and voted for Vibishna as an ideal of intelligence and righteousness. The arguments advanced by these two counsellors set forth the pros and cons in this case, and Hanuman's deep sighted and shrewd argumentation prevailed with Rama, who embraced Vibishna as a brother and whom he installed as King of the vast dominion of Ravana.

Let us for a while scrutinise the action of Vibishna. In the ancient classic of Ramayana and in the puranic lore of subsequent times Vibishna figures as a wise and learned man, pure in thought, word, and deed, and is included among the Alwars, fit for the worship of feeble mortals. Here it must be noted that both Ravana and Vibishna, descendants of the Brahmic Pulastya, were the sons of Vichrava and the Rakshasa woman Kaikasi. Both were well-read in the Vedas and Shastras and had reaped divine blessings by their heroism and devotion. Ravana was remarkable for his titanic energy and austerity as a worshipper of Siva, whereas Vibishna had a name for shrewdness of intellect and aimed at achieving by his sagacity what he could not by his might. Valour was the motto of Ravana, whereas policy dominated the counsel of Vibishna.

While the proud Ravana and the valiant Kumbakarna, conspicuous for his *vis inertia* in ordinary circumstances, felt keenly the insult and injury to the love-lorn Surpanaka, Vibishna had no dram of mercy or compassion for her. In his jeremiad over the fall of Ravana he darkly hinted that Surpanaka had fed herself fat on the ancient grudge of Ravana having killed her husband in the Kalakayar war. Was this due to his natural callousness or thick skin, or was it caused by a deep sensibility on his part of the injustice done or attempted to be done to Sita, or was it an offspring of his machiavellian policy? In the words of Ravana, Vibishna had a deep design on his throne and his advice not to kill the enemy's envoy was construed as a first instalment of currying favour with Rama, while his daughter Tirisadai's attentions to Sita were viewed as a second instalment. However sound his advice and courteous her attention, Vibishna'a running away to the enemy's camp, deserting his brother in the hour of his dire need, his telling Rama all about the wile and guile and stratagem of the Rakshasas—Ravana, Indrajit and others, his supercilious comtempt for Indrajit, the heir-apparent to the throne, for taking a part in the council, his ready acceptance of the crown of Lanka at the hands of Rama on the Indian coast while his heroic brother was up and doing in the island—these and incidents like these throw a deep shadow over the otherwise fair name of Vibishna.

Had Vibishna thought that his brother was wrong in the abduction of Sita and wicked in her dolorous detention, had he a grievance that his sagely advice was thrown to the winds or brought a thunderbolt down on him, his legitimate office was to retire from his brother's side and have nothing to do with him. This would be what every man of common sense would do under the circumstances. Brotherly feeling and sisterly compassion weighed but a feather in the balance. Not only had he no feeling for his brother in distress and for his sister in the depths of her agony, but he passed over to the enemy's camp under cover of night. Did he do it to save his life? He was then a coward of the rankest

type. Did he do it to save the lives of the poor Lankites? No, the Lankites' blood ran in torrents and their city was in ruins. Natural feeling ought to have dictated that he should lay down his life with his brother's or for the fair name of his deeply-smitten Sister. The feeling for humanity must have influenced him to speak to Rama and save the lives of his subject in conquering or capturing Ravana. There is no trace of it in either the epic or the purana. Vibishna was influenced, neithet by the tie of blood nor by the tie of common humanity.

Casuists might say that the highest code of morality demanded that injustice, by whomsoever done, must be punished without any scruple of kith and kin. So long as there is a speck of mortality in us, feeling ought to overcome cold reason, and the low sun makes the colour. Divine perfection in this muddy vesture of our body is but all holy grail and a wild goose chase in practical politics. Was it dharma in any sense to accept the kingship at the hands of a foe to the country? Had he not been tempted by the ambition of a throne, would he have shamelessly or without a twinge of conscience accepted the offer of the crown as soon as he sought refuge in the hostile camp? When Vibishna related the story of Hiranya and Prahladha, the quick-witted Ravana denounced the ungrateful and unfilial action of Prahlada in accepting favour from his father's destroyer and hinted that Vibishna too wished to feather his own nest, regardless of consanguinity or fraternity. Sugriva too, when he voted against Vibishna, referred to it and distrusted his loyalty to Rama. Vibishna himself felt his dubious position when Rama was in despair at Lakshmana's defeat by Indrajit, and, to prove his allegiance to the throne beyond the shadow of a suspicion, explained to Rama how Indrajit had secured *naga pasam* and wherein his weakness lay.

Having already known from his own experience how the policy of "Divide and Conquer" was fruitful enough in the conquest of Kishkinda by Rama and what great help was derived from his alliance with the newly installed

Sugriva, Hanuman hit upon a similar resource in the case of Vibishna, and told Rama that it was as a god-send that Vibishna came over to him at the nick of time and that his alliance might be turned to the best advantage. So it proved in the long run. Dissension in the family leads to its break-up, and the little breach that was effected in the fort of Ravana's strength, by the desertion of Vibishna and by his inseparable alliance with Rama, led to the downfall of the empire of Ravana. When Lanka fell and Sita was recovered; and the triumphant Rama retraced his steps to Ayodhia with her, who rode (sat) with him on either side, but Sugriva and Vibishna—the vassals of his conquest, treacherous men who gained the throne at the cost of their brothers' blood, deep-dyed usurpers who preached dharma, charity and universal benevolence but wallowed in the mire of worldly ambition and sank in the Inferno of mundane happiness ?

---

ஓம்

திருச்சிற்றம்பலம்.

# அறநிலை.

அறம் என்பது அறிஞரால் வரையறுக்கப்பட்டதென்று பொருளாம். நிலை என்பது அவர் தள்ளற்பாலன என்றவற்றைத் தள்ளியும் கொள்ளற்பாலன என்றவற்றைக் கொண்டும் ஒழுகுதலாகிய அந்நெறிநிற்றல் என்று பொருளாம். எனவே பேரறிஞர் தம் அநுபவவகையாற் கண்டு தெளிந்து நலந் தீங்கென்பன பாகுபாடுசெய்து உரைநிறுவியாங்கே அந்நெறிபிறழாது நிற்றலே அறநெறி யென்க.

நிற்றற்குரியார் யாவரோ வெனின்:—அறிவு நிரம்பிய மக்கட்பிறப் பெய்திய சீவான்மாக்களேயாம். இச்சீவான்மாக்கள் இயல்பிலேயே அறிவுடையவாயிருந்தும், அவ்வறிவு செம்பின் ஒளி விளங்கவொட்டாது அதனுடன் அநாதியே விரவி மறைத்தலைச் செய்யுங்களிம்புபோன்று தம்மொடு அநாதியே விரவி மறைத்தலைச் செய்யும் ஆணவமலத்தான் மறைப்புண்டு விளக்கமின்றிக் கிடக்கின்றன.

இங்ஙனங்கிடந்த சீவான்மாக்கள் அறிவு விளங்கப்பெற்று பொருணிலையுணர்ந்து உய்யவேண்டுமென்றெழுந்த திருவருட் பெருக்கத்தால், பிருதிவி முதலிய அண்டப் பகுப்புக்களையும் இதனினும் மிகப்பெரிய சூரியமண்டலமாதியவற்றையும் படைத்து அவற்றை ஒன்றை ஒன்று இழுக்கும் ஆகருஷ்ண சத்தியான் நிலைபெற நிறுத்தி அதனதன் நிலைமைக்கேற்பத் தேகங்களையும் கருவிகளையும் அக்கருவிகளானுகரும் போகங்களையும் அசேதன அருவமாய் மாயையினின்றுங் கொடுத்து, சேதன அருவமாய் திருவருட்சத்தியான் அறிவு ஊட்டி முதல்வன் உபகரித்தாலன்றி விளக்கமெய்துதல் இல்லை. அளப்பரிய ஆகாயத்து விளக்கமாக ஞாயிறுநின்று விளக்கினாலன்றி பொருட்பாகுபாடுகளை அறியமாட்டாத கட்புலன்போன்று, தேகத்தின் உபகாரமின்றி உயிரறிவு பொருட்கூறுபாடுகளைப்பற்றி உய்த்துணர்ந்தறியமாட்டாது எனவே ஆன்மாவிற்குத்தேகம்படைக்கப்படாது கேவலத்திற் கிடக்கின்றபோது அறிவாற்றல் இல்லை என்பதூஉம், தேகத்தோடுகூடிய போது அஃதுண்டென்பதூஉம், போந்தவாறு காண்க. இதற்குப்பிரமாணம்.

## சிவஞானபோதம்.

மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணாதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண்மறைத் தொன்றுங் காட்டம்போல்
தன்னைமல மன்றனைத ருள்.

இனி மாயையென்பது பொய்ப்பொருளாகிய வெறும் சூனியமென்று ஒரு சாரார் உரைகூறுவர். அவர்தங்கூற்று, தற்காலத்து அநுபவமாக அரும்

பெறற் பரிசோதனைசெய்து பொருளுண்மை காண்டலிற் சிறந்த பௌதிக நுட்ப ஆராய்ச்சி உடையார்க்கு ஒப்பமுடியாமையானும் ஒருசிலர் பேரின்ப நுகர்ந்து மகிழ்தலும், பிறிதொரு சிலர் பேரின்னல் நுகர்ந்து வருந்தலும் வேண்டாமையானும், பொருத்தமின்றாதல் அறியற்பாலதாம்.

இனி ஒரு சாரார்மதம்பற்றி ஒளியின் சூனியமே இருளாயினாற்போல, ஆன்மாவின் ஞானசூனியமே அறியாமையைச்செய்யும் ஆணவமாம் எனின்:— அபாவப்பொருட்கு ஒருசெயலுமின்றென்று தருக்கநூலார் உரைகிறுவலானும், முன் சூனியமாய் இருந்த அறிவு பின் ஒருகாலத்து ஆன்மாவின் கண் தோன்றுமென்றல் சற்காரியவாதத்திற்கும் தற்கால பௌதிக சாத்திர முடிபுக்கும் ஒரு சிறிதும் பொருந்தாமையானும் அவருரை வாய்ப்புடைத்தன்றாம்.

இனி ஒரு சாரார் மதம்பற்றி ஆன்மாவிற்கு ஞானங் குணமாதல்போல அஞ்ஞானமும் அதற்குள்ள பிறிதொரு குணமாமெனின்:—அற்றன்று, தம்முள் மாறுபட்ட குணங்கள் இரண்டு ஒரிடத்திருத்தல் என்றும் இன்றாகலின் ஞானத்தைக் குணமாகவுடைய ஆன்மாவிற்கு அஞ்ஞானமுங் குணமாதல் கூடாமையானும், குணங் கெட்டவழிக் குணியுங் கெட்டழிதல் இயல்பாதலின் அஞ்ஞானங் கெட்டவழி ஆன்மாவுங் கெட்டு முக்தி யின்றாய் முடிதலின் அம்முத்திப்பிரயத்தினமும் அவம்படுதலானும் என்க.

இனி ஒருசாரார் மதம்பற்றிமாயை கன்மங்களே ஆன்மாவின் அறிவைத் தடுக்க வல்லன எனின்:—மாயை ஆன்மாவிற்கு வேறாய் உலகு உடல் காரணமாய் நின்று அறிவை விளக்கலானும், கன்மம் ஆன்மாவின் ஞானத்தை விளக்குதலானும் புத்தி தத்துவத்தின் இருத்தலானும் சுத்ததத்துவ வாசிகளுடைய அறிவைத் தடுக்காமையானும் அவ்விரண்டற்கும் ஆன்ம வறிவைத் தடுக்கும் ஆற்றல் இல்லை என அறிக.

இனி ஒருசாரார் மதம்பற்றி முதல்வனே ஆன்ம அறிவைத்தடுத்தல் அமையுமெனின்:—இருளை நீக்கிப்பொருட் கூறுபாடுகளையும் தன்னையும் விளக்கும் தீபத்திற்கு மறைக்குமாறு ஒரு காலத்தும் இன்றாதல்போல முதல்வனுக்கு அறிவை மறைக்குமாறு ஒரு காலத்தும் இன்றாம், அன்றியும் முதல்வனுக்குக் கருணையின்றென்பதுபட்டு அவனது இறைமைக்குணத்திற் கிழுக்காமாறறிக.

ஆகவே ஆணவமென்பது ஒரு திரவியமாய் ஆன்மாவின் மாட்டு அநாதி சையோக முற்று வியாபித்து அதன் அறிவை மறைக்க வல்லதாய் நிற்றல் பெறப்படும்.

## இது சிவஞானபோதம்.

நெல்லிற் குமியு நிகழ்செம் பினிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகம் செய்கமலத் தாம்.

என்பதுபற்றி அறியப்படும். இக்கருத்துப்பற்றியன்றே சிவராஜயோக
கைவல்ய சிவானுபவச் செல்வராகிய ஸ்ரீ தாயுமானார் "ஒருவனவன் யானை
கெடக் குடத்துட் செங்கை ஒட்டுதல்போல் யான்பேதை உப்போடப்பை,
மருவவிட்டுங் கற்பூர மதனிற்றீபம் வயங்கவிட்டும் அயிக்க முன்னிவருந்தி
நிற்பேன், அருளுடைய பரமென்றேவன்று தானே யானுளனென்றும் என
க்கே ஆணவாதிப்,பெருகுவினைக்கட்டென்றும் என்றால் கட்டிப்பேசியதென்
றேமறைநூல் பேசிற்றன்றே" என்னும் உண்மைத் திருவாக்கும் எழுந்தது.

இங்ஙனங் கூறிய ஆணவமலம் சிறிது சிறிதாக வலிகுறைந்து பக்குவ
மாதற் பொருட்டே தேகமாதியன கொடுக்கப்படுகின்றமையின் அவ்வத்தேக
இயல்பிற்கேற்ப அறிவாற்றல் விருத்தியாகின்றது. அவற்றுள்ளும் அகனும்
புறனுமாகிய ஈரிடத்துப் பொருள்கள் எல்லாவற்றையும் பாகுபடுத்தறிதற்
கேதுவாயுள்ள சவிகற்பஞ்செய்து உண்மை உணர்வு பெறுதற்கு முக்கிய
சாதனமெனப்படும் மன உணர்வு நிரம்ப வாய்ப்பப்பெற்ற மக்கட்சரீர மெய்
தியபோது ஆன்மாவின்கண் அறிவாற்றல் மிகமுதிர்ச்சி உற்றுத்தோன்றும்.
சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் எனப்படும் ஐந்துகூறாய் உலகியற் பொ
ருள்கள் அநுபவமாங்கால் அவ்வவற்றின் உண்மை நிலையை மனத்தின்வை
த்து ஊன்றி ஆராயும்போது இவை நன்மை பயத்தற்பாலன, இவை தீமை
பயத்தற்பாலன,என்னும் துணிபுதோன்றி முன்னவற்றை விழைந்து பின்ன
வற்றை வெறுக்க வரும். சிலர் தீமைபயத்தற் பாலவும் நன்மை பயத்தற்பால
வென்று விழைதல் காண்டுமெனின்:—அற்றன்று, அவர் தீமைபயத்தற் பால
வற்றை நன்மை பயத்தற்பாலவென்று மாறுபடக்கருதும் திரிபுணர்ச்சி
உடையராகலின் என்க.

கள், கஞ்சா, அபின் முதலியன இயற்கை அறிவை மயக்கிப்பெருந்
தீங்குசெய்தல் பிரத்தியக்கமாக உணர்ந்தும், அப்பொருள்கள் பேரானந்தம்
விளைத்தற்குரியனவென்று மாறுபடக்கருதிய எண்ணமே அவற்றின்கண்
வேட்கை விளைப்பதாயிற்றென்பது ஈண்டு உணர்தற் பாலதாம்.

சீவான்மாக்களெல்லாம் அறிவுவிளக்கமாகுந்தோறும் இன்பாநுபவத்தை
யே இனிது வேண்டற்பாலன. தமக்கு மன அறிவும் சிறந்துழி திரிவுபடக்கரு
தாது உண்மையைக்கருதி வேட்டல் மிகச்சிறப்புடைத்தாம்.

ஆத்மா பெத்தத்தில் போகத்தையும் முத்தியில் சிவானந்தத்தையும் உண்
பது. அத்—உண்.

பொருட்டொகுதிகளின் உண்மை நிலை உணர்ந்தாலன்றி அவற்றான்
வரும் அநுபவம் சிறவாமையானும் அங்ஙனம் பகுத்தறியும் மனஅறிவு மக்
கட் சரீரமுடையார்க்கே உடைமையாய் நிலை பெறுதலானும் அவ்வறிவை
விருத்திசெய்து பெருக்கிக்கொள்ளுதல் நன்மக்களெல்லார்க்கும் இன்றிய
மையாத தொன்றும்.

இனி, அவ்வறிவுதானும் எங்ஙனம் விருத்தியாய்ப் பெருகுமெனின்:—
ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் இயல்பிற்றாகலான் மனஉணர்வும்

அவ்வாறே நிகழ்ச்சிபெறும். இக்கருத்தே பற்றியே ஆசிரியர் பொதுமறை கூறிய புலவரும்

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.
மனநல நன்குடைய ராயினும் மாந்தர்க்
கினநல மேமாப் புடைத்து.

என்று ஓதி அருளுவாராயினர். நம்மை நன்னெறியில் நிறுத்தி உய்விக்கும் முழுமுதற்கடவுள் அருளியவேதாகமங்களும் அவ்வேதாகம அறவழி நின்றொழுகி அறிவான் மனந்தூயராய பெரியார் தமது அன்பு நிறைந்த உரையானும் வரியானும் புலப்படுத்த ஆப்தவாக்கியத் தொகுதியும் மன அறிவை மிகுத்தற்கு முக்கியமாம். இது மூவகை அணுக்களுக்கு "முறைமையின் விந்து ஞான, மேவினதில்லையாகில் விளங்கிய ஞானமின்று, மோவிடவிந்து ஞான முதிப்பதோர் ஞானமுண்டேற், சேவுயர் கொடியினான்றன் சேவடி சேரலாமே."

ஆரண மாகமங்க ளருளினா லுருவுகொண்டு
காரண னருளானாகிற் கதிப்பவ ரில்லையாகும்
நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நாகர்க்கெல்லாம்
சீரணி குருசந்தானச் செய்தியும் சென்றிடாவே.

என்னும் ஸ்ரீமத் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் திருவாக்கானும்,

வினையினீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதனூலாகும், என்னும் தொல்காப்பிய மரபியற் சூத்திரத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர் கடாவிடை யுள்ளுறுத் துரைக்கும் உரைபற்றியும் துணியப்படும்.

இனி, பஞ்ச பௌதிகமாக விரிந்த உலகின்கண் ஜீவிக்கின்ற மக்களியல்பிற்கேற்ப பொதுவகையானும் சிறப்புவகையானும் எண்ணிறந்த சமய பேதங்கள் காணப்படுகின்றன. அவையெல்லாம் தமக்கென ஓர் வரையறை செய்துகொண்டு ஒழுகினாலன்றி ஒருசிறு பொழுதும் நிலை பெறமாட்டாவாம். அவ்வற வொழுக்கமும் தங்கள் தங்கள் சமயத்துக்குரிய கடவுளானும் அக்கடவுள் அருள்வழிப்பட்ட பெரியாரானும் முறைசெய்து வரையறுக்கப்பட்டனவென்று உறுதி கூறித்தாம் அந்நிலை நின்றொழுகுதலோடு பிறரையும் ஈர்க்கின்றனர். ஆகலின் அறம் என்பது யாதென்று விசாரித்து உணர்ந்து அந்நெறி நிற்றல் ஆவசியமாகலின் அதனை விளக்குதும்.

சாதியாரும் சமயத்தாரும் தேசத்தாரும் தத்தமக்கு உரிமையுடையனவாகச் சிலவற்றைக்கொண்டு மற்றவற்றைப் புறம்பழித்து விலக்குதல் போலாது, அவரெல்லார்க்கும் ஒப்பமுடியுமாறு நூல்செய்தார் ஆசிரியர் திருவள்ளுவரே யாதல் எல்லாரும் அவரியற்றியருளிய திருக்குறளென்னும் அரிய பெரிய அறநூலை அணுத்துணையும் கிடக்கைமுறை சிதையாது தங்கள் தங்களுக்கு எளிவந்த பாஷைகளின் மொழிபெயர்த்து அரும்பெறல் அமிர்தம்

போலப்போற்றிப்படித்து அதன் நுட்ப உரைகளை அறிந்து கைக்கொண்டு ஒழுகுமாற்றான் இனிது புலனும்.

அத்திருவள்ளுவர் அறன்வலியுறுத்துமிடத்து ஒருவற்கு அறநெறி நின்றொழுகுதலே கழிபேராக்கமென்பதூஉம், அதனை மறுத்து மறநெறி நின்றொழுகுதலே பெருங்கேடென்பதும் வற்புறுத்திக்கூறி, காட்சி மாத்திரையானே பயன்படுமாறு நடித்து பிறரை வஞ்சித்தற்பொருட்டன்றி உண்மையின் மனத்துக்கண் மாசுபடாதமைந்து பிறர் பல்லாற்றான் வரும் அரும் பெறற் செல்வம் சீர்த்தி முதலியவற்றான் மிகுவளம் பெற்றுச் சிறத்தல் கண்டு அவர் மாட்டுப்பொறாமை எய்தாது,பிறர்க்குரியபொருளை அவரை வஞ்சித்துக் கவர்ந்துகொள்ள நினையாது பிறர் தமக்கு முடியாத் துன்பு இயற்றினும் அவர்பால் வெகுண்டு தாம் ஒரு சிறிதும் தீங்குபுரியக்கருதாது, அவர்க்கு நன்கேபுரிந்து, யாவர்மாட்டும் இன்சொற்கூறலே அறமாம் இவ் அறத்திற்குப் பிரயோஜனங் கருதாது எல்லா வுயிர்களிடத்தும் செல்லும் அருட்பெருக்கே இன்றியமையாததாம் என்று முறைசெய்து நன்குவிளக்கி அருளினர்.

எம் அருமைச் சகோதரர்களே! உரிமை அன்பர்களே! மனம்மொழி மெய் என்னும் முக்கரணத்தானும் தீங்குவாராது காத்து நன்கேபுரிந்து அருளுடையராய் ஒழுகுதலே அறமென்பது இனிது பெறப்பட்டமை காண்க. "எல்லா வுயிர்க்கு மின்பமென்பது தானமர்ந்து வரூஉ மேவற்றாகும்" என்று ஆசிரியர் தொல்காப்பியனார் ஓதுதலின் இன்பமானது உயிருடைப்பொருள்கள் யாவற்றிற்கும் ஆண் பெண் என்னும் இவ்விரண்டின் கூட்டுறவான் நிலை பெறுவதாம். இவ்வின்பந்துய்க்கு நிலையினின்றும் சிறிது அறிவு முதிர்ந்தவழி இதன் துணைக்காரணமாகிய பொருள்வேட்கை முதிர்ந்து அதனைத் திரட்டவரும். இந்நிலையினின்று சிறிது அறிவு முதிர்ந்தவழி அல்லனகடிந்து நல்லன புரிதலாகிய அறநிலை நிற்கவரும் எனவே அறநிலை நின்று பொருளீட்டி இன்பநுகர்தலே நன்மக்கட்கு மரபாம் என்க. இதனான் பொருளும் இன்பமும் கௌணம்பற்றி அறத்தின்கண் அடங்கும்.

> "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
> அறத்து வழிப்படூஉந் தோற்றம்போல"

என்றதூஉம் இக்கருத்துப் பற்றியேயாம்.

இனிக்கற்பிற் சிறந்த பத்தினிப் பெண்டிரோடு இல்லின் கண் இருந்து செய்வதும், இல்லத்தைத் துறந்து நின்று செய்வதும் என அறம் இருவகைப்படும்.

இல்லறம் அகம் புறமாகிய இருவகைப்பற்றின்மீதூர்ந் தெழுந்த மந்த அதிகாரிகளாகிய மக்களுக்கு, அப்பற்றுக்கள் நல்ல நுகர்ச்சியான் ஒழிந்து சித்த சுத்தி யெய்தற்பொருட்டு விதிக்கப்பட்டதோ ரொழுக்கமாம்.

இவ் அறநிலை நிற்பார்க்கு குறைந்த தரத்தினிகழ்வதாகிய அன்பு முக்கியமாகவேண்டப்படும். இவ் அன்பு நிலைக்கு வேறுபட்ட கொலை முதலிய

வான பிறர்க்குத் துன்பந்தரப்பட்டன வனைத்தையும் ஒருங்கே நீக்கி அவர் யாதுபற்றியாயினும் துன்புற நேர்ந்துழிதாம் பெரிதும் உளநெகிழ்ந்து பதை பதைத்து அத்துன்பத்தினின்றும் அவரை விலக்கி உய்விக்க விரைகுதல் அறமாகவே ஈகை முதலிய எல்லாம் அடங்கும்.

முன்னர்க்கூறியபடியே சீவான்மாக்கள் எல்லாம் விழைவது இன்பமா கவே அது அறத்தான் வருவதே நன்று என்பது தோன்ற,

“அறத்தான் வருவதே இன்ப முற்றெல்லாம்
புறத்த புகழு மில”

என்றருளிய ஆசிரியர் திருவள்ளுவநாயனர்,

“ஈத்துவக்கு மின்ப மறியார் கொளுமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்”

என்று கூறினமையின் அறமென்பது பெரும்பாலும் ஈகையைச் சுட்டியே நிற்கு மாறறிக.

இனி கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, வெஃகாமை, ஐம்பொறி அடக்கல் என்னும் ஐந்தறங்களையும் பிறழ்ந்து சிதையாது காத்து, தவம் தூய்மை, தத்துவநூலுணர்ச்சி, மனமுவந்திருத்தல், தெய்வவழிபாடு என்னும் ஐந்தறங்களையும் இன்றியமையாதனவாய்க் கொண்டுபோற்றி, நடத்தல் இருத்தல் முதலிய தேக இயக்கங்கள் வரைதுறைபின்றி இயங்குமாயின் அதனானும் அறநிலை வழுஉப்படுமாகலின் அது நேர்ந்தவாறியங்காது நெறி செய்து, மனம் ஒருமுகப்பட்டு ஒருங்கி வழிப்படுதற்கு பிராணயாமம் எனப் படும் அரும்பெறற் செய்கையும் மேற்கொண்டு ஒழுகுதலே இல்லின்கண் இருந்து நடாத்தும் அறநிலைக்கு அத்தியாவசியகமாக வேண்டப்படுவதா மென்க. என்றித்துணையுங் கூறியன உடம்பின் நிகழ்ச்சிபற்றியே நிகழ்வன வாகலின் புறச்சாதனமாகிய இலௌகிக விருத்திக்கே பெரிதும் உபயோக முற்று வருதல் காண்க. இனித் துறவறம் வினைமாசு நீங்கி அந்தக்கர ணங்கள் தூயவாய் ஞானமெய்தி வீடுபேறெய்தற்குரிய தீவிர அதிகாரிக ளாகிய மக்களுக்கு எய்துமாற்றான் விதித்ததோ ரொழுக்கமாம்.

இவ்வறநிலை நிற்பார்க்கு மிகுந்த தரத்தினிகழ்வதாகிய அருள் முக்கிய மாக வேண்டப்படும்.

இல்லறநிலையில் நின்று விரதங்காத்தலின் அந்தக்கரணந் தூயவாம். ஆகவே காணப்பட்ட பொருளெல்லாம் நிலையுத லிலவாந்தன்மை உணர்ந்து சடவுட் பூசை கடவுண்ஞானம் உடையார் கைத்தானமுதலிய பேரறங்கள் புரிந்து புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய யாக்கையின் கண் ணும் ‘இவை என்ஞான்றும் ஒருபடித்தாய் சிறக்கும் நீர்மையுடையனவென் றும் இவற்றான் அநுபவிக்கப்படும் இன்பத்தின்மேற் சிறந்த பொருள் ஒன் றும் இன்றென்றும்’ மயங்கி அமிழ்ந்திநின்ற மனவறிவை, மடக்கி ஈர்த்து பரம்பொருளாகிய இறைமுதற்கடவுள்பால் நிறுத்தி மனத்தாற் றியானஞ்

செய்து பந்த மோக்ஷங்களையும், அவற்றின் காரணங்களையும் உண்மையான றிந்து, சமாதிகூடி, மேற்சாரக்கடவனவாகிய துன்பங்களிலராய், இடையறாத மெய்யுணர்வின் உறைத்துநின்று, மலவாதனை நீங்கி, களிப்புக் கவற்சி பிணி மூப்பு இறப்புக்கள் இன்றி, காலத்தானும் இடத்தானும் வரையறைப்படாத நிரதிசயவின்பம் பெறுதற்கு உரிமைப்பாடுற்று நிற்றலே துறவின்கணிருந்து நடாத்தும் அறநிலைக்கு அத்தியாவசியமாய் வேண்டப்படுவதாமென்க. என்றித்துணையுங் கூறியன மனத்தின் நிகழ்ச்சிபற்றியே நிகழ்வனவாகலின் அகச்சாதனமாகிய அறிவு விருத்திக்கே பெரிதும் உபயோகமுற்று வருதல் காண்க.

யோகாங்கமெட்டனுள் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் முன்னைய நான்கும் இல்லற நிலையினர்க்குச் சிறந்த அறமாயினதூஉம் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி யென்னும் பின்னைய நான்கும் துறவற நிலையினர்க்குச்சிறந்த அறமாயினதூஉம், சீலம், சமாதி, பிரஞ்ஞை முதலியவாகப் பிறரெல்லாம் கூறும் அறப்பகுதிகளெல்லாம் இக்கூறியவற்றடங்குவதூஉம் உய்த்துணர்ந்து கொள்ளற்பாலன.

இங்ஙனங் கூறிய அறவொழுக்கத்தால் எய்தும்பயன் யாவையெனின்:—இம்மையிற் புகழ் முதலிய அவாந்தரப் பிரயோசனமாகவும், மறுமையில் சுத்தாத்துவித கைவல்லிய பரமானந்தப் பேறு பரமப்பிரயோசனமாகவும் உண்டாமென்று துணிந்து கொள்க.

இதுகாறுங் கூறியவாற்றால் மூதறிஞர் வரையறுத்தோதிய நெறி நின்றொழுகுதலே அறநிலை யென்பதூஉம், அந்நெறி நிற்றற்குரியார் சீவான்மக்களே யென்பதூஉம், சீவான்மாக்கள் தேகத்தோடு கூடியபோதே அறிவாற்றல் அடைகின்றன வென்பதூஉம், அவ்வான்மாக்கள் அறிவை அநாதியே ஆணவ மறைத்திருந்ததென்பதூஉம், ஆன்மாக்கள் இன்பமேவிழைதற்பால வென்பதூஉம், பொருளைப்பாகுபடுத்தறிந்து வேட்டு இன்பநுகர வேண்டுமென்பதூஉம், அறிவு இனம்பற்றி நிகழ்வதாமென்பதூஉம், இனமும் பலவேறு வகைபடுதலின் எலலார்க்கு மொப்பமுடிந்தது வள்ளுவர்நூலே என்பதூஉம், அவர் கூறுமாறு மனம் மாசின்றிருத்தல் முதலியவே அறங்களாமென்பதூஉம் இன்பமும், பொருளும் அறத்தைப்பற்றியே சிறத்தலின் அறமே சிறந்ததென்பதூஉம்,அறம் இருவகை நிலையினதென்பதூஉம் அவற்றின் பொதுவகையான அறக்கூறுபாடு இனையதென்பதூஉம், அறப்பயனும் திருவருட்டுணையால் சுருக்கியுரைக்கப்பட்டன.

"ஒழுக்கம் விழுப்பந்தரலாலொழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்"—திருவள்ளுவர்.

ஓம்.

---

# தற்காலத்திசைந்த தருமநிலை.

## இவ்வுபந்யாஸம் T. பக்தவத்ஸலம், பி. ஏ., எம். பி. பி. ஐ., அவர்களால் செய்யப்பட்டது.

---

பெரிது பெரிது புவனம் பெரிது: அதிலும், அரிது அரிது மானிடராதல் அரிது. கிராமங்களெத்தனை, நகரங்களெத்தனை, நாடுகளெத்தனை, தேசங்களெத்தனை, கண்டங்களெத்தனை, அண்டங்களெத்தனை, இவ்வகையாக சொல்வகையால் எவ்வகையாலும் சொல்லமுடியாதனவாக, பகிரண்டங்கள் பிரம்மாண்டங்களாக விளங்குகின்றன. சொல்லிற்கு மடங்காது மனதிற்கும் விளங்காது, ஆதியற்ற, ஹேதுவற்ற போதப்பொருளை, நாதனென்றும், வேதனென்றும், சாமகீதனென்றும், பித்தனென்றும், அத்தனென்றும், இடபவாகனன் என்றும், கருடவாகனன் என்றும், மானெழுந்தாடுங்கரத்தோன் என்றும், கையார் சக்கரத்தென் கருமாணிக்கம் என்றும் உள்ளந்தன்னில் உருவகப்படுத்திப் பன்னிப் பாடிப் பரவசமாவதுபோல்,—மேற்சொன்னபடி, எல்லையற்ற இடந்தனிலே, சொல்லை நகைத்த உலகங்களை, பூலோக, புவர்லோக, சுவர்க்கலோக, தபோலோக, ஜனோலோக, மகாலோக சத்யலோகங்களென்றும், அதல, விதல, சுதல, தராதல, ரஸாதல, மகாதல, பாதாள லோகங்களென்றும் அருமையாக நாமஞ்சூட்டிப் பெருமையாக அளவிறந்த தன்மையை உரிமையாக நமக்கு உளப்படுத்தினார்கள். இம்மட்டோ? Macrocosm என்கிற இடமகன்ற ஜடவுலகம் இத்தன்மைத்தாக, நினைக்கவும் முடியாது, பாவிக்கவும் இயலாது, சித்திரத்தோற்றத்தில் ஜீவன் புகுந்தது எத்திறம்? அழகிய பாற்கடலில் அமிர்தம் சித்தித்ததுபோலவும், நிர்மலமான ஆகாயத்தில் நிரஞ்சனமான நிலவு தோற்றுவதுபோலவும், பார்க்கவினிய பாரிஜாதத்தில் நேசமினிய வாசம் வீசுவதுபோலவும் கண்ணுக்கினிய மக்களிடம் கானரசமும் தோன்றினாற் போலவுமன்றோ இருக்கின்றது, ஆச்சரியகரமான ஜடவுலகத்தில் அற்புதகரமான சித்துலகம் தோன்றினது? என்று பற்பல விதமாக விற்பன்னர்களெல்லாரும் கற்பனைகொண்டு கவிகள் பாடும் வண்ணம் கவினோடியைந்த Microcosm என்கிற சித்துலகம் எவ்வளவு சீரியதா யிருக்கின்றது! இதிலும் அற்பப் பூச்சிகளினின்றும் அறிவு சொற்பமாய்த் தோன்றிப் பின்னர் Evolution என்கிற பரிணாமக் கொள்கைப்படி, காலேற, வாலேற, என்பேற, வன்பேற, மூளையேற அறிவு மேறி அன்புமேறி அருளுமேறி, மனிதனிடம் மனோதத்துவம் மஹோன்னத தசையடைவதை வர்ணிக்க யாவரால்தாம்! இவைகளைப் பற்றித்தான் இயற்பெரு நாவலர் 'பெரிது பெரிது புவனம் பெரிது' 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்று உவகை தளும்பி உரையாடலாயினர்.

இவ்வாறு, பெரிய உலகத்தில் அரியமானிடர்க்கு உரிய செயல்களில் ஒப்பதும் மிக்கதும் இல்லாதது, உயர்வான அறஞ்செயலேயாகும். ஆத்திச்சூடியின் முதலில் 'அறஞ்செய விரும்பு' என்றார், ஔவைப் பிராட்டியார்.

அறஞ்செய விரும்பாதவன் அதமன். அபரிமிதமான செல்வம் ஒருவனுக்கு அளவுக்கதிகமாகவே யிருந்தபோதிலும், கோட்டை கொத்தளம்போல் வீடுகளும் மாடிகளும் மச்சுகளும் மாளிகைகளும் ஒருவனுக்கு ஏராளமாய்க் கிடைத்திருந்தபோதிலும், அன்பென்னும் விளக்கும் அருளென்னும் பொருளும்ஒருவனிடம் கிடைக்காவிட்டால், அவனைப்போல் துரதிர்ஷ்டக்காரன் அகிலத்தில் வேறொருவன் இருக்கவேமாட்டான். அவனுக்குப் பட்டங்கள் ஆயிரக்கணக்காய்க்கிடைத்திருந்த போதிலும், வெள்ளிமாளிகையில், பொன்விளக்கேற்றி, பவளக்கட்டிலில் முத்துத்திரையிட்டு, நற்பச்சையாலாய நளினக்குண்டுகள் கட்டி, வச்சிரப்பூக்களை மாலையாய்த் தொடுத்து, மாணிக்க ஒளியையிடையே பெருக்கிய மகா ஐஸ்வர்யவானாய் அவன் விளங்கிய போதிலும் அவன் பட்டங்களும் அவன் பணக்குவியல்களும் அவன் அதிகாரமும் அவன் ஆர்ப்பாட்டமும். ஐயோ, அவனுக்கு அந்தியகாலத்தில் அணுவளவும் துணைசெய்யா. மண்ணாகிய தன்தேகம் மண்ணுடன்சேர, அவன், அறஞ்செய்யாத அதமன், அறுந்த விரலுக்குஞ் சுண்ணாம்பு கொடாத அதிலோபி, அஷ்டைஸ்வர்யம் படைத்தவனாய்த்தோன்றினும் மனமெல்லாம் அழுகிய மஹாகுஷ்டரோகி, பெட்டியிற் பணத்தையும் சட்டியிற் சோற்றையும் மனத்தினில் அழுக்கையும் வெகு பத்திரமாய்க்காத்த விகாரப்பெரும்பூதம்—மறுபடியும் சொல்லுகிறேன், அவன் தேகமாகிற மண் பூமியாகிற மண்ணுக்கிரையாக, அவன் ஆத்துமாவை அவன் செய்த அக்கிரமச் செயல்களும் அவன் புரிந்த அநியாயக்கொடுமைகளும் அவன் நினைத்த துரோக சிந்தைகளும் கட்டியிழுத்துக் காதவழி யிழுத்துப்போக, இகழ்ச்சியென்பதே அவனுக்கு இகபாசாதகமாய், புகழ்ச்சிப்பாடலென்பதே கிட்டமுடியாததாய், மண்ணுடம்பை இழந்து ஒருதரம் இறந்தும் புகழுடம்பை இழந்து மற்றொருதரம் இறந்தும் அவன் இருமுறை இறந்தவனாகிறான். தேசாபிமானமாகிற அறம் புரியாத அரும் பெரும் பாவி இறந்தான் இறந்தான் இருமுறை இறந்தான் என்று ஸர் வால்டர் ஸ்காட் என்னும் ஆங்கிலப்புலவர் பாடிப் பாடிப் பறையறைந்ததுபோலவே இன்றமிழ் பயின்ற இயற்பெரும் புலவர்கள எண்ணில்லாதவர்கள் எத்தனையோ பெயர்கள், அறம் புரியுங்கள், தருமஞ்செய்யுங்கள், நாளைச்செய்வோமென்று நாளைப்போக்காதீர்கள், நினைத்த அன்றே, எண்ணின இன்றே, தருமஞ்செய்து தன்னியராகுங்கள்: எமன் வருங்காலம் எவராலுஞ் சொல்லமுடியாது என்று மீண்டும் மீண்டும் திருப்பித் திருப்பி நன் மொழியாலும் இடித்து இடித்து வன்மொழியாலும் உறுதி கூறிய உயர்ந்த மொழிகளும் நூல்களும் எத்தனையோ உள்ளன. எல்லாக்காலங்களிலும் எல்லாத்தேசங்களிலும் எல்லா மனிதருக்கும் ஒக்கமுடிந்து உறுதி பயப்பனவாய பொதுவாய நீதி மொழிகள் தமிழ் மொழியில் ததும்பி நிறைந்திருத்தல் பற்றித்தான் காலஞ்சென்ற ப்ரொபஸர் சுந்தரம் பிள்ளையவர்கள், எம். ஏ. தாம் செய்த மனோன் மணீயம் என்னும் நாடகமாகும் ஆடகத்தில்,

"வள்ளுவர் செய் திருக்குறளை மறுவற நன் குணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி யொருகுலத்துக் கொரு நீதி"

என்று உண்மை மொழியை வண்மையுடன் கூறினார்கள். ஆதலால், சகோதரர்களே, சகோதரிகளே, அறஞ்செய்வதே அறிவாளர்க்கு அடுத்தகாரியமாகும். அறஞ்செய்வதே ஆத்துமாவின் விலக்ஷணமாகும். அறஞ்செய்வதே ஆனந்தம் விளைக்கும் அற்புத நெறியாகும். அறஞ்செய்வதே ஐயன் காட்டிய உய்வழியாகும். அறஞ்செய்வதே நம்மை மிருகங்களினின்றும் வேறுபடுத்தி, மனிதராக்கித் தேவராக்கும் மாண்புடைய முறையாகும். அறஞ்செய்வதே, போகத்துட் பெரும் போகமாய் யோகத்துள் பெரும் யோகமாய், தத்துவமாகிற தருக்களின் உச்சியிற் பழுத்த உன்னதக்கனிகளாய், துன்பமே துடைத்து இன்பமே பெருக்கி, முத்திநெறிக்கு முதற் பெரும் வித்தாகி முத்தாகி விளங்குவது ஒவ்வொருவருடைய மனமாகிற நிலத்தில் அன்பாகிற விதை விதைக்க அந்த அருளாகும் கொடி படர்ந்து ஆனந்தமாகும் தளிர் துளிர்த்து, பக்தியாகும் பூ பூத்துப் பரவசமாகும் பழம் பழுத்துப் பரமபதமாகும் பாக்கியந்தந்து விடும்.

இவ்வாறு அருமையடைந்து பெருமை வாய்ந்த அறஞ்செயல் என்னும் அற்புதக்கருமம் தற்காலம் நந்தேசத்தில் பொற்போடு விளங்குகின்றதா அன்றி அந்த மங்கி மாசுறுகின்றதா என்னும் விஷயத்தைச் சிறிது கவனித்து, தற்காலத்தில் தருமம் எவ்வெவ்வழிகளில் எவ்வெவ் முறைகளாகச் செய்வது பயன்றரும் உசிதமாகும் என்பதைப் பற்றிப் பேசி இன்று வியாசத்தை முடிக்கவேண்டியிருக்கின்றது. இங்கு இன்று எனக்குக் கொடுத்திருக்கும் காலவரையறையையும் இங்கு சேர்ந்திருக்கும் பெருங் கூட்டத்தையும் முன்னிட்டு Ethics என்கிற நீதி தத்துவ சாஸ்திரக்கோட்பாடுகளை விவரித்து உபந்யாஸம் செய்து Psychology என்கிற மனோதத்துவ சாஸ்திர ரீதியாய், நீதிநியமங்களுக்கு ஆதாரம் இன்னவையெனப் பரக்கப்பிரசங்கஞ் செய்வது விரும்பததக்ககாரியமன்று என்று தீர்மானித்து, அறத்தின் பெருமைமேற் சொன்னபடி உண்டென, வைத்துக்கொண்டு, அதன் தற்கால நிலைமையைப்பற்றி மாத்திரம் சிறிது விவரித்துக் கூறி சீர்திருத்த எவ்வாறு செய்யலாகும் என்பதை எனக்குத் தெரிந்தவரையிலும் எனக்குத் தோன்றினவரையிலும் சொல்லுகிறேன்.

இந்தியராகும் நந்தமர்க்குத் தருமம் என்னும் தத்துவப்பொருள் நேற்றின்று கிடைத்ததன்று. அந்த பன்னெடு நாளாய் நம்வீட்டிற் புகுந்து, பாஷையில் நுழைந்து சாஸ்திரத்தில் விளங்கி, எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைமைகளிலும் ஒல்காப் பெரும்புகழ் விளைத்து மல்காக் கீர்த்திதந்து வருகின்றது. ஆயினும் காலபேதத்தாலோ அல்லது தப்பபிப் பிராயத்தாலோ அல்லது ஞானமாகிற சூரியனை அஞ்ஞானமாகிற அந்தகாரப்பாம்பு ஒன்றே கால் கிரணம் ஒருமிக்கப் பிடித்ததாலோ, எதனாலோ, பழைய காலத்தில் உண்மையை நோக்கி உத்தேசிக்கப்பட்ட கருமம் பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது. நம்முன்னோர்கள், ஹாஹா ! பன்னாள் உழைத்தார்கள், நன்றாய்ப் பிழைத்தார்கள், தத்துவத்தில் மிகப்பழுத்தார்கள். இகலோகத்திற்கு இன்றியமையாததும், மனித சுபாவத்திற்கு மாண்புடை

யதும் தேவத்தன்மையைத் திருத்தமாய்ப் பெற்றதும், பரலோகத்திற்குப் பக்குவமாய் வழிகாட்டுவதும், தருமம், அறம், அஃதே, அஃதொன்றே வேறின்றே யென்று

## தருமத் திருக்கோயில்

‘ தத்துவ ரீதியாய்க் கட்டினார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் நாகரீகத்தில் முதிர்ந்து, அறிவு விரிந்து, அஃது வழிகாட்ட இடம் காட்ட, பரிபக்குவமான மனமென்னும் நிலத்தில் அன்பென்னும் அஸ்திவாரத்தை அதிபலமாய்ப் போட்டார்கள். ஆலமரத்தின் அழகிய சிறுவிதை ஆகாயத்தை யளாவி நாற்புறமும் பரவி அழலைப்போக்கி நிழலைத்தந்து அரசரும் அமைச்சரும் ஆனைகளும் சேனைகளும் தங்கியிருந்து தாபம் நீங்கப் பெரிய விருக்ஷமாய் நேர்வதுபோல், அழகாயிட்ட அஸ்திவாரம் ஆகாயம் முட்டும் மதிற்களாக ஓங்கி வீங்கிப் பாய்ந்துடன் விளங்கியது இக்கோயிலுக்கு நான்கு பெரும் வாயில்கள் நன்றாய்க் காணப்பட்டன. தருமம் என்பதே தனிப்பெரும் வாயிலாக, பொருள், இன்பம் வீடு என்னும் அர்த்த காம மோக்ஷமே அழகிய மற்ற மூன்று வாயில்களாய்ச் சமைந்தன. சதுர்வித புருஷார்த்தங்களாகிய இந்த நான்குவாயில்கள்மீதும் சதுர்வேதங்களாகிற நான்கு கோபுரங்கள், ஆகாயம் பாருங்கள் ஐயனைக்காணுங்கள், தர்மம் தலைக் கட்டப் பக்திபெருகுவதே தர்மம் விளங்கி மஹிமை தருவதாகும், வேறுவிதமாய் ஆகாயம் பார்ப்பது அகங்காரம் படைப்பதேயாகும், என்று சத்தியஞ் செய்து நித்தியம் பேசுவதுபோல்—அக்கோபுரங்கள் தாம் அத்தருமத் திருக் கோயிலின் அழகிய கைகளாக மேலே தூக்கி மெய்யைக்காட்டுகின்றன. கோயிலின் உட்சென்றால், சல்லாபமாகிற சலவைக்கற்கள் தரைமுழுதும் போடப்பட்டுத் தயாளத்தைக் காட்டுகின்றன. உள்ளங்களிக்கவும் உடலம் பூரிக்கவும் எங்கெங்கு பார்த்தாலும் தாராளத்தைக்காட்டித் தாபத்தைப்போக்கும் சாமரைபோன்ற தாமரைப்பூவும், இல்லையே என்னாத முல்லைப்பூவும், ராஜாக்களையும் தானத்தில் தோற்கடிக்கும் ரோஜாப்பூவும். தாழ்ந்தாலும் நாங்கள் தர்மஞ்செய்யாமலிரோம், இழந்தாலும் நாங்கள் ஈகையை மறவோம் என்பதைக் காய்ந்தாலும் சளைக்காது கடிமணம் வீசும் வாகான நல்ல வகுளப்பூவும் காட்டுகின்றன. இஃதல்லாமலும், கண்ணைக் காட்டிக் கடாக்ஷம்புரியும் கூரிய இனிய குவளைப்பூவும், பாவலர் புகழ்போல மேவரும் மணம் வீசி யாவரும் மகிழச்செய்து சல்லாபஞ்செய்யும்பொல்லாத மல்லிகையும் அறமே செய்து அழகைபடைத்த அல்லியும் கொன்றையும் அலரியும்துளவமும் நறுமணம் வீசி அறமணம் வீசாநிற்கின்றன. எங்குபார்த்தாலும் இவ்வாலயத்தில் மங்காத்தருமமே மகிழ்வடையாநிற்கின்றது. தருமமே விளங்கித் தருமமே மலர்ந்து தருமக்கீதமே பாடி, தருமவாசமே வீசி, தருமச்சொல்லே பேசி எல்லாம் தருமமே, எல்லாம் அறமே, தோன்றித்துலங்குவனவெல்லாம் தொல்லையகற்றும் நல்வினையே—இவ்விதமாக நம்மூதாதையோர் அமைத்த நற்பெருங்கோயிலில் தருமம் இருவகைப்படுவதாய்க் காண்கின்றது தேவ நாதனை நோக்கிச்செய்யப்படும் உத்ஸவாதி தர்மகர்மங்களும், மனி

தனை இலக்காக வைத்து மாண்புடன் செய்யும் அறவகைகளும் எனத்தரு மம் பொதுவகையால் இருவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இனி இவ்விரண்டுவித நற்கருமங்களும் சற்கருமங்களாக முன்னர் எப்படி விளங்கிற்று, இப்போது அவைகள் எந்நிலையிலிருக்கின்றன என்பதைச் சிந்திப்போம்.

## தேவாலயங்கள்.

நம் நாட்டில் கோயில்களுக்கு யாதொரு குறையும் கிடையாது. கோயில்லா ஊரிற் குடியிருக்கவேண்டாம் என்பது முன்னோர் தம் முதுமொழி. பிள்ளையார் கோயில் தானும் இல்லாத பீடைபிடித்த ஊர் ஏதாயினும் உண்டோ என்பது எனக்குத் தெரியாது. மதிற்சுவரிடிந்த மாரியம்மன் கோயிலாவது புல் முளைத்துப்போன பிள்ளையார் கோயிலாவது ஒன்றேனுமில்லாத 'ஒண்டியடித்தான்' கிராமம் இருக்கவே இருக்காது என்பது என்னுடைய நம்பிக்கை. பண்டைக்காலத்துப் பணக்காரர்கள் கோயில்களுக்கென்று கோடி கோடியாய்ச் செலவழித்தார்கள். கட்டடத்திற் கென்றும் உத்ஸவத்திற்கென்றும் கணக்கு வழக்கில்லாமல் அப்போது செலவானதற்கு திருவரங்கம் பெரிய கோயில், தில்லைத் திருக்கோயில், மதுரைக் கோயில், காஞ்சிக்கோயில், இவைகளே காட்சியாய் நிற்கின்றன இவைகளல்லாமலும் இன்னும் எத்தனையோ விஷ்ணு கோயில்களும் சிவன் கோயில்களும் நம் நாடெங்கும் விளங்கி நன்மை தருகின்றன. அக்காலத்து அரசர்கள் கோயில்களுக்கு மானியங்களும் ஸ்வாமிகளுக்கு ஆபரணங்களும் அபரிமிதமாய்க் கொடுத்தார்கள். நித்ய உத்ஸவங்களும் பக்ஷ உத்ஸவங்களும் மாத உத்ஸவங்களும் வருஷப்பிரம்மோத்ஸவங்களுமாக பற்பல திருவிழாக்கொண்டாட்டங்கள் பகிரங்கமாய் நிகழ்ந்துவந்தன. புகைவண்டியில்லாத கட்டைவண்டி காலத்தில் எந்தெந்த மூலைகளிலிருந்தோ உத்ஸவத்திற்கென்று வந்து கொண்டேயிருந்த ஏராளமான ஜனங்களுக்குக் கோயிலில் பிரசாதங்கள் கொடுத்து வந்தார்கள். மற்ற வெறும் நாட்களில் ஜீவனத்திற்கென்று தொழின் முறையால் ஊதியந்தேடாது தேவ ஆராதனை செய்தல், வேதாகம மோதுதல், யோக சாதனைபுரிதல் முதலிய தத்துவ தரிசனமாகும் உத்தம வழியில் உளஞ்செலுத்தினவர்கட்கு யாதொரு வருத்தமுமின்றிப் போஜன முதலியன நடக்கக் கோயில்களில் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. ஆழ்வார்களும், ஆசார்யர்களும், நாயன்மார்களும், தத்துவபோதகர்களுமாக எங்கெங்கும் இங்கிதம் விளைத்தமையின், ஞானமும் பக்தியும் ஆனந்த நற்குண நவரத்தினாபரணத்திற்கு அழகிய நடுநாயகமாக விளங்கின.

அபிப்பிராய பேதங்கள் அங்குமிங்கும் காணப்பட்ட போதிலும், மூடா வேசமும் மூர்க்கப் பிடிவாதமும் பாலைப்பாலையும் ஒருதுளி மோர்போல் பாழாக்கிவந்த போதிலும், மொத்தத்தில், அக்காலத்தில் தேவஸ்தான அமைதி மிக ஒழுங்காக விருந்தது. அந்த அற்புத ஆண்டுகளில் அதிகாரஞ் செலுத்திய அதிகாரபுருஷர்களுடைய பக்தியும் ஸ்ரத்தையும் உறுதியும் ஊக்கமும் ஒவ்வொருவரும் மெச்சத்தகுந்த மேன்மை யடைந்திருந்த தென்பதை

ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்வார்கள். வேத முடிவாகும் போதங்கடந்து, நாத சுகத்தின் நளினத்தையுங்கடந்து, தோற்றங்கடந்து, போற்றி செய்வார் பற்பலவிதமாய் ஏற்றங்கூறும் மாற்றங்கடந்து, வீதிவழியே வீதிவிடங்கன் வருவானாயின், ஹா ஹா! என்ன ஆனந்தம்! எத்துணை பேரானந்தம்! எவ்வகை பிரம்மானந்தம்! தத்துவந்தெரியாரும் தன்னை யறிவார்கள், உண்மை யுணராரும் உத்தமனை உணர்வார்கள், பக்தி பெருகாரும் பரமானந்தங்கொள்வார்கள்.

இக்காலத்தில் கோயில் என்றால் ஒரு பெருஞ்சோம்பேறி மடமாய் விட்டதென்பதை அறியாதார் யாவரிருக்கின்றார்கள்? வியாக்கியானங்களும் காலக்ஷேபங்களும் அர்த்தந்தெரிந்து அரிய பாடல்களைக் கனிவோடு சொல்லி இனிமை விளைப்பதும் கோயில்களில் காண்பதுகூடாமையாய் விட்டன. சகோதரர்களே! நான் சொல்வது பிசகாயின் என்னை மன்னியுங்கள்! என் மனத்திலெழுந்த ஆதராதிசயத்தாலும் உண்மை கூறி உண்மையை விளக்க வேண்டுவது இக்காலத்தில் இங்கு எனக்கு உரிய கடமை யென்று உள்ளத்தில் படுவதாலும், என் மனத்தில் எத்தனையோ நாளாயப் பதிந்து வதிந்து என் மனத்தை வருத்திவாட்டிய சில அபிப்பிராயங்களை உள்ளதுள்ளபடியே இப்போது வெளியிடுகின்றேனே யொழிய ஒருவர்மீது எனக்குண்டான மாச்சர்யத்தாலும் மனஸ்தாபத்தாலும் ஈங்கிது சொல்லவந்தே னல்லேன். தற்காலத்தில் அறிவை யபிவிர்த்தி செய்வதில் ஒருவரும் நாட்டம் காட்டி நர்ணயம் விளக்காது பணத்தால் மாத்திரம் பந்தல் பரப்பி, பேரால் மாத்திரம் தர்மம் நடத்தி, அஞ்ஞான விருளை அமாவாசை யிருளாக்குகின்றனர். இந்நாளில் பெருமாள் கோயில்கள சோம்பேறி மடமாய், திண்ணைத்தூங்கிகள் வண்ணச்சோற்றைப் புசித்து வயிற்றைத் தடவி வாயை விரித்து ஹே என்கிற ஏப்பத்தை விடுவதற்கென்றே அமைந்து விட்டன. சிவன் கோயில்களில் அனேகம் கோயில் சுடுகாடு என்றதற்கிணங்க, ஜீவனை யொழிந்தாற்போல், ஈசுவரனே யகன்றாற்போல் கோயிலுள்ளாரும் ஆங்கு தொழில் நடத்துவோரும் எல்லோரும் எக்காலத்திலும் தூங்குமூஞ்சிப் பெருமான்களாய் கும்பகர்ணவதாரங்களாய் விளங்குகின்றார்கள். பெருமாள் கோயில்களிலோ கூரத்தாழ்வார் செட்டியார் கூடை கூடையாய்த் தளிகைவிட்டால், ஆளவந்தார் செட்டியார் அண்டா அண்டாவாய்த்தளிகை விடுவார்! அச்சச்சோ! ஈதென்ன விந்தை; அக்கக்கோ; ஈதென்ன கொள்ளை! இவர்கள் போட்டி போட்டுத் தளிகைவிட்டு வயிற்றை நிரப்பி வாட்டந்தீர்க்க வந்ததற்கு யானேதும் முறையிட்டுக் குறைசொல்ல வந்தேனல்லேன். என்? இவ்வளவு பணம் செலவிட்டு, இவ்வளவு கஷ்டப்பட்டு, இவ்வளவு சிரத்தை மேற் கொண்டு, இவ்வளவு கோலாகலங்காட்டி, அன்னதானத்திலும் சர்க்கரைப்பொங்கல், புளியோரை முதலிய வன்னதானமிட்டு வயிற்றின் குறையை வாகாய் ஒழிக்க வந்தவர்கள் அறிவின் குறையை ஒழிக்க அரை நிமிஷமாவது சிந்தித்தலாகாது? அவ்வாறு அவர்கள் செய்வார்களாயின், தத்துவத்திற் கென்றே சித்தம் வைத்து, உண்மையைக்கண்டு பிடிப்பதிலேயே ஊக்கம் காட்டி ஜோ என்ற உலகக்கூச்சலைப் போ என்றகற்றி நீப்போன்ற பணத்தைச் சீப்போ

என்றெடுத்துக்கி யோகாப்பியாசங்களும், ப்ரம்ஹ வித்யாப்யாசங்களும் தேவ வழி பாடுகளும் சன்மார்க்க அனுஷ்டானங்களும் செய்வதில் தலையிடு வோர்கள் மேன்மேலும் பிரபலித்து அன்னோர்கட்கே பெரும்பாலும் அவ் அன்னப்பாங்குகள் உபயோகப்படு மல்லவா? அப்போது குடையைத் தூக்கி கும்மாளங்கொட்டிக்கூரத்தாழ்வார் சீடரெனக் குதூகலிக்கும் குப்பனையங் கார் கோயிலை விட்டு க்ளாதிங்போர்டில் வேலை பார்த்துக்கொள்ளவும், பொருளைக்காணாது இருளிலாழ்ந்து வேதஞ்சொல்லும் பேதைப்பிள்ளை விடிய எழுந்து பள்ளிச்சென்று அரிச்சுவடி ஆரம்பித்து அறிவை வளர்க்க வும் நேருமல்லவா? அரிச்சுவடி 'படிக்காதவன் ஆசார்யபுருஷனாப் ஊரை ஏமாற்றி உருப்போடுவிக்க வேண்டுமென்று உடையவரெங்கேனும் உரை த்து வைத்தாரா? ராமானுஜர் பரமதயாளு—புத்தியைக்காட்டிலும், அறிவைக் காட்டிலும் அன்பே பிரதானம் என்பதை நடக்கையிலே காட்டின ஞான பாநு, அவர் சீர்திருத்தஞ்செய்து ஊர் திருத்தஞ்செய்வதில் ஒப்பாரும் மிக் காருமில்லாதபடி உழைத்துஉழைத்து உண்மையே நாடி வண்மையே அடைந் தவர்அவர் பக்தியிருந்தாற்போதும் என்று பறையனைத்தொழுத பரமபுருஷர், ராமானுஜர். இக்காலத்தில் அவர் பேரைச்சொல்லி பிரசாதஞ் சாப்பிட்டுப் பிழைத்துப்போவோர் எத்தனை பேர் ராமானுஜர் உபதேசரத்தினத்தை உச்சி யிற் கொண்டிருக்கிறார்களென்று நோக்குமளவில், ஐயையோ பரிதாபம், ஒருவரும் கிடையாரென்று ஏற்படுகின்றது. 'பண்டைக்குலத்தைத் தவிர்த் துப் பல்லாண்டு கூறுதுமே' என்றும் "குலந்தாங்கு சாதிகள் நாலிலுங் கீழி ழிந்தெத்தனை நலந்தா னொன்று மில்லாத சண்டாள சண்டாளர்களாகிலும் வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணர்க்காளாகில், * * * அடியார் அடியார் அவர்தம் அடியார்" என்றும் வைணவ ஆழ்வார்கள் கூறி யிருப்பதை எந்த தற்கால ஆசாரியரென்று கூறப்படுவோர் அனுஷ்டிக்கிறார் கள்? அப்பளாசாரி சாப்பிடுவதை ஆமவடை ஆசாரி பார்க்கக்கூடா தென்றும் அடுப்பங்கரை அம்மாள் சாப்பிடுவதை துடுப்புக்கை அம்மாள் பார்க்கக்கூடா தென்றும் மாமி சாப்பிடுவதை மருமகள் பார்க்காமலும் மருமகள் சாப்பிடுவதை மாமிபார்க்காமலும் திரையிட்டு அறிவிற்கே மறைவிட்டு, பண்டைக் குலத் தைத் தவிர்ப்பதை விட்டுப் பண்டைக்குலத்தை வெகு சிறிதும் பொருத்தமே யில்லாத இக்காலத்தில் உடும்புப்பிடியாய்ப் பிடித்து அடஞ்சாதிக்கிறார்கள்! ஒரு காலத்தில் சென்னையில் நடந்த ஒருகருடோத்ஸவ சமயத்தில் ஸ்வாமிக் குப் பிறகே வேதஞ்சொல்லிக்கொண்டுபோகிற கோஷ்டியில் ஒரு இருபது வயது பிள்ளை, கங்கைகொண்டான் மண்டபம் சீக்கிரம்வரவில்லையே, என்று வயிறெரிந்து வாய்விட்டு'வயிறு பசிக்கிறதே,வயிறு எரிகிறதே'என்று வேதஸ் வரத்தோடு சேர்த்து, அவர் உபயவேதாந்தப்ரவர்த்தகாசாரியர் என்பதைக் காட்ட, வடமொழியோடு தென்மொழியையுஞ் சேர்த்து வாகாய்ப்பாடினர். இப்படியெல்லாம பேசுவதால் நான் வேண்டுமென்றே பிராமணர்மீது குறை கூறுகின்றே னென்றாவது நான் ப்ராமணத்வேஷி யென்றாவது எண்ணி எள்ளி யிகழவேண்டாம். பிராமண ரத்னமாகிய ஸ்ரீராமானுஜர் கொள்கைக்கு முற்றும் முரண்பட்டு முறை தடுமாறிப்போகிறதே யென்னும் ஆற்றாமை

யால் இங்கு யான் சில பல சொல்ல நேர்ந்ததேயன்றி எவரையேனும் குறை வாய்ச்சொல்லவேண்டுமென்னும் இழிவான எண்ணத்தினாலன்று. நாலாயிரப் பிரபந்தத்தைச் சேவாகாலஞ் செய்யும்போது, தமிழ்மாற்றஞ் சொல்லுவதாய்க் காணுமே மொழிய தமிழ் சொல்வதாய்த் தெரியாது. இன்னோசை தன்னை இயற்கையிலுடையதாய், சந்தப்பெருமை சுந்தரத்தோடியைந்ததாயுள்ள நந் தம் செந்தமிழை, உடல் குழைய உரோமஞ் சிலிர்க்க என்பு நெக்க நெக்குருக, அகங்குழைய மனங்குழைய ஆனந்தத்தேன் பாய, வந்தார்மனத்திலும் வாரார் மனத்திலும் சிந்தாகுலம் நீங்கிச் சீர்மையுற்றெடுக்க, ஆழ்வார்கள் தந்த அரு ளிச் செயல்களைப் பூர்ணிமையைக்கண்ட புல்டாக்குகள்போல் அர்த்தந் தெரி யாது அகோரகதி செய்வது ஆகாத காரியமல்லவா, தகாதசெயலல்லவா? இத் தகைய குறைகளை ஒழிக்க முயல்வது, தேவஸ்தானத்தில் தர்மமியற்றுவோ ருடைய திருந்திய கடமையாகும். தேவஸ்தானங்களில் தர்மம் இயற்றுவோ ரும், தர்மத்திற்கென்று தன ஸ்தாபனஞ் செய்வோரும் இச்சீர்திருத்த விஷ யங்களில் சிந்தை செலுத்துவார்களாயின், அன்றே, அப்போதே, அக்கண மே, கோயில்கள் வழிபட்டுப பரமபதவாயில்களாகிவிடும். விஷ்ணு ஆலயங் களில் விகாதம் நீக்குவதுபோலவே சிவாலயங்களில் செய்யக்கடவ சீர்திருத் தங்கள் அனேகம் உள்ளன. திராவிடவேதமாகிற திருவாய் மொழி முத லியவைகளுக்கு வைணவ சந்நிதிகளில் மரியாதை செய்வதுபோலவே சிவ சந்நிதிகளிலும் தேவார திருவாசகாதிகட்கு மரியாதை செலுத்தி அவைக ளைப் பாராயண கிரமத்தில் வைக்கவேண்டும். சேவைகைங்கரியம் செய்வோர் களுக்கும், லௌகிக வியாபாரமில்லாது வைதிகச் செயல்களில் மனஞ் செலுத்தி, தத்துவ ஆராய்ச்சியில் தலையிட்ட பக்தர்களுக்கும் பரதேசிகளுக் கும், ஆகார விஷயத்தில் அக்கவலை வைக்காது சைவசந்நிதிகளிலும் பிரஸாத ஏற்பாடுகள் அமைக்கவேண்டும். காலேஜ் ஹால்களும் பிரசங்க மண்டபங்க ளும் இல்லாத காலங்களில் அவ்வக்கிராமங்களில அவ்வக்காலங்களில்நேரிட்ட வித்வக்கூட்டங்கள் ஆலயங்களிலுள்ள ஆயிரங்கால் மண்டபங்களிலும் வேறு மண்டபங்களிலுமே நடைபெற்று வந்தன. கம்பன் செய்த ராமாயணம் கண் ணிய அரங்கர முன்னே கவியரங்கேறினதே இதற்குக் கனமே பொருந்திய சான்றாகும். தேவஸ்தான தருமஞ்செய்வோர்கள் இனிமேலாவது அங்கங்கு நடக்கும் உத்ஸவகாலங்களில் வித்வக்கழகம் சேர்த்து அறியாமையை அடி யோடே அகற்றுவது அவர்களைப்பொறுத்த அரும்பெரும் கடமையாகிறது. இங்கு இது சம்பந்தமான மற்றொரு விஷயத்தைப்பற்றியும் பேசவேண்டி யிருக்கிறது. கோயில் எதுக்கு? குளங்கள் எதுக்கு? உத்ஸவங்கள்செய்து லக்ஷக் கணக்கான பணம் செலவிடுவதைக்காட்டிலும் அப்பணத்தை வேறுவழியில் உபயோகப்படுத்தி ஆலைகளும் தொழிற் சாலைகளும் அங்கங்கே ஸ்தாபித்து வேலையில்லாதாருக்கு வேலைகொடுத்து பணத்தைப் பெருக்கினால் பரதகண் டத்திற்குலாபமாயிருக்கும். அதை விடுத்து செம்புக்கும் கல்லுக்கும் சிங்கா ரிப்பு நடாத்தி மரவாகனத்தின்மீது பதுமையை வைத்து மத்தாப்பு தீவர்த்தி மகா சொகுசாய்க் கொளுத்தி ஊரைச்சுற்றி வருவது எதுக்குப்பிரயோசன னம் என்று எத்தனையோபேர் அபிப்பிராயப்படுகிறார்கள் [illegible] தேவஸ்

மான காரியங்களில் உத்ஸவஞ்செய்வதும் பிரசாதம் கொடுப்பதும், தாளம் தட்டி மேளம்கொட்டி தமிழின் தலையைத் தட்டி கண்ணை மூடிச்சுவரில் முட்டிக்கொள்வதே முழுக்கெட்டிக்காரத்தனம் என்று ஒரு ஆவேசக்கக்ஷி யார் கூறுவது போலவே, கோயிலைக் குட்டிச்சுவராக்கி, திருநாளையெல்லாம் வெறும் நாளாக்கி பொழுதுவிடிந்ததும் வேலைசெய்வதும் தின்பதும் திரிவதும் உண்பதும் உறங்குவதுமாகவே யாய்விடவேண்டுமென்று கூறுவது நேரெதிரான அபிமதக்கோட்பாடென்பது எம்முடைய அபிப்பிராயம். கோயிலும் வேண்டாம் சாமியும் வேண்டாம் என்று ஒரே பிடிவாதமாய் ஊரைக் கலக்குகிறவர்களுடையஅபிப்பிராயம்சரியென்று எனக்குத் தோன்றவில்லை.

ஹா! ஹா! கோயில்களின் பெருமையைக் கூற முடியுமா? உத்ஸவங்களின் நன்மையை யுரைக்கலாகுமா? கோர்ட்டுகளில்லா விட்டால் கொடுரங்களுக்குப் பரிகாரங்களும் கொடுமைகளுக்குத் தண்டனையும் எப்படிக் கிடைக்காவோ அப்படியே கோயில்களில்லாவிட்டாலும் உத்ஸவங்களில் விட்டாலும் கோரமானகொடுமைகளுக்கும் குரூரமான பாதகங்களுக்கும்அஞ்சாமை நேர்ந்து அபாயம் உண்டாகும். கன்னெஞ்சு படைத்தோரும் கள்ளத்தன முடையோரும் கோயிலைச்சேர்ந்து வாயிலைக் கிட்டிய மாத்திரத்தில் கல்லும் கரைந்தது, வைரமு முருகிற்று, புல்லும் புலம்பிற்று, முள்ளும் முளைமழுங்கிற்று என்னும்படி ஒரு நிமிஷமாயினும் உள்ளம் உருக்கெடுத்துப் பரவசமாகிப் பக்தி ஆறெடுத்து, மெய்யை வீழ்த்தி மெய்யை நினைந்து கையைத் தூக்கித் தலைமேலெடுத்துத் தன்னைக்காக்கத் தலைவனை வேண்டி தருமஞ்செய்வேன், அதருமம் ஒழிப்பேனென்று கண்ணிய எண்ணமும் கருத்திலுதித்துப் புண்ணியஞ்செய்யப் புத்தி வருகின்றது. கொலைசெய்யத் துணிந்த கோரமா பாதகன் கோயிலுக்குப்போவானானால், கத்தியால் கொல்லும் கருத்துமாறி ஒருவேளை கட்டையால் அடித்து மாத்திரம் காணுதகலலாமென்று புத்தி தோன்றினும் தோன்றும். இஃதிவ்வாறிருக்க, இப்போது எம்பெருமான் வெளியே புறப்பட்டான்! அந்தணர் கூட்டம், அற்புதர் கூட்டம்! கோயிலில்லாவூரிற் குடியிருக்கக்கூடாதாயின் திருநாளில்லா ஊர்க்கு ஒருநாளும் போகவேண்டாமென்றே சொல்லக்கூடும்! எங்கெங்கு பார்த்தாலும் சிங்காரமும் அலங்காரமுமாயே விளங்குகின்றன வீட்டினின்றும் மூதேவியை ஓட்டிவிடுவோமென்று வீட்டு வெளியில் விளக்குகள் காண்கின்றன—கோவுக்குக் கோ வரும் கோலங்காண்பீராயின், கோபமும் தாபமு மாகிற கோலங்களெல்லாம் ஆலாகோலமாய் விடுமென்று வீதியெங்கணும் கோலங்கள் விமரிசையாய் விளம்புகின்றன நல்லவரும் கெட்டவரும் நாவலரும் பாவலரும் எல்லவரும் அங்கே இனிதின் வந்துளார்! அப்புறஞ்சந்தடி இப்புறம் கோஷ்டம், எப்புறமும் ஜனக்கூட்டம். கருமமே கண்ணாயினார்க்கு எல்லாத்தொல்லைகளிலும் பொல்லாச் சண்டைகளிலும் கருமமே கருத்தாவதுபோல், கூட்டத்திலும் கோஷ்டத்திலும் ஆட்டத்திலும் அலங்காரத்திலும், ஐயன் பக்தியும் அன்பின் மாட்சியும் தமக்குத்தாமே உள்ளுக்குள்ளே உதயமாகின்றன. அவ்வாறு அதமன் அகத்துள்ளேயும் அந்தகாரமாகிற

போர்வைக்குள்ளேயும், மட்பாத்திரத்துள்ளே மாணிக்கம் வைக்கப்பெற்றாற்
போலாவது விளங்கும், பக்திப்பெரு விளக்கை, ஞானச்சுடரின் நாயக ஒளி
யை அவிப்பதற்கு முயலுங்கள் பார்க்கலாம்—அஃது ஆகவே யாகாது. ஆயி
ரம் பேரல்லர், அண்டாண்ட பிரம்மாண்டங்களிலுள்ள அத்தனை பேரும்,
சராசரம் முற்றவும் ஒன்று சேர்ந்து உள்ளே தோன்றின உண்மையை அழி
க்கவேண்டு மானாலும் அஃது ஆகவேயாகாது. சங்கராபரணத்தின் இங்கிதத்
திற் பொங்கிப் பூரித்து; பைரவியின் கௌரவத்தில் பரவசம் மிகக் கொண்
டு, காம்போதி ராகத்தால் கனிவின் ரசத்தைக் கற்கண்டின் பெருஞ்சுவையை
முப்பழத்தின் முதிர் சுவையைப் பருகிப் பருகி நாகவராளி பாடிக் கொண்டு
நாகஸ்வரம் கேட்க நானூறு பேர் வருகிறார்கள். முகத்தைக் கண்டு மோகங்
கொண்டு, அழகைக் கண்டு ஆனந்த மடைந்து, பூவை மொய்த்து வண்டினஞ்
சுற்றுவதுபோல், மின்னற் கொடியாரை அப்பரஞ்சி நிறத்தாரை கூந்தற்கரி
யாரை, எண்ணற் கரியாரை, குவளைக்கண்ணாரை, கொவ்வைபுண்ணாரை,
பானைபானையாய்ப் பாலைக்காய்ச்ச இன்ப எடு ஓர் புறம் இனிதின் உறைந்
தாலென்ன அந்தரத்துள்ள சுந்தரந் திரண்டு அங்கே வந்து ஆவிர்ப்பவித்த 'அற்புத
வேசிகளை' பொற்புடைத் தாசிகளைப் பார்த்துப் பார்த்துப் பரவசங்கொள்ளப்
பதினாயிரம்பேர் வருகிறார்கள். வேடிக்கை பார்க்க எத்தனை பேர், விநோ
தம் பார்க்க எத்தனை பேர்! சுடர்கொள் ஜோதியை தேவர்களும் முனி
வர்களும் தொடருவார்களாயின், ஆனைகளும் குதிரைகளும் பக்தர்களும்
பரிஜனங்களும் எண்ணில்லாமலங்கு இடைவிடாமல் நெருங்கி வரக்கேட்பா
னேன்? ஜோதி ஜோதி ஜோதி சுயம், ஜோதி ஜோதி ஜோதி பரஞ், ஜோதி
ஜோதி ஜோதி யென்று சுந்தரத்தீவர்த்திகள் சுடர் விட்டெரிகின்றன!
பவளமேனியன் பரமன், செக்கர்வானிறத்தோன் சிவபெருமான், எம்பெரு
மான் செம்பொன் மேனியன் தம் பெருமான் நம்பெருமானென்று செவ
ப்பு மத்தாப்புகள் ஜெகஜ்ஜோதியா யெரிகின்றன! பச்சைமாமலை போல்
மேனி எம்மண்ணல், ஊனக்கண்ணிற்கும், பச்சை உறுதி யளிப்பதைக்கண்
டாவது ஞானக்கண்ணிற்குப் பச்சைவண்ணன் நற்பலன் தருவானென்று
நாடி நீவிர் நண்ணலாகாதா, ஆடி நீவிர் அகங்குழையலாகாதா, பாடி நீவிர்
பதம் பெறலாகாதா என்று பச்சை மத்தாப்புகள் பரமானந்தமாய்ப் பாடங்கற்
பிக்கின்றன. வெள்ளைக்கில்லை கள்ளச்சிந்தை என்று மூதோர் கூறியமுது
மொழிக்கேற்ப கள்ளங்கபடில்லாத வெள்ளை மனத்தூய்மையை மெள்ள
நீவிர் பெறுவீராயின் பக்தி தானே தன்னை அள்ளி அள்ளிக் கொடுக்குமே
யென்று வெள்ளை மத்தாப்புகள் வேண்டிய மட்டும் உபதேசிக்கின்றன! சுற்
றிச் சுற்றி யடிக்கும் சூறாவளி யென்ன மெத்த மெத்த வருத்தி, மக்களைச்
செத்துச் செத்துப் பிழைக்கச்செய்து பிறப்பு என்கிற சக்கரம், இறப்பு என்
கிற மாய்வு இந்த சுற்றுச்சுழற்சியில் உருண்டு சுருண்டு உயிர்விட்டு உயிர் பெ
ற்று மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்து மாண்டு மாண்டு மண்ணுடன் சேர்ந்து
ஊஞ்சலாடுவதென்ன உயிர்வருதலும் போதலுமாக சஞ்சலமாகிற சக்கராகாரத்
தில் சாய்ந்துசாய்ந்து சருகாதலைச்சக்கரபாணங்ககள் சாகஸமாய்க்காட்டிச்சக்க
ரத்தண்ணலைப் பணிய மிக்ககாதலுடன் வேண்டி வினைதீர்க்கின்றன! கீழ்மை

யகற்றி மேன்மை பொருந்தி உச்சியை நோக்கி உயரப்பாருங்கள், உத்தமனைக் காண்பீர்கள், உன்னத பதவியடைவீர்களென்று மாகான ஆகாயபாணம் பாகானமொழிகளால் யோகானுபவத்தைச் சொல்லுகிறது. ஒன்றின்பின் ஒன்றாக விடாமுயற்சியோடும் தளரா ஊக்கத்தோடும் பக்தி புரியுங்கள் தவத்தைப் பேணுங்கள், சற்கருமஞ் செய்யுங்கள் என்று சிதைவில்லாப் புதை பாணம் சிந்தையிற் பதிக்கின்றது. இத்தகைய கோலாகலத்துடன் நடக்கும் திருவிழாவிற்கு எத்தனை பேர்—எத்தனைவித வெவ்வேறு குணமுடையவர்கள் போன போதிலும் எல்லோர் மனத்திலும் அல்லது ஊனத்துள் மனத்திலும், சல்லாபமான உண்மை சாகஸமாய் நுழைந்து விட்டது. இவ்வளவு அருமையான பொருளொன்றில்லாவிட்டால், அறத்திற்கே பெருங்கேடு வந்துசேரும். உண்மையில் கடவுள் ஒருவருளராகாவிடினும், உலகநன்மைக்கு ஒரு கடவுளுண்டாக்கி விடுவேனென்று நிரீஸ்வரவாதியான தத்துவவாதியொருவர் சொன்னாராம். ஆகையால் எல்லா அறத்திற்கும் சாதகமாய், எல்லாநன்மைகட்கும் தனிப்பெரும் வித்தாய், எல்லா உண்மைகட்கும் இனியதோர் மன்று போலாயுள்ள தேவவழிபாட்டையும் தேவாலய ஏற்பாட்டையும் உத்ஸவாதிகள் முதலிய கொண்டாட்டத்தையும் காலத்திற் கேற்ற வண்ணமும் இடத்திற் கமைக்க விதமாகவும் யான்முன்னர் சொன்ன படி சீர்திருத்தங்கள் சிலபல செய்யலாமே யன்றி அவற்றை அடியோடே ஒழித்து விடுவது ஆகாதகாரியமாகும்.

தேவநாதனை நேராக நோக்கிச்செய்யப்படும் தரும கருமங்களைப்பற்றி இதுகாறும் வெகுவாய் விரித்துக்கூறி இப்போது மனிதரையே இலக்காக வைத்துச்செய்யும்மாண்புடைய தருமங்களைப்பற்றி பேசுவதில் காலமிலாமை பற்றி, வெகு சுருக்கமாய்ச்சிறிது கூறிப்பின்னர் முக்கியமான ஒரு விஷயத்தைச்சொல்லிமுடித்துப்போகிறேன்.

மடங்களும் அவைகளின் தொழில்களும் இன்னவென நாம் யோசிக்குமிடத்து, எல்லாத்தருமங்களையும் எல்லாத்தேவாலயங்களையும் கல்வியிற்றும் கசடற்ற ஒப்பற்ற தருமங்களையும் வித்வான்களை ஆதரிக்கும் நற்பெருங்கருமத்தையும் கவனித்துக்கணக்கற்ற நன்மைபுரிய வேண்டுபவர்கள் மடாதிபதிகளே யாவர் என்று ஏற்படுகிறது. சைவமடங்களும் வைணவமடங்களும்எண்ணிலாதன எத்தனையோ லக்ஷக்கணக்கான வரும்படியை வைத்துக்கொண்டிருப்பவை நம் இலக்கிய அபிவிர்த்தியிலும் தற்காலஆங்கில தத்துவ தர்க்கசாஸ்திரங்களுக்கிணங்க நம் தத்துவ தர்க்கசாஸ்திரங்களை முறைப்படுத்துவதிலும் மனஞ்செலுத்தி மாண்புடன் கிருபை புரிவார்களாயின்,

இரவெலாங்காமக் கணிகையர் முயக்கி லின்பமுற்று இயற்பகலெலாங்
குரவரா யணி வெண்ணீற்றுருத்திராக்கக் கோலமார்ச்சால மாங்குழைவும்
பரவு பாவனையும் தேவதார்ச்சனை தாம்பண்ணல் போலுருப்பல பரப்பி
விரவுமாமணி தொட்டாட்டலும் பார்க்கின் மிகக்கொடிதிவர் வஞ்சவேடம்.

தூசு நீர்க்காவியுறப்புனைந்தணிந்து துளிசி தாமரைமணி தோண்மே, லாசின்
மூப்பிளமை சாதிவேற்றுமைகளகன்றவர்க்காயினுந், தாசனென்றிறைஞ்
சிப்பலர்பொருள் கவர்ந்துச்சீவியா நிற்பவரென்று,மாசிலாதவர்போலிருந்தன
ரிவர்போல் வஞ்சனை யாவரேவல்லார் — என்னும் பிரபோத சந்திரோதயப்பா
டல்கள் அவர்களுக்கு ஒருக்காலும் பொருந்தாமல் ஓடிவிடும்.

• மற்று, அன்னதானம் செய்தல், சத்திரம்சாவடி அமைத்தல், குளம்
கிணறு தோண்டல் சோலைகளும் சாலைகளும் பெருகவைத்தல் முதலிய தரு
மங்கள் ஜனசவுகரியங்களுக்கு இன்றியமையாதனவே. தற்காலத்தியஅன்ன
தான சமாஜங்களும் சோம்பேறி மடங்களாய் விடாமல் பாதுகாத்து வேலைச்
சாலைகளாய் அவைகளை மாற்றி தொழில் செய்யக்கூடியவர்கள் அவ்வவர்கட்
குத் தெரிந்தவேலைகளைச்செய்து தொழிற்சாலைக்குவருவாய் வைக்கவும் தொ
ழில் செய்யமுடியாத கூன் குருடு நொண்டி சப்பாணி கையொடிந்தோன்
காலறுந்தோன் முதலியஅசக்தியுடையவர்கள் தருமத்திற்குப்பாதுகாக்கப்பட்
டும் வந்தால் தருமக்கோயிலின் இப்பகுதியும் பெருமையோடு விளங்கும் என்
பது எனது துணிபு.

இனி இதுகாறும் சொன்னவற்றிற்கெல்லாம் முக்கியமான தொருவிஷ
யத்தைச் சொல்லிமுடிக்கவேண்டியிருக்கிறது. நம்மவர்களுள் ஒவ்வொருவரு
ம் அதை ஊன்றி ஆலோசித்து அதற்கு உறுதிதரவேண்டுவது ஒவ்வொரு
வரையும் பொறுத்த கடமையாயிருக்கிறது. அஃதாவது, நம்இலக்கியத்தை
அபிவிர்த்தி செய்து, காலத்திற்கேற்ப காவியங்களும் வசனநூல்களும் இயற்
றி அறிவைவளர்த்து அன்பைப்பெருக்கி, அறத்தை மேன்மையுறச்செய்து
மறத்தை வேரோடுகளைந்து வெந்நீர் வார்க்கவேண்டுமென்பதே. ஆங்கில தே
சம் முதலிய ஐரோப்பிய தேசங்கள் அறிவு நூல்களையும் ஸைன்ஸ்களாகிற
விஞ்ஞான சாஸ்திரங்களையும் ஆயிரக்கணக்காய்ப்பெருக்கி அதே தொழிலாய்
ஆயிரக்கணக்காயமர்ந்து, அச்சான ஐம்பது லக்ஷநூல்களையும் அதேகணத்தில்
விற்பனை செய்து, விஞ்ஞான சாஸ்திரமுறைகளையும் அஞ்ஞானப்போக்கின்
ஆபத்துகளையும், ஆய்ந்து ஆய்ந்து வகிர்ந்து வகிர்ந்து, ஆராய்ச்சிகள் செய்து
அறிவைவிர்த்தி செய்துகொண்டுபோவதால் தான்-மேற்கூறிய ஐரோப்பிய
அமெரிக்காதேசங்கள் மேன்மையுற்று மின்னிப்பொலிகின்றன. இதனாற்
றான், நீராவி யந்திரங்களும் மின்சாரதந்திரங்களும் ஏராளமாய்ப்பெருகி
ஏற்றம் விளைகின்றது. ஆவிகொண்டு தாவிச்சென்று ஆயிரக்கணக்கான
மைல்களையும் அதி சீக்கிரத்தில் தாண்டிவிடும் புகைவண்டிகளும் புகைக்கப்
புல்களும்,கண்மூடிக் கண்திறப்பதற்குள் விந்தையாக தந்திசமாசாரங்கள் கண்
டங்கடந்து காசினிகடப்பவை கம்பியுமில்லாது இப்போது காட்சிதருவ
தும், உருவத்தைப்படத்திலிடுவது போதாது, பேச்சையும் பிடித்துப்போன
கிராபிலடைப்பதும் போன்ற அரிய பெரியகாரியங்கள், கண்ணையுங்கடந்து
கருத்தையுங்கடந்து கவின்பெற விளங்குவவெல்லாம், கல்விப்பெருக்காலும்
அறிவின் பெருக்காலும் உண்டாவனவேயன்றி வேறன்றே. அதுபோல்
நாமும் அறிவைப்பெருக்க வேண்டாவோ? இதற்கின்றியமையாத இலக்கி

யத்தை லக்ஷக்கணக்காய் எழுதவேண்டாமோ! இக்காரியத்தை முன்னுக்குக் கொண்டுவருவதே இகலோக அறத்துளெல்லாம் இன்பம் தருவதாகும், இல க்ஷணமுடையதாகும். கவித்திறத்திலும்,கற்பனசக்தியிலும் நம்மனோர் கற்பக தருவாயும் காமதேனுவாயும் விளங்குகிறார்கள்.

கம்பன் பாட்டைக் காதலிக்காதவர் யாவர்? சொற்சுவையிலும் பொருட் டிறத்திலும் கவிச்சக்கர வர்த்தியாகிய கம்பன் பாட்டிற்கு மிஞ்சி காசினியில் வேறு கிடையாது. பூவைக்கண்டார், புனலைக்கண்டார், மாவைக்கண்டார் மரத்தைக்கண்டார், ஆவைக்கண்டார் அறத்தைக்கண்டார்—அங்கங்கே நின்று ஆறுமணிநேரமாயினும் ஆனந்தம் விளைப்பவர், கதையின் அவசரத்தால் காதம் நடக்கவேண்டியதாயின், ஆட்டக்குதிரை ஓட்டம்பிடிப்பது போல் பாட்டுப் பாடிப் பதின்காதம் செல்வாரே.—கம்பன் பாட்டே கவின் பெறு பாட்டு என்று சலிப்பில்லாமலும் வெறுப்பில்லாமலும் சந்தோஷப்படுகிறோமன்றோ? ஆணிப்பொன்னில் மாணிக்கமழுத்தியதுபோல் இயற்பாவின் இன்சுவையில் சொற்போக்கின் பொற்பிழைத்த, பூவுக்கரசரும் போற்றிசெயும் நாவுக்கரசர் நற்றமிழை, எத்தனை நாளாய் இசைத்துவருகின்றோம்? திருவருள் கொண்டு திருவாய் மொழி பாடியகுருபரன், கோதிலாக்குணக்குன்று, நம்மனோரனைவ ரையும் வாழ்வித்த நவையிலா ஞானத்தான், ஆகாய வீதியில் அச்சுதன் விழா வுக்கு நாதப்ரம்மமே வேதந்தன்னை யோதிவந்தாற் போன்ற கம்பீரப் பொ லிவும் பொருட்சிறப்பும் அருட்பெருக்கும் உத்தமக்கொள்கைகளும் உன்னத நிலைகளும், நன்றே விளங்க அன்றே புகன்ற அற்புதப் பெருந்தகை-ஸ்ரீசட கோபன்-திருவாய் மொழியாகும் ஒருவாய் மொழியை ஞானதேசிகன் அற் புத மொழியாகும் அருள்மொழியை—முனியே நான்முகனே முக்கண்ண ப்பா என்று கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோரநின்று, அவாவறச்சூழ ரியை யயனை யரனை யலற்றி அவாவற்று வீடுபெற்ற அற்புதன்றன் அருமொ ழியை, கற்கண்டின் கனிமொழியைப் பாடிப் பாடிப் பரவசமாகவில்லையா? மனத்தைக்கரைத்து மலத்தைகெடுத்து வானினின்றும் தேனைப்பொழிந்து பக்தியாறு பரிணமித்தோட சித்தம்குவிந்து சிவனையே நாட, மணிவாசகர் சொன்ன திருவாசகத்தைப் போற்றி, மனமாரத் துதித்தேற்றிப் புகழவில் லையா? இவ்வாறு இன்மொழிகள் பொன்மொழிகள் ஏற்கவே நமக்கு உள்ள னவாக, இசை நுணுக்கமும் இயற்றமிழின் ஏற்ற வீழ்ச்சிகளும் இங்கிதம் காட்டும் சிங்காரச்செல்வமும் எவ்வளவு வேண்டுமானாலும் நம்மிடம் கிடைப் பனவாக, இக்காலத்திற் கியைந்த வண்ணம் இயற்றமிழும், இசைத்தமிழும், நாடகத்தமிழும் விஞ்ஞான சாஸ்திர வித்யா மண்டலமும் நமக்கு விர்த்தியா குமாயின் அஃதே நம்முடைய அறிவை நாளடைவில் அபிவிர்த்தியாக்கும். அறிவுவளர, அன்புவளரும்; அன்புவளர அறம் வளரும்; அறிவை இவ்வாறு வளரச்செய்வதே அறத்துண்மிக்க அறமாகும் நம்தேயத்துள்ளமன்னர்களும், மாசறக் கற்றவர்களும் மடாதிபதிகளும் ஆலயத்தலைவர்களும், தனவான்க ளும் கனவான்களும் எல்லோரும் ஒருமித்து எல்லோரும் மனமுவந்து எல் லா அறத்தினும் மிக்க இந்த இனிய நல்லறத்தை ஈடேற்றுவார்களாயின்,

அன்றே அப்போதே அக்கணமே தருமம் பழுத்துத் தருமம் தருமமே யாகும்
அப்போது தருமத் தடாகத்தில் தங்கத்தாமரை பூத்து, தரும விருக்ஷத்தி
தங்கப் பழம் பழுத்து தருமக்கோயிலில் தங்கக் கலசமும் நடுவே நவரத்ன
கலசமும் நன்றாக விளங்கும்.



# அறம்.

மூதறிவிற் சிறந்த சோதரர்களே,

> "பொதியிலே விளைகின்றன சந்தனம் பொதிசூழ்
> நதியிலே விளைகின்றன முத்த மந்நதி சூழ்
> பதியிலே விளைகின்றன தருமம்" என

தாம்பிர பருணி நதியினாற் சூழப்பெற்ற (கலைமகளின் திருநுதல் போன்ற) இத்திருத்தலமே தருமத்திற்கு விளை நிலமெனப் பரஞ்சோதி முனிவராற் சிறப்பிக்கப்பட்டிருத்தலால், அத்தகைய மாண்பமைந்த வித்தலத்தினோர்க்கு, என் சிற்றுரை முற்றுரையாகா தென்பது தேற்றமாயினும், அரும்புலமைப் பெருங் கேண்மையாளர் பலர் கருத்தினை மறுக்க வஞ்சி, இப்பேரறிஞர் குழாத்தில் தன் பொருட்டுக் கூறுதலென்னும் கொள்கை மேற்கொண்டு, என் சிற்றறிவிற் புலனாகும் சிலவற்றை வெளியிட முன் வந்தேன். இதனை அரும்புலமையாளர் பலரும் அன்பு கூர்ந்து செவியேற்பாராக.

அறம் என்னும் ஒருமொழியாகிய திருமொழியின் பெருமை அளப்பிட வெளிதோ? அறம் என்னும் அஸ்தி பாரத்தின் மேலன்றோ ஆரியரின் மதக்கட்டிடங்கள் கட்டப்பட்டுள? அறம் என்னும் இருப்புப்பாலமன்றோ மன்னுயிர்த்தொகுதிகளைப்பிறவி யென்னும் பேராற்றினிடை வீழாவண்ணம் கதிக்கரை சேர்ப்பது? அறம் என்னும் தருவில் காய்த்துக்கனிந்து அளிந்த மதுரமான கனிகளன்றோ மாந்தராவார் அடைந்துவக்கும் கணக்கற்ற சுகபோகங்களும் அழியாப் பேரின்பமும்; அறம் என்னும் பழுமரத்தின் விழுதுகளின் தொகுதிகளன்றோ இதரமான எண்ணில் நீதிகளும் நற்செய்கைகளும்.

அறமென்னும் பெருங்கடலில் அடுத்தடுத்து வரும் அலைகளன்றோ, ஆற்றலும், வெற்றியும் வாழ்வும், வளமும், நீதியும், நெறியும், இன்பமும் மகிழ்ச்சியும், இதுபோன்ற இன்னும் பலவு மெனக.

தரும தேவதையாக நமது வேதாகமங்களில் வியந்தோதியுள்ள இடபத்தின் மீது பரசிவத்திறை ஆரோகணித்தல் பற்றியன்றோ, அவ்விடபவாகனக் காட்சி யெவற்றினு மேன்மை பெற்றுப் பண்டிதரே யன்றிப்பாமரர் ஆவோர்க்கும் அழியாப்பெரு மதிப்புக்கிடமாய் இன்றும் நாளையும், ரூபநாமபேதங்களாற் சொற்போர் விளைக்கும் மதவாதிகட்கெல்லாம் ஒருங்கே ஒற்றுணர்ச்சி யளிப்பதும் மேலே புகன்ற நல்லறமே யன்றோ?

மகம்மதுவையும், ஏசுவையும், நமதாரியமதத்தோடு முரண்படுத்தாது ஒப்பச்செய்வதும் இவ்வறமேயாம்.

கடவுள் இல்லை யென்னும் நாஸ்திகக்கொள்கையினரையும் அங்கீகரிக்கச்செய்வ திவ்வறமென்னில் இதனினும் மேம்பாடு பிறவெற்றிற்கு?

எவ்வாறென்னின் அறம்புரிவோ ரொருவனை (அதாவது உயிர்ப்பிராணிகளில் பேதபுத்தியின்றி தன்னாலியன்ற வளவு இரங்கி இதமாகத்தருமம்

செய்வோனை) இகழ்ந்தோ, வெறுத்தோ, பகைத்தோ தள்ளுவோர்கள் எம்மதத்திலுமிலராதலினென்க.

இதனால் அறமே கடவுள், அறமே ஸத்தியம், அறமே அருள், அறமே தவம், அறமே புகழ், அறமே இன்பம், அறமே மோக்ஷமும் என்றுணரக் கடவோம்.

என்றுமழியாப்பொருளென்பதும் இவ்வறமொன்றேயாம்

கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவானும்,

பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய சதுஷ்க்ருதாம்

தர்மஸம் ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே! யுகே,!

என நல்லோரைப் பாதுகாத்தற்கும், தீயோரை முற்றுமொழித்தற்கும், தர்மத்தினை நன்கு நிலைநாட்டுதற்கும் நான் யுகந்தோறும் அவதரிக்கிறேன் என்றருளிச்செய்தார்

இதனால் மும்மூர்த்திகளின் அவதாரங்களும் தருமப் பாதுகாப்பிற்கேயென்று தெளிவாகின்றது.

இதனைக்கம்பராமாயணச் செய்யுட்களில் ஆங்காங்கு

"அருங்கடையின் மறையறைந்த அறம்செய்க வறத்தாலும்

கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென்பாள் பயந்தாள்"

எனவும்,

"அறைகழலிராமனாகி யறநெறி நிறுத்தவந்த இறை"

"அறப்பெருந் துணைவர், எனவும்,

"அறமென நின்றநம்பற்கு" எனவும்,

"புண்ணியமூர்த்தி" எனவும், வழங்கியுள்ளார் சொற்கள் வலியுறுத்துவனவாகும்.

பெருந் தருமகுணம் வாய்ந்துபிறந்த பெருமக்களையன்றோ கடவுளரின் அம்சமெனநமது சுருதிகள் முறையிடுகின்றன?

தருமகுணம் சிறிதும் அமையப்பெறாப் புன் மக்களையன்றோ, அரக்கர்களென்றும், பாபிகளென்றும் வெறுத்தொதுக்கினார், முன்னோர்.

இதனையே, தெய்வப்புலமைத்திருவள்ளுவ நாயனாரும்

அறத்தி னூஉங்காக்கமுமில்லை யதனை

மறத்தலி னூஉங்கில்லை கேடு"

எனக்கூறியுள்ளார். அன்றியும் அறமே கடவுளென்னும் பொருள்பட

"என்பிலதனை வெயிற் போலக்காயுமே

அன்பி லதனை யறம்" எனவும் சிறப்பித்தனர்.

நாமகளின் நற்றாயனைய நமது ஔவையாரும் உலகோபகாரமாகத் தாமியற்றியருளிய எண்ணிறந்த சிறுதொடர் நீதிவாக்கியங்கள் அனைத்திற்கும் முற்பட என்ஞான்றும் எத்தகையோராலும் மறுக்கமுடியாத கருத்துடன் அமைத்த நீதித்தொடர் "அறஞ்செய விரும்பு" என்பதேயாம். என்னை அவ

ருள்ளப்பெற்றி, என்னே அத்தொடரின் நுண்பொருளமைதி ; "அறத்தினைச்செய்" என்றது செயவிரும்பு என நயம்படவுரைத்தார். இவ்வாறு கூறியதினால் ஆசையின்றிப் புகழ்ச்சிவிருப்பினாற்றரும‌ம் செய்வாராயின் அதுபயன் படாதென்பதும், மனதில்விருப்பின்றி எக்காரணம் பற்றியோ செய்யும் அறத்தினைவிட, செய்தற்கியலாவிடினும் செய்தல்வேண்டுமென மனத்திலெழும் உண்மை அவாவே சிறப்புடைத்தென்பதும் விளங்குகின்றது. நமது கணக்கற்ற கோடானு கோடி நூற்றொருதிகள் விரித்துரைப்பதும் தருமறத்தின் சாரமேயாம்.

நம்முன்னோர் தம்மாலியன்றவரையில் தருமத்தினை நிலை பேறாக்குங் கருத்துடன் சொல்லிலும், செய்கையிலும் அமைத்து வைத்தனர்.

அக்காலத்திய முன்னோர் பிற்காலத்தினர்கள் புத்திபூர்வகமாயாவது அறத்தின்பயனை அடைந்துய்யக்கருதி, எண்ணிறந்த விரதாநுஷ்டானங்களை, மதசம்பிரதாயங்களுக் கேற்பவகுத்திருக்கின்றனர்.

தருமத்தின்பெருமை யுணர்ந்து இரப்போர்க்கீதலென்னும் தெய்வீக குணம்அமைதல் சாத்தியமன்றாதலின் உலகவழக்குச் செய்கைகளாகக் கருதியேனும், பிறர்க்கொருபொருள் ஈதற்குபாயமாகவே அவ்விரதாதிகளை விதித்தனரென்பது திண்ணம்.

முதற்கண் விருப்பின்றிச் செய்யினும் செய்கைப் பழக்கத்தினால் விருப்பமுண்டாதல் கூடுமென்பது அன்னோர் நோக்கம்போலும்.

முற்காலத்திய மாதர்களும் இத்தருமகுணத்தில் மேம்பட்டிருந்தார்களென்பது திண்ணம்.

உதாரணமாக:

> பெருந்தடங்கட்பிறை நுதலார்க்கெலாம்
> வருந்தி வந்தவர்க்கீதலும் வைகலும்
> விருந்து மன்றி விளைவன யாவையே

எனக்கோசல நாட்டுப்பெண்கள் இரப்போர்க்கீயும் உதார குணத்தினாற் சிறந்து விளங்கினரென்றார் கம்பரும்.

தருமகுணம் வாய்ந்த மாந்தரே சிறந்தாரென்பதில்லை. பறவை மிருகங்களாயினும் அத்தருமகுணம்வாய்த்துள வென்னில் அவைகள் மாந்தரினும் மேலாய்ச் சிறப்பிக்கப் படுகின்றன.

எவ்வாறென்னின் :

தானெத்துணை பசித்திருப்பினும் தனித்துண விரும்பாது தன்னினத்துப் பறவைகளைக் கூவியழைத்து அவைகளோடு மகிழ்ந் துண்டுகளிக்கும் தருமகுணம் வாய்ந்த காக்கையை மதித்துப் பிதுர்களுக்கு பிரீதியாகவிடும் பிண்டங்களை யளிக்கின்றனர்.

அதே பிண்டங்களை தனக்கெத்துணை யன்புள்ள பெட்டையாயினும், குட்டியாயினும் தனக்கெட்டிய உணவின் அருகிலும் நாடவொட்டாமல் கோபாங் காரத்துடன் சிங்கம்போற் சிலிர்த்துத் துரத்தித் தன்னலமே பெரிதாய்

க்கருதி பசியற முற்றுமுண்டு களிக்கும் நாய்க்குக் கட்புலனுக்கலும் தகா தென வெறுத்தகற்றுகின்றனர்.

இதனிலும் தக்க சான்று வேண்டற்பாலதோ ?

அன்றி அறம் என்பதாகிய பரோபகாரச்செய்கையைத் தங்கள் சந்ததி யார் அபுத்திபூர்வகமாயாவது பரிபாலிப்பவராகக்கருதி நம்முன்னோர் வீட்டின் வெளிப்புறங்களில் ஏழைகட் குதவும்படி, திண்ணைகளையும் சார்பணைகளையும் தலையணைகட்குப் பதிலாய்த் தலையணைக்குறடுகளையும், அமைத்து வைத்தனர்.

புது நாகரீக விருப்பினுல் அத்தகைய அமைப்பு இக்காலத்தில் பலவிடங்களில் வெறுக்கப்பட்டு வந்தாலும், இங்கு உதாரணமாகக் கூறவந்ததை மட்டில் வெறுக்க மாட்டார்களென்று நம்புகிறேன்.

இந்த நோக்கங்கொண்டே தேவாலயங்களும் அன்ன சத்திரங்களும் ஆதியில் ஸ்தாபிக்கப்பட்டு, இன்றும் ஆயிரமாயிரமான ஏழைகட்கு ஜீவனுதாரமாய் தனவந்தர்களால் பரிபாலிக்கப்பட்டு வருகிறது.

இவ்வாறு சொற்கட்டிட வகையாலும், கற்கட்டிடவகையாலும், இறந்த கால நிகழ்கால எதிர்காலங்களிலும் தேய்தலின்றி எவ்வெவரும் ஒரு மனதாய் அங்கீகரிக்கத்தக்க தாயும் நம தாரிய மதத்திற் காருயிர் நிலையுமாகிய இவ்வறம் என்பது மனிதன் செய்யும் ஒவ்வொரு செய்கைகட்கும் உணவிற்கு உப்புப்போன்று (தருமயுத்தம், தருமநீதி என்பவைபோல்) உடனிகழ வேண்டியதே என்றாலும் அறம் என்பதின் முதன்மையான கருத்து பரோபகாரமேயாம். பரோபகாரமும் பலவகைப்படுமாதலின் அவற்றுள்ளும் ஜீவகாருணியமேலீட்டால் இளகியமனத்தினராய் இயன்ற வரையில் பிறர் பசிபொறுது ஈதலேயாம். இதனையே

"ஐயமிடுமின் அறநெறியைக்கைப்பிடிமின்
இவ்வளவேனுமன்னம் இட்டுண்மின்"

என்றார் நமது ஔவையாரும்.

இதனுல் அறம் என்பது ஐயமிடுதலே யென்றும், ஐயம் இடாதார் அறநெறியைத்தமக்குப் பற்றுதலாய்க் கைக்கொள்ள முடியாதென்றும், இயன்றது கவளமாயினும் உதவலே கடனென்றும் நாம் உய்த்துணரக்கடவோம்.

பரஞ்சோதி முனிவரும்.

"உத்தமக்குணங்க ளெல்லாம்
உலோபத்தாலழியுமா போல்" என்றார்.

நளனைச்சிறப்பிக்க வந்த அன்னமும் தமயந்தியிடம் அரசனது புயவலியை முன்னர்க்கூறாது

அறம் கிடந்த நெஞ்சும்
அருளொழுகு கண்ணும்

மறங்கிடந்த திண்டோள் வலியும் என்று சிறப்பித்தது காண்க.

எந்த அறிஞர்தான் இக்கருத்தினழகையும், அருமையையும் சிந்தித்து வந்தியாதொழிவர்?

பிற்காலத்திய மேதாவி யொருவரும்.

"சாந்தமார் வறிஞர் போலத்தறப்பான் வருவான் றன்முன்
எந்துகை வீடு கொள்ளொன்றேந்து கையாமக் கையின்
ஈந்த பொன்விலை போல்வீட்டுக் கிட்டபொன் று மன்னேனைக்
காய்ந்திலையென்போர் வேண்டோம் கதியென்பார் போலுமாதோ,"

என்றனர்.

இத்துணைப்பெருமை வாய்ந்த தருமகுணம் ஆடவர் மகளிர் ஆகிய இருபாலார்க்கும் அமையவேண்டிய இன்றியமையாக்குணமே யாயினும், குடும்பத் தலைவியாக வமர்ந்து தத்தம் கணவருக்கு இம்மையிற் புகழும், மறுமையில் மோக்கமும், எளிதிற்கிட்டு மாறு நற்றுணையாய் நிற்போர் மாதரே யாதலினால், மந்திரியின் ஒற்றுணர்ச்சியின்றி அரசனதாணை செல்லா வாறுபோலக் குடும்பத்தலைவியரின் ஒற்றுணர்ச்சியின்றேல் இல்லற தருமம் இடர்ப்பட்டு நன்கு நடைபெறாதென்பது திண்ணம். முற்காலத்திய பெருமக்களனைவரும் தத்தம் மனைவியரின் ஒற்றுணர்ச்சியினாலேயே அழியாப்புகழ் படைத்தனர். உதாரணமாக,

விசுவாமித்திரரின் மாயையினால் கொலைக்குற்றம் சாட்டப்பட்ட கற்பரசியாகிய சந்திரமதி தன்னை வெட்டும் கொலைஞனாய் அமைந்த தன் கணவனை நோக்கி அவர் மனந்தளரா வண்ணம்,

"பழுக்கமான வக்கண வனைப்பரவி யென்னவி
இழுக்கற்கஞ்சி நீயறம் வழுவே" லெனவும்
"பொருந்து நீத்தத்திற் புற்புத வாழ்வை நீ மெய்யென்,
றருந்தவத்தையும் அறத்தையும் மெய்மையும் விடுத்து
வருந்தல் மன்னவ"

எனவும் தேறுதல் கூறியிருப்பதைக்காணலாம்.

இதனால் உயிரினும், உண்மைக்காதல் அன்பினும், மேம்பட்டது அறமே யென்பதை பண்டைக்கால மகளிர் அறிந்திருந்தாரென்பதும், பிறர்க்கும் அறிவுறுத்தி வந்தாரென்பதும் மலையிலக்காய் விளங்குகின்றது.

இத்தகைய மனைவியர் இருப்பினன்றோ இல்லறதருமமும் கணவனின் கருத்தும் இடர்ப்பாடின்றி நடை பெறும்.

அறம் நன்கு பரிபாலிக்கப்படினன்றோ இல்லறத்தலைவர்களாகிய ஆடவர்க்குப் புகழ் சிறக்கும்.

என தன்புள்ள சோதர கனவான்களே! ஆதலின் இத்தகையஅறத்தின் பயனையும் இன்றியமையாமையையும், முற்பட மகளிர்க்கறிவுறுத்தித்தாமும் அதன்வழி நிற்றலே நம்மனோர் தலைக்கடனும்.

அசலாம்பிகையம்மாள்,
திருப்பாதிரிப்புலியூர்.

# முப்பொருளுண்மை.

"ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம் பிறைபோலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்து அடிபோற்று,கின்றேனே."

யாம் வதிதருகின்ற இவ்விந்தையம் உலகை எவ்வகையாலும் அளவிட்டுப் பார்க்குமிடத்துப் பதி, பசு, பாசம், என்னும் முப்பொருளிலேயே அடங்கும். இம்மாயா காரியமாகிய உலகினையும் அம்மாயையில் கட்டுண்டுழலும் ஆன்மகோடிகளாகிய நம்மையும் ஆட்டுவிப்பான் ஒருவன் உளனன்றே! அவனையே நாம்பதியென்று கூறுவோம். ஆணவத்தாற்கட்டுண்டு நிற்குங்கால் ஆணவமேயாயும் அறிவோடு நிற்குங்கால் அறிவேயாயும் சார்ந்ததன் வண்ணம் நிற்கும் பளிங்கேபோல் இருப்பது பசுவாம். பாசமென்னும் சொல் கட்டு என்னும் பொருளை உணர்த்தும் 'பச்'சென்னும் பகுதியின் அடியாகப் பிறந்து ஜீவனை கட்டிநிற்பது என்று பெரியோர் கூறுவர். இம்மூன்று பொருளும் அநாதி நித்தப்பொருளாம். இவற்றுள் இறை முதற்பொருளாகிய பதியின் லக்ஷணம் கூறுவாம்

இவன் எண்குணத்தோடும் கூடியவன். அவையாவை யெனில் தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை அறிவினனாதல், முற்றும் உணர்தல்,இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, வரம்பிலின்பமுடைமை, முடிவிலாற்ற லுடைமை, யென்னு மிவைகளாம்.

எல்லாம் வல்ல இறைவன் இக்குணங்களோடு கூடியவனாதல்பற்றி அன்றோ ஆசிரியர் வள்ளுவனார் "கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான், தாளைவணங்காத்தலை' என்றருளினார். இதனில் முதலில் எடுத்துக்கொண்ட தன் வயத்தனாதல் என்பது தான் ஒருவன்வயத்தனாயிருத்தலின்றி எல்லாம் தன் ஆணைவழி நடாத்தியிருத்தல்,அதாவது முழுமுதன்மையுடைமை. என்னே—சுயநலமே பெரிதும் கருதப்படும் உலகிலே ஒருவர்க்கொருவர் தம்மால் இயலாத குறைகளை தம்மினும் வல்லாரை அணுகி முடித்துகோடல் காண்குமன்றே.

எங்ஙனம் எத்துணை வல்லாரேனும் ஒருவர் விரும்பிய ஆங்கு எல்லாம் அளித்தல கூடாமை யன்றே. எல்லாம் வல்ல இறைவனை அணுகினாற்கு எல்லாம் கிடைக்கப் பெறுகின்றமையான் அன்னோன் பிறர் வயத்தனாதல் யாண்டைய தென்க? அதுபற்றியே அவன் தன்வயத்தனாதல் பெற்றாம்.

இனி, தூயஉடம்பினனாதல் இறைவன் அருட்டிருமேனி கொண்டிருத்தலாம்.

இறைவனது சரீரம் ஜீவசரீரம்போல் அசுத்தமாயா சரீரமா யிராததினால் தூய உடம்பினனாதல் பெற்றாம். அற்றேல் எங்கணும் நிறைந்துள்ள பெரு

மான் தூல சரீரத்தோடு இருத்தல் அவருடைய சர்வ வியாபகத்துக்கு இழுக்காம் பிறவெனின் அற்றன்று.

உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் மூன்றுவகையில் அடங்கும். அவை உருவம் அருவம் அருஉருவம் என்பவைகளாம். இறைவன் இம்மூன்றுவகை திருமேனியும் உடையனும் இம்மூன்றும்கடந்த துரியனும் இருப்பனென்றறிக.

அல்லதூஉம் ஒரோர்மதம்பற்றி உருவமுடையனென்பாரும் அரூபமே ஸ்வரூபமுடையனென்பாரும் அருவுருவத் திருமேனியுடையனென்பாரும் உளர். அவையெல்லாம் இறைவனுடைய சர்வ வல்லமைக்கு இழுக்காயினமை அறிந்திலர்.

ஆகையால் எல்லாம் வல்ல இறைவன் இங்கே கூறிய எல்லா திருமேனியும் கொண்டிருத்தல் சர்வ சம்பிரதி பன்னமாயினமை அறிக.

எம்மனோர் உய்யவேண்டியே எடுத்துக்கொண்ட உருவத்திருமேனி மற்றைய சரீரம்போலாகாது இச்சாமாத்திரத்தில் எடுத்துக்கொண்ட அருட்டிருமேனி யாதலின் மற்றய ஜீவசரீரம்போலாகாது தூயவுடம்பினனாதல் பெற்றாம்.

இனியியற்கை—அறிவினனாதல்,

எல்லா உயிர்களைப் போல் ஆசான் முதலியோரிடத்து முறையேகற்று அறிவுவிளங்கப் பெறுவதன்றி எல்லாருக்கும் அறிவுச்சுடர் கொளுத்துவனும் அப்பெரிய பெருமானாதலின் அவர் இயற்கை அறிவினனாதல் பெறப்பட்டது.

இனி முற்று முணர்தல் என்பது:

அம்முழு முதற்கடவுள் அண்டபிண்ட சராசரம் முதலிய எல்லாவற்றையும் படைத்தல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளல் முதலிய ஐந்தொழில் நடாத்தும் முறையானே ஏகதேசம் உணர்தலின்றி எல்லாவற்றையும் ஒருங்குணர்ந்து அவரவர்கள் கன்ம ஈடாக ஊட்டுவித்தலின் முற்று முணர்ந்தவரே யாம்

ஜீவர்கள்போல் நேற்று நான் இதை யறிந்தேன் இது செய்து முடித்தேன் அவன் நாளைத்தான் இதை உணர்வான் என்று ஏகதேச அறிவால் யாவற்றையும் அறிதலின்றி எக்காலத்தினும், எவற்றையும் ஒருங்குணர்தலின் முற்றுமுணர்தல் பெற்றாம்.

இனி யியல்பாகவே பாசங்களி னீங்குதல் என்பது: அனாதியே பாசத்தினின்றும் விடுபட்டு சுயம் பிரகாசமாய் நிற்றல்.

பாசத்திலே கிடந்துழன்று துக்கரூபமாய் விளங்கும் பசுக்களை அப்பாசத்தினின்றும் விடுவிப்பான் துடங்கி சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் திரோபவம் அனுக்கிரகம் ஆகிய ஐந்தொழிலை எம்பால்வைத்த கருணையின் மிகுதியினாலே யியற்றுகின்றமையால் அங்ஙனம் இயற்றுகின்ற பரம்பொருள்தாம்

பாசத்தினுல் கட்டுண்டிருந்தால் ஏனையோருடைய பாசங்களை நீக்குதல்கூடா மையின் சுவசித்தமாகவே பாசங்கள் நீக்கியிருத்தலாம்

இனி பேரருளுடைமை யென்பது:

பாசத்தினுல் கட்டுண்டுழலும் ஆன்மகோடிகளது துக்கத்தை நீக்கி பேரின்ப நுகர்ச்சி யெய்துமாறு செய்யுங்கருணையேயாம். இப்பெருங்கருணை யினுலேயே ஐந்தொழிலும் நடாத்தப்படுகின்றன.

அருவமோ ரூபா ரூபமான தோவன்றி நின்ற வுருவமோ, வுரைக்குங்கர்த் தாவடிவெனக் குணர்த்திங் கென்னி, லருவமும் ரூபாரூபமானது மன்றிநின் ற, வுருவமு மூன்றுஞ்சொன்ன வொருவனுக்குள்ள தாமே.

எல்லாவற்றிலும் குறைவுநிறைந்த இவ்வுலகில் நோயாளிகளை வறியவறை காண்போமாயின் உயர்ந்தோர் இரக்கமீதூர்ந்து அன்னூர்க்கு கருணைபுரிதல் இயற்கையன்றே!

வேறு சிலர் புகழ்கருதியேனும் கருணைபுரிவர். இவற்றையெல்லாம் நோக்குழி யாதொரு குறைவுமில்லா இறைவன் தனக்கு யாதாமொரு பயன் கருதியேனும் புகழ்கருதியேனுமின்றி உயிர்கள்பால் வைத்த பெருங்கரு ணையே காரணமாய் அருள் புரிதலின் பேரருளுடைமை பெற்றும்.

இனிவரம்பிலின்ப முடைமை யென்பது.

சிற்றுயிர்கள் நிலைதலில்லாத சிறு இன்பத்தை அனுபவித்து சுகித்தல் போலல்லாது என்ஞான்றும் பேரின்பத்தையே தமக்கு குணமாக உடைய ரென அறியக்கூடாது,

மண் பெண் பொன் இம்மூன்றினுலுண்டாகிய அற்ப சுகத்திற்காக மக்கள் தம் வாணுளை வீணுளாக்கி இன்பமடைய முயன்றும் நிலையாமை யாகி ஒரோர்கால் துன்பமும் பயத்தலும் அனுபவமன்றே?

இந்தியாதி கிரியங்களால் துன்புறா பேரின்பத்தை தேடியலையும் போது இறைவனையன்றி அறிவையளிக்க வல்லார் யாவர்? அங்ஙனம் உயிர் களுக்கு பேரின்பத்தை அளிக்கவல்ல பெரிய பெருமான் வரம்பிலின்பமுடை மையும் பெற்றும்.

இனி முடிவிலாற்றலுடைமை:

பாசத்திற் கட்டுண்டு அறிவு மயங்கிக்கிடக்கும் ஜீவர்களுக்கு அறிவித் தாலன்றி அறியமாட்டா. அசேதனப் பிரபஞ்சத்தை அசைவித்தாலன்றி அசையா. இதனுல் அறிவிப்போனும் அசைவிப்போனும் பேராற்றலையுடை யனுதல் தானேபோதரும்.

இறைவனது பேராற்றலை எங்ஙனம் வியந்துகூறுவது! அந்தரத்து அகிலகோடிகளை அதனதன் பாட்டையில் பிணித்து செல்லுமாறமைத்து ஒன்றுக்கொன்று கெடுதியுருமல் அமைத்திருக்கிற ஆற்றலை வியப்போமா? எல்லா அண்டங்களிலுமுள்ள ஆன்மகோடிகளது மனேவிச்சையை அறிந்து

அவரவர் கன்மத்துக்கீடாக பயனை ஊட்டி அவரைக் காக்கும் திறனைவியப்பதோ ? இங்ஙனமே யிறைவனது முடிவிலாற்றலுடைமையை வியப்பது யாவராலும் முடியாததொன்றாம்.

இதனால் பதியாகிய முதல்வனது எண் குணங்கள் கூறப்பட்டன.

இனிப்பசுலக்ஷணங் கூறுவாம்.

பசுவென்பது ஆன்மா.

இவையெண்ணிறந்தனவாம்.

ஆன்மா ஒன்றேயாம் பலவெனின் மிகையாம். பிறவெனின் ஒருவன் ஒன்றை அனுபவிக்குங்கால் பிறன் அதை யுணராமையானும் அவன் அது செய்தான் இவன் இது செய்தான் நான் அது செய்தேன் யென்பனவாதி சொல்வழக்கால் அது பொய்யாயிடுதலறிக.

சமய வாதிகள் கூறும் மறுப்புரைகளை யனுவதித்து யிங்கே பதில் கூறினால் அது மிக விரிந்தோடி இங்கே கொடுக்கப்பட்ட காலவரையை தாண்டி ஓடும். அதனுண்மை அருணூல்களிலே யினிது பெறப்படும்.

இனி யிவ்வான்மா அனாதிபெத்தனாய்ப் பாசத்தினாலே கட்டுண்டு அறியாமையினால் கிடந்துழலும். கருணையே காரணமாக நடாத்தப்படும் ஐந்தொழிலினாலே ஓர் சிறிதறிவு ஏற்பட்டு தன்னையும் தன்னைச்சூழ்ந்த தளையின் இயல்பையும் தலைவனியல்பையும் அறியாது மயங்கிப் பல்லாய்ப் பூடாய் புழுவாய், பல் விருக்ஷமாய், பல் மிருகமாய்ப் பிறந்துபிறந்து எய்த்து புண்ணிய மிகுதியினால் மானிடசரீரம் கிடைக்கப் பெற்றுழி அதிலேயியற்றிய நற்கரும விசேஷத்தினால் இறைஞானம் பெற்று இன்பமெய்துவன். இனித்தேஹமே ஆன்மாவென்பாரும் இந்திரியமே ஆன்மாவென்பாரும்பிராணனே ஆன்மாவென்பாரும் இங்ஙனம் ஓரோர் சமயம்பற்றி ஒவ்வொன்றை ஆன்மாவெனக்கூறி மயங்கா நிற்பர். இவையெல்லாம் சுருதியுத்தி அநுபவத்திற்கு மாறுமாறுகூறி மறுக்க. இவற்றிற்கு வேறாய் ஆன்மாவுண்டென்றும் அவன் அனாதி பெத்தனென்றும் ஆணவத்தில் பிணிப்புண்டு அறிவின்றி கிடப்பானென்றும் மாயையாம தனுகரணாதிகளில் புகுவிக்கப்பட்டபோது சிற்றறிவு சிறு தொழில் உடையனாயிருப்பனென்றும் காலாந்தரத்தில் புண்ணிய மிகுதியினால் இறைஞானம் கிடைக்கப்பெற்றபோது முக்தியெய்துவனென்பதும் உண்மை நூற்றுணிவு. இவ்வுண்மைகளெல்லாம் அருணூல்களிலே விரிந்து கிடத்தலின் ஆண்டுகண்டு உணர்க.

இனிப் பாசலக்ஷணம் கூறுவாம்.

அது முத்திறப்படும் அவை ஆணவம், கன்மம்,மாயை என்பவைகளாம். அவற்றுள் ஆணவமென்பது அனாதியே உயிர்களைப் பொருந்திநிற்பதொன்றாம். ஆனதுபற்றியே அது சகசமலமென்று கூறப்படும். ஏனைக்கன்மம் மாயை யென்பது ஜீவனை இடையில் வந்துபற்றி நிற்பனவாகலின், ஆகந்துகமல மெனப்படும். ஆணவமலமானது அனாதியே உயிர்களோடு பொருந்தியிருப்பதொன்றாம் என்று முன்னரே கூறினும். ஆன்மாவானது ஆணவத்

திற் கட்டுண்டபோது அறிவின்றிக்கிடக்கும். பரனால் சிருஷ்டியாதி முறைகளில் மாயையில் புகுவிக்கப்பட்டபோது கன்மமலம் வந்து சேருகிறது. ஆணவமலத்திலே அறிவின்றி யிருக்கும்போது இவனுக்கு இச்சாஞானக்கிரியைகள் சிறிதுண்டாகும்பொருட்டு இறைவனால்மாயையில் அழுத்தப்படுகிறான். அப்போது கன்மமலம் இடையேவந்து சேருகிறதென்பது தெற்றென விளங்கும். ஆகையினால் முத்திறப்பட்ட பாசத்தினியல்பை யெல்லாம் விரிக்குங்கால் அளவிலடங்காமலேபடும். இச்சிறு வியாசத்தில் அதனை முடித்திடல் கூடாதாம்.

கடவுள், ஆன்மா, பாசம், என்னும் இம்முப்பொருளுண்மையினை வேதமோடாகமம் வேறுமுள நூல்களெல்லாம் எடுத்தோதி கண்டாகோஷமாக முழங்குவதெனின் அதனை இங்கு யான் எடுத்துக்கூறி முடிப்போமெனல், நகுதற்கு எதுவாகவேமுடியும் இம்மாயாகாரியமாகிய வுலகு, தன்னை தொழிற் படுத்தற்கு ஒரு தனி முதலை அவாய் நிற்குமன்றே. அதுவே பதியென்பதும், அவ்வுலகிலே கிடந்துழலும் யாமே பசுக்களெனவும் நம்மை பந்தித்து மயங்குறச் செய்யும் ஒன்றினையே பாசமெனவும் இதுகாறும் கூறியவற்றால் இனிதுபெற்றாம். இவ்வுண்மையினை ஸ்ரீ தாயுமானார் "அருளுடைய பரம் என்றுளதோ அன்றே யானுளனென்றும் எனக்கே ஆணவாதி, பெருகுவினைக் கட்டென்றும் என்றால் கட்டிப் பேசியதன்றே பெருநூல் பேசிற்றன்றே." என்னும் அழகியவாக்கியத்தால் சுருங்கக்கூறி விளங்கவைத்தார். ஆகலின் இவ்வுண்மைகளை யெல்லாம் நற்றாயன் மூலமாயும் நன்னூல்களின் வாயிலாகவும் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் முறையானே, உணர்ந்து கோடலே மரபும் சிஷ்டாசாரமுமா மென்க. முப்பொருளுண்மையறிந்தார், முக்தி யின்பமடைவ ரென்பது முக்காலு முண்மை.

---

# திருநாவுக்கரசு.

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனுஞ்
சிற்கோலவாதவூர்த் தேசிகரும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரா னைந்தெழுத் தெங்கே.

1. மேற்கூறிய சைவசமயாசாரியர் நால்வருள்* மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், சுந்தரர் மூவரும் அந்தணர்; திருநாவுக்கரசரொருவரே வேளாளர். பௌத்தவுரச் சிதைத்த பெருமான் மாணிக்கவாசகர். இவர் வேதப்பொருளை யுட்கொண்டு சிவநாமத்தை விளக்கினவர். நால்வரிற் காலத்தால் முற்பட்டவரு மிவரே. சுந்தரரோ நால்வரிற் கடையானவர். புறநெறி யகற்றி நீற்றையும் ஐந்தெழுத்தையுஞ் பரவச்செய்தனர், ஆளுடைய பிள்ளையாரும் வாகீசரும். அந்தணர் மூவரின் ஆயுட்டொகை அறுபத்தாறும். அப்பரோ எண்பதாண்டிற்கு மேற்பட்டிருந்து 'புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்' என்று பரவசமடைந்தனர். முதிர்ந்த வயதுஞ் சிறந்த வன்பும் படைத்தவர். வெள்ளிமால்வரை தொட்டுப் 'பறம்பணை சூழ் நெல்வேலி' வரைத்தலந்தோறுஞ் சென்று தமிழ்ப்பதிகம் பாடித்தொண்டு செய்த இந்நாயனாரது சரித்தை அறியாத சைவரு முளரோ ?

2. திருநாமங்கள்.—இவரது தந்தையிட்டபெயர் "மருணீக்கியார்" பவநெறிப்பட்டுப் பவக்கடலில்முழுகிப் பதபதைத்து மயல்கொள்ளுமானிடரின் மருளை நீக்கவல்லவர் என்ற பொருளைப் பயக்கும் இத்திருநாமம்.

> "அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
> உலகின்வரு மிருணீக்கி யொளிவிளங்குங் கதிர்போல
> மலருமருணீக்கியார் வந்தவதாரஞ்செய்தார்"

"திருநாவுக்கரசு"—'வயிறுற்று அடுசூலை மறப்பிணி' யால் 'கூற்றாயின வாறு விலக்ககிலீர்' என்னுந் திருவதிகை வீரட்டானத் திருப்பதிகத்தைப் பாடிய பெருமை காரணமாக இஃது 'மஞ்சுறை வானிடை எழுந்ததொரு வாய்மை.'

"வாகீசர்," 'சொற்கோ,' "நாவரசர்"—இவை ஒருபொருட் கிளவிகள். முன்னது வடமொழி, பின்னவை தென்மொழி.

"அப்பர்"—திருஞான சம்பந்தர் சீகாழியில் வாகீசரைக்கண்டதும் 'அப்பரே யென, வவரு மடியே னென்றார்.

"அப்பமூர்த்தி"—நிலையாமை கருதி பொருளனைத்தையுங் கவிவாணர் முதலான பல்லோர்க்கும் அளித்ததுமன்றி அறச்சாலைகளமைத்தும் குளந்தொட்டுக் காவைத்தும் பிரதாபம்பெற்ற அப்பர் பெருமை திங்களூர் வாசியாகிய அந்தணர் அப்பூதி நாயனார் செவியுற அவர் அன்பு பெருகி 'அப்பமூர்த்தி' என்றழைத்தனர்.

"தருமசேனர்"—அப்பர் சமண சமயச்சார்பினராய் சமணநூல்களைக் கற்றுத் தேர்ச்சியடைந்து தலைமை பூண்டொழுக இப்பெயர் இவருக்கு வாய்த்தது.

3. இவர்காலத்தவர்:—முதன் முதலில்"திருஞான சம்பந்தர்." இவ்வருளுடையாரை அன்பு மிகுந்த அப்பர் சீகாழியிலும், திருமறைக்காட்டிலும், திருப்புகலூரிலும், திருப்பூந்துருத்தியினும் பன் முறை சந்தித்து அவர் வணங்காமுன் தாம் வணங்கித்தந்தம் வரலாறுகளைச்சொல்லித் திருவுளங்கலந்தனர்.

"கூன்பாண்டியன்,"(நெடுமாறன்,)"மங்கையர்க்கரசி," "குலச்சிறை"—பாண்டி நாட்டரசன், அவன் மனைவி, அவன் மந்திரியாம். அரசன் சமணர் மயக்கிலகப்பட்டு ஆருகமதம் பாண்டியெங்கும் பரவச்செய்ய முயன்றதைக் கண்ணுற்ற பெண்ணரசும் 'பார்பரவும்' அமைச்சும் திருப்புகலூரிற் றங்கியிருந்த திருஞானசம்பந்தரை திருவாலவாய்க்கு அழைத்துச் சமணரைக் கழுவிலேற்றி அரசன் கூனையும் நிமிர்த்து 'நம்பர்' கருணையுஞ் சிறக்கச் செய்தனர். "நமிநந்தியடிகள்" நீரினால் விளக்கேற்றி நிந்தைசெய்த சமணர் செருக்கை அழிக்க 'அப்பர்' இதை ஒரு பதிகத்தின்பாடியுள்ளார்.

"அப்பூதியடிகள்"—'அழலோம்பும்' அப்பூதியென்பார் இவரே திங்களூர்வாசி. அப்பர் விசுவாசி "சிறுத்தொண்டர்," "நீலநக்கர்," "முருகனார்"—திருப்புகலூரில்,

"பிள்ளையாரெழுந்தருளப் பெருவிருப்பால் வாகீசர்
உள்ளமகிழ்ந் தெதிர்கொண்டங் குடனுறையு நாளின்கண்
வள்ளலார் சிறுத்தொண்டர் மற்றவர்பாலெழுந்தருள
எள்ளருஞ்சீர் நீலநக்கர் தாமுமெழுந் தருளினார்.

"ஆங்கணையுமவர்களுட னப்பதியிலந்தணரா
மோங்குபுகழ் முருகனார் திருமடத்தில்"

கேண்மையுற்றுத் திருவுள்ளங்கலந்தனர்.

இவரன்றித் திருக்கடவூரில் ஞானபோனகரும் நாவரசரும்

"தூங்கிலியக்கலயனார் திருமடத்திற்குறைவறுப்ப
அங்கவர்பாற் சிவனடியாருடனமுது செய்தார்கள்"

இவர்களில் அந்தணரும் வேளாளரும் அன்பிற் கலந்து அமுது செய்து வந்தனரென்பது விளங்கும்.

4. சகோதரவாழ்கை:—திருமுனைப்பாடி நாட்டில் பழம்பதியாகிய திருவாமூரில் தொல்குடிப்புகழனார் பயந்த கற்புக்கரசியாம் திலதவதியார் ஆறீராண்டுறவும் முன்னறி தெய்வமாகிய அன்னையும் பிதாவும் தமக்கு ஒத்த குலமுங்குணமும் பொருந்திய வேந்தனின் தளகர்த்தனாகிய கலிப்பகையாருக்கு வதுவை செய்ய மனமிசைந்தனர். வதுவை வினை முடியுமுன் கலிப்பகையார் போர் முனையில் உயிர் நீத்தார்.

"எந்தையுமெம் மனையுமவர்க் கெனைக்கொடுக்க விசைந்தார்கள்
அந்தமுறை யாலவர்க்கே யுரியதுதான்."

என்று கற்புநிலை இத்துணைத்தென்று விளக்கி, கற்புநெறி வழுவாமற் கணவருடன் சேருவலென்று சிதையேறிய மாதினியார்போன்றும் தாமும் உயிர் நீக்க முயன்றனர். தம்பியாகிய மருணீக்கியாரின் தனிநிலையையுணர்ந்து தவம்புரிந்து திருக்கோயில் அலகிடுதல், மெழுகுதல், பூப்பறித்தல், மாலை கட்டுதல் முதலான திருத்தொண்டுகளைச்செய்து வீரட்டானேஸ்வரரை வணங்கி ஏத்திவந்தனர். அந்நாளில் "நல்லாறு தெரிந்துணர நம்பரரு ளாமையினால் கொல்லாமை மறைந்துறையுமமண்சமயங் குறுகிய" மருணீக்கியார்துயரக் கடலிலாழ்ந்த திலகவதியாரைத் தியானித்துத் தன்னைமடுத்த சூலைநோய்தீர,

"ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்று மெடுத்தருள
வேண்டுமெனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனரால்".

சிவபிரா னுடனே கற்புக்கரசியை நோக்கி,

" உன்னுடைய மனக்கவலை யொழிநீ புன்னுடன் பிறந்தான்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றான்
அன்னவனை யினிச்சூலை மடுத்தாள்வ" மென்றருளிய கருணைத்

திறத்தை நினைந்து நினைந்து இன்புறுவாள். இஃதிவ்வாறிருக்க, தருமசேனருக்கு சூலைநோய்கண்டு எவ்வாற்றானும் பிணிதீராமல் வாட்டுவிப்பா னொருவனைத்தமக்கையிடம் விடுத்துத் தாம்படுந் துயரத்தைத் தெரிவித்தார். பின் பள்ளியையும் பாழியையும் இரவில் நீங்கி தமக்கையின் மடம் வந்துற்றனர்.

"பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீ"ரெனப்பணித்துத் திருநீற்றைஅஞ்செழுத்தோதிக்கொடுத்தார். "தன்னையடைந் தார்வினைதீர்ப்பதன்றோ தலையாயவர்தங் கடனாவது" முதலான துதிசெய்ய சூலை நோய் பறந்தோடியது. திருநாவுக்கரசும் முதல்வன்கருணைக்கடலில் முழுகினார், திருவடியிறைஞ்சினார், திருத்தூங்கானைமடத்தில் திருவிலச்சினையும் பெற்றார்.

இவ்வரலாற்றால் சிதையேறுதல் (சககமனம், உடன்கட்டைஏறல்) பண்டைய வழக்கமென்பதுவும்,மணமிசையின் மணஞ்செய்யாதொழியினும் கற்புவழுநிற்றல் கடனென்பதுவும், பக்திமுதிர்ச்சியால் கொடும்பிணிநீங்குமென்பதுவும் தெள்ளிதிற் புலப்படும்.

5. ஜயினர், சமணர்:—புத்தரைவாதில்வென்றநிமித்தம்"வெற்றியாளர்" என்ற பொருள் பெறும் ஜீனர் என்றபெயர் சமணருக்கு வாய்த்தது. புத்தமதமும், சமண சமயமும் ஒரேகாலத்தன வாயினும் முதலிற்றழைத் தோங்கியது புத்தமதம், பின்னரே ஜீனமதம் பரவியது. இந்தியாவில் ஏறக்குறைய பதினைந்து லக்ஷம்சமணருளர். இத்தொகை நாளடைவில் தேய்ந்துவருகின்றது. அறச்சாலைகளிலொன்றாகிய கால்நடை வைத்தியசாலை அல்லது பிஞ்சரப்பால் என்பது ஜெயினர் ஏற்படுத்தியதாம். நீலகேசி சூளாமணிபோன்ற செந்தமிழ் நூல்கள்பலவாக்கியுளார். புத்தரும், சமணரும் அந்தணர் செந்தண்மை பூண்டொழுகாத்தன்மையால் வெவ்வேறு மதத்தாராய்ப்பிரிந்தனர். அருமறை அந்தணர்க்கேயுரிமை என்ற கூற்றால் இதுகாறும் வேற்றுமை ஒழியவில்லை. ஆங்கிலக்கல்வி பரவ நாளடைவில் சுயநயங்கருதும் இவ்வஞ்ஞானம்

இறும் என்பதில் ஐயமில்லை, கொல்லாவிரதம் புத்தர் சமணர் இருவகையார்க்கும் உடன்பாடாம். நிர்வாணம் நிலை நிறுத்தும் புத்தருக்கு மறுபிறப்பில்லை. யாக்கை யொழியினும் ஆன்மா நசிப்பதில்லை யென்பது ஜீனர் கொள்கை. அன்றியும் கொல்லாமை, வாய்மை கற்பு, வெஃகாமை, துறவு இவ்வைந்தும் அன்னார்கொள் விரதங்களாம். ஜீனர் இருவகையினர் ஸ்வேதாம்பரர் வெள்ளாடைக்கலையினர். திகாம்பரர், ஆடையுடாதார். இவரே காலத்தால் முன்னவராம். தென்னாட்டில்பெரும்பாலோர் இவரே. ஆரியரைப்போல இவரும் வருணபேதத்தைக் கைக்கொண்டவரே. இவரை காரமணர், முருட்டமணர், தீமாயையமணர், வஞ்சைமந்திரர், முட்டிநிலையினர், உறியுறுகுண்டிகையர், தொடுத்த பீலிக்குஞ்சரர், உடையொழித்தொருபேச் சிடையின்றியுண்போர், திரட்டிரைக்கவளந்திணிக்கும் பிரட்டர், தவமென்று பாயிடுக்கித்தலைபறித்து நின்றுண்பார், கொலையும் பொய்மையு மிலமென்று கொடுந்தொழில் புரிவோர், கொலைபுரியா நிலைகொண்டு பொய்யொழுகுங்குண்டர், ஒள்ளரிக்கணார் முன்னமணின்றுணுங்கள்ளர், மூக்கினால் முரன்றோதிய குண்டிகைத் தூக்கினார், சித்தநிலையறியாதார், கன் மனத்து வல்லமணர், மூடையினர் தலைமுண்டிக்கு மொட்டையர்'' என்று பலவாறு குறை கூறியுளர். இவற்றால் இவர் ஆடைதரிப்பதில்லை, மொட்டையர், நின்றுண்பவர், கவளங்கொள்பவர், பிரட்டர், பாயிடுக்கியர் முதலான குணாதிசயமுடையவரென்பது விளங்குகின்றது. எவ்விரதம்பூணினும் மதவெறிபிடித்தவர் விரதத்தைக்கைவிடுதல் வழக்கம். கொல்லாவிரதம்பூண்ட இச்சமணர் எங்ஙனம் அப்பரைகொல்ல முயன்றனர்? நீற்றறையிலிட்டனரே, நஞ்சூட்டினரே, களிற்றின் காலடியிற் போக்கினரே, கல்லிற் பிணித்துக்கடலிற் பாய்ச்சினரோ இவற்றாற் பயனென்? இவர் மயக்கிலகப்பட்ட காடவ ராஜனாகிய பல்லவனும் சைவசமயமே சமயமென்றுணர்ந்து அதைத்தழுவி சமணப்பள்ளியையும் பாழியறையையும் இடித்துக்குணதர வீச்சரமென்னுஞ் சிவாலயத்தைக்கட்டுவித்தான்.

> "வீடறியாச்சமணர் மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
> காடவனுந் திருவதிகை நகரின்கட் கண்ணுதற்கு
> பாடலிபுத் திரத்திலமண் பள்ளியொரு பாழிகளுங்
> கூடவிடித்துக் கொணர்ந்து குணதரவீச் சரமெடுத்தான்''.

அன்றியும், அப்பர் பழையாறை யென்னுந் திருப்பதிமார்க்கத்தில் வரும்பொழுது இவ்வமணர்விமானமறைக்க ஆயிரம் மணர் களிற்றின் காலில் மாய்ந்தனர். அரசனெப்படி, யப்படியாங்குடி என்றவாறு சமணமதம் குறுகியது. சைவந்தழைத்தது. பல்லவவமிசம் இற்றது கி பி. 790 என்பர்.

6. **அற்புதங்கள்:**—சமணர்செய்த தீங்குகளைவிலக்கி அப்பரைத்தடுத்தாண்ட அற்புதங்களை முன்னரே குறிப்பிட்டுளேன். நீற்றறை ஜோதியறையாயிற்று, வேழமடிசமணர்பாழடியாயிற்று, நஞ்சு வமுதமாயிற்று, கல்புணையாய் மிதந்தது. இவையன்றி அழலோம்பு மப்பூதியகத்திடை திருநாவுக்கரசென்று பெயர்பெற்ற பூதியடிகள் தலைமகன் தமிழ்வேந்தருக்கு விருந்தோம்

பக்கருகி வாழைக்குருத்தையரியப்போனவனைப் பாம்புதீண்டவும் ஒன்று கொலாம் எனும் பதிகத்தைப் பாடித் தம் பேரனை எழுப்பியது எவருமறிந்ததே.

தவிரவும், திருமறைக்காட்டில் திருஞானசம்பந்தர் வேண்டு கோட்கிணங்கி அப்பர் திருக்காப்புத்திறக்கப் பாட கடைசிப் பாவரை திறவாமல் ஞானபோனகர் அடைக்கப்பாடிய முதற்பாட்டிலே அது அடைத்ததும் அற்புதமாம்.

"திறக்கப்பாடிய வென்னினுஞ் செந்தமிழ்
உறைக்கப்பாடி யடைப்பித்தாருந்நின்றார்"

வேளாளர் அடைக்கவும் அந்தணர் திறக்கவும் பாடுதல் முறைபோலும்! மேலும், அந்தணற்கு முதற்காட்சியும் அவர்காட்டவேளாளர் தரிசித்தலும் பண்டையமுறைபோலும்! உண்ணீர்மை பொருந்திய தவத்தினர்க்கும் இத்தகைய வேற்றுமை காட்டின மணவாளரெவர் கருத்துயாதோ? உலகெலாமுணர்ந்து ஓதற்கரியவனாகிய வுத்தமனுக்கு வருணவேறுபாடு செய்தலால் பயன் யாதுகொலோ!

நம்பர் திருவருளால் திருப்பைஞ்ஞீலியில் பொதிசோறும், கைலைவழியில் களைதீர்த்து வாவியில்மூழ்கி திருவையாற்றில் தோன்றுக என்று அப்பருக்கு தரிசனமுங் கிடைத்தன.

ஆளுடைய பிள்ளையாரும் வாகீசரும் திரு வீழிமிழலையிற்றங்கியக்கால் "வையமெங்கும் வற்கடமாய் செல்லவுலகோர் வருத்தமுற" முன்னவர் திருமாமகனுதலின்.

காசுவாசி யுடன்பெற்றார் கைத்தொண்டாரு மடிமையினால்
வாசியில்லாக் காசுபடி பெற்றுவந்தார் வாகீசர்"

இதனால் மிழலை நாதரும் இருவருக்கும் வேறு பாடு விளக்கியதன்மை வெளிப்படும்.

7. கோள்கை:—ஈசனை நினைப்பவர்மனங் கோயிலாக் கொண்டவர். ஈசனை எழுதிக் காட்டுதல் இயலாது.

அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணனும் அவனருளே
கண்ணாகக் காணினல்லால்
இப்படியன் இன்னிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன்
என்றெழுதிக் காட்டொண்ணாதே.

ஈசனை யுள்குவார்க்கன்றியில்லை முத்தியாம், அவன் கழற்சேவடி பற்றிலாதவர்க்கு பயனில்லை. பாத்திரஞ்சிவமென்று பணிவார் மாத்திரைக்குள் அருள் பெறுவார். ஆகலால் வேதமோதலும் சாத்திரங்கேட்டலும் நித்தமும் நீதிநூல் பலபயிலலும் குன்றமேறி யருந்தவஞ்செய்து வருந்தலும், காலை சென்று கலந்து நீர் மூழ்கலும் கோடிதீர்த்தலுங்கலந்து குளித்தலும் வேலை

எழுதினகாலத்தில் இவ்விதம் களைந்தவைகளை நிறைக்க முடியாமல் போய் விட்டதாகவும் எண்ணவேண்டும்.

இப்படிச் செய்வது ஆரியருக்குள் பெரும்பாலும் வழக்கமாயிருந்தது. தென்னாட்டுச் சைவருக்கு முக்கிய புராணங்கள் பெரிய புராணமும், திருவிளையாடற் புராணமும், அவைகளை பக்தவிலாசம், ஹாலாசிய மகாத்மிய மென்ற பெயர்களுடன் வடமொழிப்படுத்தி, அம்மொழியிற்றான் முதல் முதலுண்டானதென, ஆரியர் வாதாடுகிறார்கள். கடவுள் பல சமயங்களி லும் அடியார்களுடன் திராவிடத்தில் பேசினதாக வடமொழியார் உரைத் திருப்பதே அப்புராணங்கள் முதலில் தமிழிலிருந்த தென்பதற்குத் தக்க சான்று. இதுபோலவே தென்பாலார்க்குள்ள கோவில்களில தலபுராணங் களை வடமொழியில் சமைத்துவிட்டு-தமிழிலுள்ளன வெல்லாம் பின் உண் டானவை யென்றும், வடமொழியிற்றான் ஆதியாவுண்டானதென்றும் ஆரி யர் போராடுகிறார்கள்.

இதற்கிணங்க நம் நாட்டாரும்-நமது சமய சம்பந்த மாய யாவும் வட மொழியிலிருந்தாலன்றி தூய்மை பொருந்தாவென எண்ணுகிறதாக, முதல் நாளில் இச்சபையின் முன்னர் நண்பர் இராமலிங்கம் செட்டியாரவர்கள் எடு த்துக் கூறியிருக்கின்றார்கள். இது உண்மையே வடமொழி யில்லாவிட்டால் நமக்கு வீடுபெற முடியாதென எண்ணுவார்போலும். இவ்விதமாகவே ஐரோப் பாவிலும் ஓர் காலத்தில் ஓர் வீண்பத்தி யிருந்தது. அது எதென்றால் இபி ரேய பாடையிலிருந்து பரிசுத்தமான யாவுமுண்டான தென்றும என்ன காரியத்தை எடுத்த போதிலும், இபிரேய பாடையையே நோக்கிச்செல்வர். அவ்விதமாகிய கொள்கையை ஐரோப்பியர் விலக்கி விட்டார்கள் அதுபோல வே நாமும் முயன்று விலக்கி உண்மையை அறிய முயல வேண்டும்.

என் நாட்டாரே! எனது துணைவர்களே! யான் கூறிய வற்றை சரி யென ஒப்புக்கொள்ளற்க. அனேக வினாக்களை தூண்டியிருக்கின்றேன். அவைகளை நன்றாய் உளத்தில் ஆராய்ந்து சரியான முடிபை பெறல் வேண்டும்

---

சிவமயம்

# மாயை இலக்கணம்.

மா—ஒடுங்குதல் யா—வருதல். யாவுந்தோன்றவும் ஒடுங்கவுங் காரண மாய் நின்றது என்பதே. அன்பர்காள், மாயையென்னப்படுபொருள் இல் பொருளா, உள்பொருளா, இல்பொருளேல் ஓர் செயலைச்செய்யாது (செயல் அதாவது காரியங்) காணப்படலால்—உள் பொருளேயாம் உள்பொருளேல் இவ்வுலகிற்கு முதற்காரணமா-துணைக்காரணமா-நிமித்தகாரணமா-கடோற் பத்திக்குப்பிந்தி தண்டசக்கராதி வேண்டப்படாவாயினுங் கடகாரியம் நிகழ் வுழி - தண்டசக்கராதிகளின்றியமையாதன. இத்துணைக்காரணத்தை கடத் தின் முதற் காரணமாகிய மண்ணென்றுதல் நிமித்த காரணாகிய குயவனென் றுதல், கூறவியலா. இவ்வாறே ஒன்று மற்றொன்றாகாது. ஒரு காரிய நிகழ்ச் சிக்கண் இம்மூக்காரணங்களும் இன்றியமையாத பொருளாம். இம்முறையில் மாயை முதற்காரணமாகவும் பரமேஸ்வர சத்தியை துணைக்காரணமாகவும் பரமேஸ்வரனை நிமித்த காரணனாகவும் காரியங்காரணங்கள் உவமித்தல்வழக் கெனினும் இந்திரியாந்தக்கரண சாபேக்ஷகனாகிய குயவனை இவற்றை வேண் டப்படாத இறைவனோடுவமித்தல் ஒரு புடையுவமமாகக்கொள்க.

## மாயை யிலக்கணம்.

மாயை யாவது சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயையென மூன் திறப்படும். இவற்றுள் சுத்தமாயை யிலக்கணம் முதற்கண்ணும் மற்றிரு மா யை யிலக்கணம் முறையே ஒன்றன் பின்னொன்றாகவுஞ் சொல்லப்படும்.

யாது பாசானத்தென்று மிறைவன்றானிலயமாதி
பேதமூன்றுண்டாயாரும் பேசுதற்குரியனானன்
ஆதுமா மாயை மாயை குண்டலி அமலைவிந்து
தீதிலா வாசிவித்தை சிவமிவை பரியாயப்பேர்

என்ற திருவாக்கால் இச்சுத்தமாயையானது பரமேஸ்வரனது பெருங் கருணையான சிற்சத்தின் பிரிவாயும் சுத்த பிரபஞ்ச மூலகாரணமாயும் பின் ன சத்தியாயும் ஓ மென்னும் பிரணவ ஓாக்காரமாயும் பிந்தக்காரஞ்சேர்ந்த சமட்டியில் பிரணவ சூக்கும பஞ்சாக்கரமாகவும்பிறவாகவும் விளங்காநிற்கும். இம்மாயையானது மாமாயை, மாயை, குண்டலி, அமலை, விந்து, வாசி, வித் தைசிவம் என்பனவாதி பல உபசார நாமங்களைப்பெறும். இச்சத்தியை அதிட் டித்து நின்றே பரமேஸ்வரன் பஞ்சகிருத்தியாதிகளைச் செய்தருளுவர். பரை யாதி பஞ்ச சத்திலாதவன் சத்திகளும் உன் மனசமனைகளும் அவற்றின் காரிய பரநாத அபரநாத, பரவிந்து, அபரவிந்து, கலாதத்துவ புவனங்களும் அனுசிரு தர் முதலிய ஐவரும் அவர் பிரிவாம். அனந்தேஸ்வரர் முதலிய உருத்திர பே தங்களும் சதாசிவர் முதலிய மூர்த்தி பேதங்களும் ஈசானி முதலிய சத்திபேத ங்களும் லௌகீகம் வைதீகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மந்திரம் என் னும் ஐவகை ஞானங்களும் வேத சிவாகமங்களும் சூக்குமையாதி வாக்குகளும்

நிவிர்த்தியாதி பஞ்சகலைகளும் பிரமாதி அபாகர்த்தாக்களும் இடகலையாதி நாடிகளும் தத்துவாத்துவா முதலிய அத்துவாக்களும் அக்கினி மண்டல முதலிய மண்டலங்களும் ஆகிய இவைகட்கெல்லாந் தாரகமாகிய இச்சத்தி யுஞ் சிவ சத்தியின் விரிந்தொடுங்கும் பொருளேயாம். இஃதிவ்வாறாக இனி அசுத்தமாயையியி னிலக்கணமாவது.

## சிவஞான சித்தியார்.

விந்துவின்மாயையாகி மாயையின் அவ்வியத்தம்
வந்திடும் விந்துத்தன்பால் வைகரியாதிமாயை
மூந்திடுமோராகமாதி முக்குணமாதிமூலந்
தந்திடுஞ் சிவனவன்றன் சன்னிதி தன்னினின்றே:—

என்று கூறியவாற்றால் சுத்தமாயையினின்றும் அசுத்தமாயை தோன் றியதாக விளங்காநிற்கும். இவ்வசுத்த மாயையின் இலக்கணத்தைமேற்கூறிய சித்தியாரில்

நித்தியமா யருவா யேக நிலையதாயகிலத்துக்கோர்
வித்துமாய சித்தாயெங்கும் வியாபியாய் விமலனுக்கோர்
சத்தியாம் புவனபோகந் தனுகரணமு முயிர்க்காய்
வைத்ததோர் மலமாய்மாயை மயக்கமுஞ் செய்யுமன்றே.

என்று கூறியவாற்றாலுணர்க—

மாயை-எது, அவ்வியத்தம்-எது, அசுத்தமாயையை, பிரகிருதிமாயையை இம்மாயை மலகன்மங்களோடு விரவியதாய் ஜீவர்கள் யாவருந் தங்களிரு திறனறிவில் ஒன்றாகிய சத்தை அறியும், ஒளியறிவைப்பெறுதற்குக்கருவி யாயுநின்றதென்பதை மாயாதனுவிளக்கா மற்றுள்ளங்காணுமேதல் ஆயாதா னமொன்றை அதுவதுவா-வீயாத வன்னிதனைத்தன்னுள் மறைத்தொன்றாங் காட்டம்போல் தன்னை மலமன்றனை தனுன் என்பனவாதி யுண்மைத்திரு வாக்குகளாலறிக. மற்றும், எண்ணுக்கடங்காத ஊழிக்கால சர்வசங்காரம் எத்தனை நடந்தாலுந் தானழியாது நீரோட்டம்போல பிரவாகானுதியாய் முத் திபரியந்தம் நிலைபேறாக நின்று, தன் காரிய தத்துவதனுகரண புவன போ கங்களை யெல்லாந் தோன்றுவித்து நிற்குந்தகுதியுடையதுமிம்மாயையே.

இம்மாயை பரமேஸ்வரனால் ஆன்மாக்களுக்கு அறிவை விளக்குதற்பொ ருட்டு ஆகந்துக பிரபஞ்சகாரண பரிக்கிரக சத்தியாக எடுத்துக்கொண்ட பொருளாம். இம்மாயையோடு சிவ சத்திபிரேரக அனந்த தேவர் கலக்குழி முதலிலே கலைதோன்றி ஆணவத்தை ஒதுக்கி அறிவை விளக்குதலாகிய அருளை அலர்த்தும், நியதியும், காலமும் அக்கலையோடு உடன்றோன்றிய அவதரநாமங்களாய் விளங்க அக்கலையினால் மலமூடநீங்கி இயங்கியபோது ஞானசத்தி அறிவை விளக்க அவ்வான்ம அறிவு ஏகதேசமாய் விளங்குதலால் அக்கலையினின்றும் வித்தை தோன்ற அவ்வாறு தோன்றியகலையும் வித்தை யும் அறிவையுந் தொழிலையும் விளக்க போகசுகங்களி னிச்சை அவ்வறிவின்

விளைவாதலால் அவ்வித்தையினின்றும் அராகதத்துவந்தோன்ற இவ்வாறு பஞ்சதத்துவங்களாலாகிய கஞ்சுகசரீரத்தைப் பொருந்தி போக ஏதுவான போதும் புசிப்புக்கிடமான தனுகரணாதி புவனபோகங்களின்றி அவ்வியத்த மாயிருந்த மூலஸ்தானமாய் நின்ற இடம் பிரகிருதி. ஆகையால் அவ்வித்தையி னின்றும் மூலப்பிரகிருதி தோன்ற அதன்மேல் கலை, வித்தை, அராகம் என் னும் தத்துவங்களால் காரியப்படும் இச்சாஞானக்கிரியை மூன்றும் மூத்த விடம் பிரகிருதி ஆகையாலும் அதிலிருந்தே தனுகரணாதி தோன்ற வேண் டுகையாலும் இவ்வையின் விகாரமேகுணமாகும். இப்பிரகிருதியிலிருந்து குண தத்துவந்தோன்றிக் குணசரீரமாய் இக்குணவிகாரமாய் ஞானவேதுவே பிர தானமான சாத்துவிக முதலிய காரணங்களும் புத்தி தத்துவ முதலிய தத்துவங்கள் யாவுந்தோன்றும். இவை சகலாவத்தை யடைந்த ஜீவர்க ளுக்கு சுத்தா சுத்தானுபவபோக சாதனமாயிருக்கும். இம்மாயாமலத்தை ஆணவமலம் போலவே அனாதிமலமென சிலர் கூறுவர்

> நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
> சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
> மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
> அலர்சோகம் செய்கமலத் தாம்.

அதற்க்குவல்லி மலகன்மம் மன்னுளவாம் என்னுஞ் சுருதியையும் உதா ரணிப்பர். அவரங்ஙனங்கூறுதலமையாது. ஏதுபற்றி யெனில்ஆன்ம அறிவை மறைக்குந்தொழில் மலத்துக்குளதாகவும் அவ்வறிவை விளக்குந்தொழில் மா யைக்குளதாகவும் ஒளியு மிருளும்போல ஒன்றுக்கொன்று எதிராகிய பகைப் பொருள்களாகவும் கூறப்பட்டுண்மையின். அன்றியும் இம்மாயை ஆன்மாக்க ளோடு அத்துவிதமாய் பிரிவுபடாது ஒற்றுமைப்படும் பொருளாக அனாதியே உளதாயின் அவ்வான்மக்கிரியை மறைபடாது விளங்கியபடியே இருக்க வேண்டிவரும். ஆதலால் ஆன்மாக்களது மலநோயைக்கழற்றும் வைத்தியநாத சிவபிரான் பஞ்சகிருத்திய ஆதிகாலத்தில் தன்கையவுடைத பரிக்கிரக சத்தி யாக எடுத்துக்கொண்டதாக கூறுதலே சால்புடைத்தாம். இன்னுமாராயுமிட த்து மும்மலங்களும் முளையுந்தவிடும் உமியும் போலவென கூறியுண்மையால் நவலோகத்தி னொன்றாகிய செம்பிற்கும் நவதானியத்திலொன்றாகிய நெல் லுக்கும் தடையாகவுள்ளது. களிம்புமுமியுமாகிய ஒவ்வொரு வஸ்து வெனக் காட்டி அவ்விரண்டனையும் ஒருசேர உவமைப்பொருளாக வைத்து உவமேய மாகிய ஆன்மாவுக்கு தடையாயுள்ளது இதுவெனக்காட்டியிருத்தலானும் இன்னு மலகன்மமாயை என்னு மும்மலங்களையும் உமிமுளை தவிடாகிய மூன்றனொடு மியைத்து ஆணவமலத்துக்கு உமியையும் கன்மத்துக்கு முளை யையும் மாயைக்குத் தவிட்டையும் உவமையாகக்கூறப்பட்டுண்மையால் அவ் வுமியோடு சேர்ந்த அரிசியே முளைபெறு மென்பதும் அவ்வுமிதவிடு கழன்ற அரிசி முளைபெறாதென்பதும் அவ்வுமியினுண்ணிய ஒருபகுதியே தவிடென் பதும் அவ்வுமியினால் விளைந்த பிரயோசனமே முளையென்பதும் உவமானத் தில் கூறப்பட்டவுமி களிம்பு அனாதிப்பொருள்களென்றும் ஏனைமாயாகன்

மங்கள் இடைக்கடப்படுவதாகிய ஆதிமலமென்றும் உய்த்துணரவைத்த உண்மையை நுண்ணுணர்வால் காண்க. (அன்றியும் சிவபெருமானால் ஆன்ம விளக்கத்தின் பொருட்டு என்று கொடுக்கப்பட்டதோ அன்று முதல் இம்மா யாகன்மங்கள் முத்தி பரியந்தம் அழியாது நெடுங்காலம் நீடித்து நிற்கும் உரிமையைக்கொண்டு உபசாரவசனமாக அவ்வநாதி சத்தத்தை அணைத்து வைத்ததன்றி வேறல்ல. இன்னும் ஆகந்துகமலமெனக்கூறப்பட்ட இம்மாயை அநாதி வஸ்துக்களிலொன்றாயிருந்து ஆன்மாக்களுக்கு வேண்டிய காலத்தில் பின் வந்து கூடி நின்று கன்மானுபோக முடிந்த முத்திக்காலத்தில் அந்த ஆன்மாவினின்றும் விலகி மற்றைய பெத்தான்மாக்களோடு பிரியாது சேர்ந்துகலந்து சதாகாலமும் நிற்றலால் ஒரு காலுமழியாத நித்திய வஸ்துவேயா மெனச்சிலர் கூறுவர். அதையுமீண்டாராய்வாம். பொய் கண்டார் காணாத மெய்கண்ட சுவாமிகள் இவ்வுயிருக்கு உவமையாயணைத்த நெல்லானது ஒவ்வொரு அரிசியுந் தனித்தனி மூடப்பட்டதவிடுசெறிந்த நெல்லாயிருந்ததே யன்றி தனித்தனி அரிசியாயிருந்ததேயில்லை. இனி அதனை ஒருவாறு உமி மூடாது அரிசி தனியேயிருந்ததென தாபிப்பாராயினும் ஒரு அரிசியிற் பற்றியிருந்த உமிதவிடுகளை அதனினின்றுங்கழற்றி மற்றொரு அரிசியிற் பொருத்துவார் யாருமில்லை. துணிந்து பொருத்தினும் அது பொருந்துவதுமில்லை. ஒரு காற் பசை வைத்து பொருத்தி அமைத்தாலும் அவ்வரிசி முளைப்பது மில்லை, அது போலவும் ஒருவனுக்கு வந்த நோய்க்கிசையக்கொடுக்கப்பட்ட வவுடதம் அவனுடலிற் புகுந்து அந்நோயை நீக்கி அதனோடு தானும் அவ்வுடலிற் சமித்து அழிந்துபோகுமே அன்றி மற்றொருவனுக்கு வந்த மறு நோய்க்கு அவுடதமாக அவ்வயித்தியன் கையில் வந்தது மில்லை, இனி வருவது மில்லை, அது போலவும் சர்வஞ்ஞனாகிய வைத்திய சிவபிரான் காரண முதல்யவற்றா லியற்றுங் குயவனாதியர் போலாது சங்கற்ப மாத்திர கிருத்தியத்தால் ஒரு ஆன்மாவின் மல நோய்க்குக்கொடுத்த அவுடதமான மாயாகாரண காரியங்கள் போல் எவ்வகைப்பட்ட ஜீவர்கள் யாவருக்கும் அச்சங்கற்ப கிருத்தியமான ஒரே முறையிற்றானே கொடுத்ததாய் முடியுமே யன்றி இம்மாயை மற்றொரு ஆன்மாவுக்கிசையாது. இதுவுமன்றி அவ்வாறு ஜீவர்கள் யாவர்க்குங்கொடுக்கப்பட்டமையால் அம்மலநோய் நீங்கி முத்தியடைந்த ஆன்மாவினின்றுங்கழித்த மாயா ஔடதத்தை வாங்கி வைத்தற்கிடமாக வேறு ஆன்மாக்களின்மையானும் ஆன்மாக்களோடு ஒற்றுமைப்பட்டுக்கலவாது தனிப்பொருளாய் நிற்றலுங்கூடாமையானும் இதனை யெடுத்துக்கொடுத்த சிவன் தன்னோடு சேர்த்துக்கொள்ளவுங்கூடாமையானும் அவ்வான்மாக்களின் வினையொத்த பக்குவதீக்ஷா சத்திநிபாத சர்வ சங்காரகாலத்தில் தம்மாற் கொடுக்கப்பட்ட இம்மாயாகாரண பிரபஞ்சகாரிய அகம்புறமான தத்துவங்கள் தொண்ணூற்றாறையும் முதலறத்தாமே தகித்து சாம்பராக அழித்து விட்டாரென்றே யாவரு முணரவுஞ்சொல்லவுந் தக்க துணிபொருளாகின்றது. இன்னமும் இப்பூவுலக மனுடருக்குக்கூறிய ஆண்டு ஒன்று மேலுலக வாசிகளான தேவருக்கு நாளொன்றாகவும் அத்தேவ ஆண்டு நூறு கொண்டது பிரமனுக்கு நாளொன்றாகவும் பிரமவாண்டு நூறு கொண்டது விண்டு

வுக்கு நாளொன்றாகவும் அவ்விண்டு வாண்டு நூறு கொண்டது ஒருமகேஸ்வரதினமாகவும் அது நூறு கொண்டது ஒரு சதாசிவ தினமாகவும் அவராயுள் ஒரு சர்வசங்கார பகற்றினமாகவும் தோற்றமீறின்றி நித்திய தின சங்காரஞ்செய்யு மகாருத்திர மூர்த்தியான பிரமத்தையும் நித்திய வஸ்துவென கூறிய வேதம் பிறப்பிறப்பிற்பட்டு வருந்துந்தேவர்களையும் பிரமமெனத்துதித்தும் அழியாதவரென பொருள் கோடற்குறிய அமராராதி நாமங்களால் பிறப்பையுயர்த்திக்கூறியும் உள்ள அவ்வேத வாக்குகள் அவர் வயதின் கால நீட்டிப்பைக்குறித்த முகமன் வாக்காதலே யன்றி நித்திய ரென்னும் பொருளமையாத வாறுபோல ஜீவரையின்றி வேறு நிற்காத இம்மாயையும் அவரின் கன்மபோகம் கழித்தற்பொருட்டு வைத்திய சிவனால் இடையிலே கொடுக்கப்பட்ட அன்று முதல் வேற்றுமையின்றி அத்துவிதமாய்க் கலந்து நின்று கன்மபோகங்கழிந்து நின்று இருவினையொத்த மலபரிபாகத்தில் தன் சத்திக்குக்கெடுதலே மலபாக மென்னுஞ் சத்காரிய முறைமையினால் அம்மலத்தின் முதற்பிரிந்த இருவகைச் சத்தியினொன்றாய் தடத்த அதோ நியாமிகா சத்தி காரிய இம்மாயையும் அவ்வுயிரோடு நின்றே அழிந்து கெட்ட பக்குவத்தின் மேல் அதன் சொரூபமான ஆவாரக சத்தி காரியங்களும் அடியோடே அழிய தன் சத்தி முழுவதுங்கெட்டு அவ்வான்மாவுள்ளடங்குதலால் இதன் கால நீட்டிப்பு முதலியவைகளைக்குறித்த முகமனன்றி அனாதி நித்தியகாரண வஸ்து வாகாதென்பதை நுனித்தறிக. இது காறுங்கூறிய வாற்றால் மாயை முத்திறப்படுவன வென்றும் அவை இறைவனது பின்ன சக்திகளென்றும் அவற்றை இறைவன் ஆன்மாக்களின் அறிவு விளக்கத்தின் பொருட்டு சிருட்டி காலங்களில் பரிக்கிரக சக்திகளாகக்கொண்டு அனுக்கிரகம் பண்ணுவரென்றும் இவைகள் பல பெயருடையனவாக பேசப்படினும் ஒன்றன் பிரிவே யென்றும் இவற்றிற்றான் எத்திற அணுக்களுக்குந்தனுக்களும் கரணங்களும் புவனங்களும் போகங்களும் தோன்று மென்றும் இவற்றையின்றி எவ்வித ஆன்மாக்களும் சிவப்பேறு பெறுதல் இயலாதென்றும் போந்தவாறு காண்க.

இவைகளைக்கருவிகளாகக்கொண்டே பரமேஸ்வரர் பஞ்சகிருத்தியம் புரிந்தருளுவரென்றும் இவைகளைச்சிவபராஞ்சுடரின் சமவேத சிற்சத்தி அல்லது தாதான்மியசத்தி யென்று கோடல், எத்துணையும் பொருந்தாதென்றும் சுத்தமாயை அசுத்தமாயை யென்னப்படும் இருவகை மாயையும் இறைவனுக்குப்பரிக்கிரக சத்தியென்றும் இவையிற்றின் அசுத்த மாயையின் ஓரம்சமே பிரகிருதிமாயை யென்றும் இங்ஙனம் மூன்று பிரிவினவாக இறுக்கப்பட்ட இம்மாயைகள் அனாதிப்பொருளல்லவென்றும் பதிபசுபாசம் என்னு முப்பொருளுமே அநாதி நித்தியப்பொருளென்றும் மேற்கூறிய மாயைகள் பாசச்சார்பால் இடைக்கட் சார்ந்தனவென்றும் இவற்றின் பரப்பெல்லாம் விரிந்த சைவநூல்களில் அதிரகசியமாகக் கூறியுள்ளன வென்றும் கூறியவற்றை நுனித்தறிக.

அசுத்தமாயையின்<br>அதோநியாமிகா சத்தியே<br>பிரகிருதி மாயை.

‘ சமவேதம்’<br>நியதமாயுடனிகழ்வது.

# Sri Valmiki and South India.

# ஸ்ரீவான்மீகரும் தென்னாடும்.

"வான்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச்செய்தான்"

என்று மகாகவிகள் புகழும் ஸ்ரீவால்மீகி முனிவர் தம் காலத்தில் விளங்கிய பரதகண்ட நிலையைத் தம் ஆதிகாவியத்தில் உரிய விடங்களிலெல்லாம் சூசிப்பித்தருளுவர். அம்முறைப்படி, தென்னாடும் அவர் வாக்கில் குறிப்பிட்டுள்ளது. வான்மீகி முனி கூறிய தென்னாடென்பது விந்திய மலையின் தென் பக்க முழுமையுமாம். கிஷ்கிந்தையில்,* சுக்கிரீவ மகாராஜன், பிராட்டியைத் தேடி வரும்படி வானர வீரர்களை ஏவும் போது, தென்பக்கமாகச் செல்லுதற்குரியாரை நோக்கிச் சொல்லியதாக வால்மீகி முனிவர் கூறியவை அடியில் வருமாறு:—

"அப்பெரிய வானர சேனையை அனுப்பிவிட்டுக், குறிக்கப்பட்ட வானரர் சிலரைத் தென்றிசைக் கேவுவா னாயினன்............பின்பு அவன் தென்றிசையில் போதற்கரிதா யிருக்கு மென்பதைப் பற்றி அவர்களை நோக்கிச் சொல்லத் தொடங்கி—'பலவித மரங்களும் கொடிகளுஞ் செறிந்த ஆயிரஞ் சிகரங்களை யுடைய விந்த மலையையும், பெரும் பாம்புகள் தங்குவதும் கடத்தற் கரியது மாகிய நருமதாநதியையும் பெரும் பகுதிகளையுடைய வரதாநதியையும், மேகலை உத்கலை தசார்ண முதலிய நாடுகளையும், அசுவவந்தி அவந்தி முதலிய நகரங்களைம் நீங்கள் காண்பீர்கள்; விதர்ப்பம் ருஷிகம் மாஹிஷகம் வங்கம் கலிங்கம் கௌசிகம், மலைகளும் நதிகளும் குகைகளுமுடைய தண்டகாரணியம், கோதாவரி நதி முதலியவற்றையும் காண்பீர்கள்; அவ்வாறே, ஆந்திரம், புண்டரம், சோளம், கேரளத்தோடுகூடிய பாண்டிய நாடுகளையும் காண்பீர்; பின்பு தாதுக்கள் நிறைந்ததும் விசித்திரமான சிகரங்களுடையதும் பலவர்ணமான பூக்கள் நிறைந்த சோலைகளை யுடையதும் சந்தன வனங்கள் செறிந்ததுமான பெரிய அயோமுக மலையைத் * தேடுங்கள். அதன்பின், தேவரம்பையர் வந்து நீராடுகின்ற திவ்யமான தெளிந்த நீரு

---

* கிஷ்கிந்தை என்பது, துங்கபத்திரா நதிக்குச் சமீபமானதும் பம்பா சரஸ் இருந்த இடமுமாகிய ஹம்பி (Humpi) நகரை அடுத்து, மதங்காசிரமத்தைப் பெற்றிருந்ததாகிய ரிசியமூக பர்வதம், "மான்மலை," என்பதன் தென்பாலும், நீலகிரி, குடகு மலைத்தொடர்களுக்கு வடபாலுமாக, மைசூர் மலைப்பிரதேசங்களை யுள்ளடக்கிய "மேற்குத் தொடர்ச்சி மலை" யாம்.

* இது மலயமலையைக் குறிக்கும். [அயோமுகம், "ஆட்டுத்தலை"; வில்வலன் வாதாபி கதைகளைச் சார்ந்து குடகு மலைக்கு வந்த பெயர். மலய மலை-குடகுமலை Ed.]

டைய அழகிய காவேரி நதியை அங்கே காண்பீர்கள். அந்த மலய மலையின் சிகரத்திலே ஆதித்தனுக்குச் சமானமான மிகுந்த ஒளியையுடைய முனி சிரேஷ்டரான அகஸ்தியரைக் காண்பீர்கள். பின் அம்மகருஷியிடத்தில் ஆணைபெற்றுச் சென்று முதலைகள் நிரம்பிய பெரிய தாமிரபர்ணி நதியைத் தாண்டுங்கள். அந்நதி அழகிய சந்தனச்சோலைகளால் மூடப்பெற்ற திட்டுக் களை யுடையதாய், கணவனிடத் தன்புள்ள யுவதியானவள் புக்ககம் புகுமாறு போல, சமுத்திரத்திற் சென்று விழும். பிறகு பொன்னிறத்ததாயும் அழகுடைத்தாயும், முத்தமயமான மணிகளால் அலங்கரிக்கப் பெற்றதாயும் பாண்டியர்க்கு யோக்கியமாயுமுள்ள கவாடத்தையும் பார்க்கக் கடவீர்கள்; அதன்பின் சமுத்திரத்தை யடைந்து காரிய நிச்சயத்தைச் செய்யுங்கள்."

வான்மீக பகவானது இவ்வாக்கியங்களில், விந்திய பர்வதத்துக்குத் தென்பக்கத்தே—நருமதை, கிருஷ்ணவேணி, கோதாவரி, தாமிரபர்ணி முதலிய நதிகளும், மேகலதேசம் (விந்தப்ரதேசம்,) உத்கல தேசம் (கஞ்சம்) தசார்ணம் (சண்டாகிரியின் கிழக்கு,) அசுவவந்தி, விதர்ப்பம் (பீரார்,) ருஷிக தேசம் (பங்களப்பகுதி), மாகிஷகதேசம் † கலிங்கம் (வடசர்க்கார்), கௌசிகம், ஆந்திரம் (தெலுங்காணம்), புண்டரம் (வங்கதேசப்பகுதி), சேர சோழ பாண்டியம் முதலிய நாடுகளும், தண்டகாரணியம் என்ற பெரிய வனமும் குறிக்கப்பட்டுள்ளன. சுக்கிரீவன் வானர வீரர்களைத் தென்றிசைக்குச் செல்லும் படி விடுக்கு மிடத்து இந்நாடு முதலியவை வருதலால், இவை ஆரிய மக்களால் தக்ஷிணப்பிரிவுகளாக முன்பு கருதப்பட்டிருந்தன வென்பது விளங்கும்.

இவற்றுள் தண்டகாரணியத்தினைப்பற்றிய வரலாறுகள் சில வான்மீகத்தினின்று அதிகமாக அறியப்படுகின்றன. இவற்றை, யாழ்ப்பாணத்து ஸ்ரீமாந் முத்துத்தம்பிப் பிள்ளையவர்கள் "தமிழ் நாட்டின் பூர்வநிலை" * என்ற வியாஸத்துக்குறித்திருக்கின்றனர். அவ்வரலாறு வருமாறு. † "பகவான் அகஸ்திய முனிவர் ஸ்ரீராமனை நோக்கி, இத்தேசத்தினது வரலாற்றை உள்ளவாறு கூறுவேன் கேட்பாயாக. பார்க்கவ மகரிஷியினது சாபத்தால் தண்டகனு மழிந்து, அதன் தேசமாகிய இதுவும் மக்களும் விலங்குகளும் வாழப் பெறாததாயிற்று. விருக்ஷம் செடி கொடிகள் தவமுனிவர்கள் இல்லாததும், மிக்க பயங்கரமும் சகித்தற் கரிய வெம்மையு முடையது மாகிய பாலை நிலமா

---

†இது விந்தப்பிரதேசத்தைச் சார்ந்த அநூபதேசத்தின் தலைநகர் என்று இரகுவம்சத்து, சு-ம்சர்க்கம், ௩எ, ௪௩-ம் சுலோகங்களால் விளங்கும்.

* செந்தமிழ்த் தொகுதி - க; பக் - ௩௦௧.

† இப்பகுதி— ஆரணியகாண்டத்துப் பதின் மூன்றும் அத்தியாயத்துக் கண்டதென்று—ஷெ பிள்ளையவர்கள் குறித்திருத்தலோடு, "முதற்குறளுண்மை" என்னுந் தலைப்டெயருடன் 1900-ஆ மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையினின்று வெளிவந்த புஸ்தகத்தும் விவர்க்கப்பட்டுள்ளது. இப் பகுதி அச்சுப்பிரதிகளிற் காணப்படவில்லை யென்றும், சில வான்மீகக்கை யெழுத்துப் பிரதிகளிற் கண்டதென்றுந் தெரியவருகிறது.

யிற்று. விந்திய கிரியினது அடிவார முதல் தெற்கே ஆயிரம் யோஜனை தூரம் வரையும் மழை வீழ்தலும் சுகமான காற்று வீசுதலும் இல்லை. மிக்க பயங்கர முடையதும் கொடியதும் கனற்புகை சூழ்ந்தது மாகிய காடாய்ப் பல்லாயிரம் வருஷம் நிர்மானுஷ்யமாய்க் கிடந்தது. பின்னர் வெள்ளி மயமாகிய இமயத்தினின்றும் இங்கு வந்தேன். பர்ஜன்னிய மென்னும் ஜலதேவதையோடு மேகங்களைக் கொணர்ந்தேன். இமயத்திலிருந்து நானாவகை ஒஷதிகளும் கொணர்ந்து வளர்க்கப்பட்டன. மீண்டும் அழகிய தாமரை யோடைகளும் நதிகளும் குளங்களும் அமைக்கப்பட்டன. அவற்றால் செழித்தடர்ந்த திவ்ய வனங்களும் பலவகைத் தானியங்கள் விளைகின்ற விளையுள்களும் உண்டாயின. வனங்களெங்கும் இருடிகள் குடி கொண்டார்கள். மனதிற்குக் களிப்பைத் தருகின்ற காட்சியினையுடைய தேச மாயிற்று'' என்க.

இச்செய்திகளால், இராமாயண சரித்திரம் நடந்தேறுதற்கு முன்னர், தண்ட காரணியத்துக்கு அகஸ்திய மகருஷி வந்தாரென்பதும், அவர் வருகைக்கு முன்பு இக்காடு வெறும் பாழ்வனமாயும் சில விடத்து அடர்ந்த பெருங்காடாயுமிருந்த தென்பதும், அம்முனிவர் இங்கு வரும்போது அநேக ருஷிகளையும் அழைத்து வந்தாரென்பதும், அக்குறு முனிவரே இத்தேசத்தில் நல்லமழை நல்லநதி நன்மரங்கள் முதலியவற்றை உண்டாக்கினாரென்பதும் புலப்படும்.

அகத்தியனார் தெற்கே வருவதற்கு முன், இக்ஷ்வாகு மைந்தனாகிய தண்டகன் சுக்கிர சாபத்தினால் மண்மாரி பெய்ய மடிந்த காலத்து அவன் ராஜ்யமும் மடிந்த தென்பது இராமாயணம் உத்தரகாண்டத்துக் கண்டது. இக்ஷ்வாகுவின் மைந்தனான தண்டகன் கொடியோனாய் விந்தத்துக்கும் சைவலத்துக்கும் இடைப்பட்ட நாட்டை ஆட்சி செய்து வருகையில், பார்க்கவ (சுக்கிரன்) புத்திரியாகிய அரசை யென்பாளைக் காதலித்து அவளை வலிதிற் கலந்த காரணத்தால் அங்ஙனம் சுக்ரசாபம் பெற்றனன் என்பது கதை.

தண்டகாரண்ய மென்பது, முற்காலத்தில், சேர சோழ பாண்டிய நாடுகளை அடுத்திருந்த தென்பது, அந்நாடுகட்கும் விந்தத்துக்கு மிடையில் வேறு தேசங்களைக் குறியாது, * ''விந்தத்தின் தெற்கே ஆயிரம் யோசனை யளவும் வெறுங்காடாய்க் கிடந்தது'' என வான்மீகி கூறுதலால் விளங்கும். ஸ்ரீராமபிரான் காலத்தில், அப்பெருவனாந்திரத்தில் அங்கங்கே ருஷிகள் அநேகர் குடியேறி வசித்து வந்தனரென்பதும், அப்பிரதேசம் ஜனஸ்தானம் எனப் பெயர் பெற்ற தென்பதும் மேற்காட்டிய பிரமாணங்களே விளக்கும். ''ஜனஸ்தான''த்தில் போருண்டாகுமென்று சந்தேகித்தவனும் இலங்கைக் கரசனு

* சேரசோழ பாண்டிய தேசங்கள் நீங்க, மேலே கூறிய நாடுகளெல்லாம் விந்தியத்தை யொட்டியும் அதனைச்சிறிது அடுத்து முள்ளவைகளே யாதலாலும், விந்தத்துக்குந் தென்னாட்டுக்கும் மத்தியில் வேறு தேசங் குறிக்கப்படாமையாலும், வால்மீகி காலத்து அவ்விடம் பெருவனாந்தரமே யென்பது நன்கு தெளியப்படும். பாரதத்தில், தெற்கே அநேக ராஜ்யங்கள் குறிக்கப்பட்டுள்ளன. (See Bhandarkar's History of Dekkan. p. 142.)

மாகிய இராவணன் ஈசுவரனிடமிருந்து அடைதற்கரிய பிரமசிரமென்ற அஸ்திரத்தைப் பாண்டியன் பெற்றிருப்பது தெரிந்து, அம்மன்னனுடன் சந்தி செய்துகொண்டு இந்திரலோகத்தை வெல்லப்போனான்" * எனக் காளிதாசர் ரகுவமிசத்திற் கூறுவதால் அந்த ஜனஸ்தானமும் தமிழ் நாட்டுக்கு வெகுதூரமன்றென்பது பெறப்படும். இத்தண்டகாரண்யம், ஆரியமக்களால் மிகுதியுங் குடியேறப் பெற்ற பிற்காலத்திலும், அவ்வனத்தின் ஆதிப்பெயரே தன்பெயராய்த் தண்டகாரண்ய நாடென்னும் பெயர் பெறலாயிற்று. "பதிற்றுப்பத்"தின் ஆறுவதன் பதிகத்தில், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் செய்கைகளுள், "தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத், தொண்டியுட் டந்து கொடுப்பித்து" எனவும், அதனுரையில் "தண்டாரணிய மென்றது ஆரிய நாட்டிலுள்ளதோர் நாடு" † எனவும் வருதலால், தமிழ் நாட்டையடுத்து அஃதிருந்ததும் பிறவும் உணர்க.

இத்தண்டகாரணியத்துக்குப் பின், வான்மீகி முனிவர், ஆந்திர புண்டர சோழ கேரள பாண்டிய நாடுகளைக் குறித்துவிட்டு, பின்னர், மலயபருவதத்தின் சிறப்பையும் அம்மலையினின்று காவிரிநதி பிரவகித்தலையும் குறிப்பிட்டுள்ளார். மலய பர்வதம் என்பது தென் கோடியிலுள்ள பொதியமலை மட்டுமன்றி, நீலகிரியும் குடகும் அடங்கிய "மேற்குத் தொடர்சசி மலை" ப்ரதேசமுமாம். இம்மலையினின்று தெய்வத்தன்மை வாய்ந்த காவிரி வெளியாவதையும் அம்மலையி னுச்சியில் அகஸ்திய முனிவர் விளங்குவதையும் வான்மீகியார் கூறியுள்ளார். அகஸ்தியர் காவிரியுற்பத்தி யாகுமிடத்தில் வசிப்பதாக முனிவர் இங்கே கூறினும், ஆரணியகாண்டத்தில், கோதாவரிக் கரையிலுள்ள பஞ்சவடிவுக்கு (Nasik) இரண்டுயோசனை தூரத்தில் அகஸ்தியாசிரம மிருந்ததாகவும் அவர் கூறி யிருக்கின்றார். இதனால், அக்குறு முனிவர் "மேற்குத் தொடர்ச்சிமலை" முழுமைக்கும் உரியவராய்த் தென்னாட்டைக் காத்தருளியவர் என்பது விளங்கும். இனி வானர வீரர்களை நோக்கி சுக்ரீவன் வழிகூறும்போது, "அம்மலைய மலையினுச்சியில் மிகவும் தேஜோவானாய் சூரியஸமானராய் ருஷிசிரேஷ்டராய் உள்ள அகஸ்திய முனிவரையும் பாருங்கள்: பிறகு நிர்மலசித்தமும் மிகவும் ஞானவானுமான அம்முனிவரது ஆணை பெற்றுக் கொண்டு தாமிர பர்ணியைத் தாண்டுங்கள்" எனக்குறித்தலால், தென்னாட்டிற் புகுவதற்கு அகஸ்தியமுனிவரது அநுமதிபெறுதல் அக்காலத்தில் அநுகூலமா யிருந்ததென்பதும் விளங்கும். இதனை நோக்கும்போது குறுமுனிவர் "இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து அவனை ஆண்டு (தென்னாட்டின்) வாராமை விலக்கிப் பொதியின்கண் இருந்தனர்" என்ற நச்சி

---

* இரகுவமிசம், சர்க்-சு; சுலோ—சுஅ.

† மகாராஷ்டிர தேசத்துப் பிராமணர், விசேட காலங்களிற் செய்யும் வடமொழி ஸங்கல்பக் கட்டுரையில் "மகாராஷ்டிர தேசே" என்றாதல், "தண்டகாரண்ய தேசே" எனக்கூறிவருதல் இன்றும் வழக்கமென்று தெரிதலால், அம்மகாராஷ்டிர தேசமே இவ்வாரிய நாடாகக்கருதத்தக்கது. (See Bhandarkar's History of Dakkan. p. 136)

ஞர்க்கினியர் கூற்று ஞாபகத்துக்கு வருகிறது. அக்காலத்து அரக்க ராதிய ரால் தென்னாட்டு ஆரியர்க்கு நேரும் இடுக்கண் நீக்கி அநுகூலஞ்செய்தற்கு அகத்தியரே முன்னின்றுபகரித்தாராவ ரென்பதற்கு வடமொழி தென் மொழிப் பிரமாணங்கள் பல காட்டலாம். வான்மீகி பகவான், ஸ்ரீராமபிரான் லக்ஷ்மணரை நோக்கி அகஸ்தியாசிரமத்தைப் பற்றிக் கூறியதைக் குறிக்கும் போது, "அம்மகானாகிய அகஸ்தியர், தாம் இவ்வுலகத்துக்கு நன்மைசெய்யும் பொருட்டு, இங்கிருந்த யமனுடைய உபத்திரவத்தை நீக்கி, இத்தென்றிசை யையும் சுகயாக வசிக்கத்தக்க திசையாகத் தமது தவவலிமையாற் செய்து வைத்தார்" எனவும், "எவரொருவருடைய மகிமையால், இன்றைக்கும் அசு ரர்கள் இத்தென்றிசையைக் கண்ணெடுத்துப் பார்த்து உட்புக நடுங்குகின் றார்களோ, அவருடைய ஆசிரமம் அது; மகா புண்ணிய மூர்த்தியாகிய அவர் இத்திசைக்கு வந்தது முதல், இங்கே அரக்கர்கள் தம் பகைமை நீங்கிச் சாந்த முள்ளவராய் விட்டார்கள், அவர் பெயரைக் கொண்டே இத்தென்றிசையும் அகஸ்தியர்திசை என்று வெகு சாந்தமான பெயர் பெற்று மூவுலகத்தும் பிர சித்தியடைந்து கொடியவர் அஞ்சும் திசையாக விளங்குகிறது" எனவும் ஆர ணியகாண்டத்து கக-ம் சருக்கத்துக் கூறுதலால் மேற்கூறிய விஷயம் நன்கு வெளியாகும்.

இனி, தமிழ்வரலாறுகளை நோக்குமிடத்து, முற்காலத்தே அசுரர்களால் துன்ப நேர்ந்தபோது சோழனொருவன் "தூங்கெயிலெறிந்"தது, இக்குறு முனிவர் அருளினாலே, ஆம் என்பது விளங்கும். இதனை,

> உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்ப்
> பலர்புகழ் மூதூர்ப் பண்புமேம் படீஇய
> ஓங்குயர் மலையத் தருந்தவ னுரைப்பத்
> தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்

என்னும் மணிமேகலை யடிகளிற் (காதை-க) காண்க. காந்தமன் என்னும் மற்றொரு சோழன் பரசுராமரது கொடுமையினின்று தப்ப இம்முனிவரது பேரருளை நாடிய வரலாறு "அமர முனிவனகத்தியன் றனாது, துயர்நீங்கு கிளவியின் யான்றோன் றளவுங் ககந்தன் காத்தல்" என அந்நூலானே (உஉ சிறைசெய்காதை; அடி,—௩ ரு-௩எ) அறியலாம். இக்காந்த மன்னவன் பொ ருட்டே, காவிரியைச் சோணாட்டிற் பிரவகிக்கும்படி அவ்வகத்தியனார் செய் தா ரென்பது,

> "செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்
> கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
> அமரமுனிவன் அகத்தியன் றனாது
> கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை
> செங்குணக் கொழுகிய சம்பாபதி"

எனவரும் அந்நூற்பதிகத்தால் அறிக. (சம்பாதி என்பது காவிரிப் பூம்பட்டி னம்) இதனுள், "அமர முனிவனகத்தியன்றனாது, கரகங் கவிழ்த்த கா

விரி'' என்பதனுல், அகஸ்தியாசிரமமொன்று, குடகுமலையில், இருந்தமை வலிபெறும். * இவ்வாறே, பாண்டியனுக்கும் அகத்தியனுர் மிகவும் அருள் செய்தவ ரென்பது, "அகஸ்தியரால் பட்டாபிஷேகம் செய்யப்பட்ட பாண்டிய வமிசம்," "பாண்டிய வமிசத்துக்கு ஆதியில் ஆசாரியஸ்தானம் வகித்தவர் அகஸ்தியர்'' என நூல்களிலும் சாஸனங்களிலும் காணப்படுவதால் அறியலாம், "ஸ்ரீகாளிதாஸரும் அகஸ்திய மாமுனிவர், இப்பாண்டியர் தமது அசுவமேத யாகத்தை முடித்து அவபிருத ஸ்நானஞ் செய்தவுடன், • வெகு அன்போடும் இம்மன்னரிடம் வந்து 'தங்களுடைய ஸ்நானம் சரிவர முடிந்ததா? என்று கேட்கிருர்'' என்று இரகுவமிசத்துக் (சருக்-சு; சுலோ-சுக) கூறுதல், அகஸ்தியர் பாண்டியர்க்குள்ள நெருங்கிய தொடர்பை விளக்கும்.

மேற்கூறிய அகத்திய முனிவர் வரலாறுகளை யெல்லாம் கூட்டிப் பார்க்கு மிடத்து, அம்முனிவர் மேற்கொண்ட முயற்சி முழுதும், முக்கியமாக ஜனப்பெருக்க மின்றிப் பெருங்காடாய்க்கிடந்த விந்தத்தின் தென்பகுதியில் ஆரியமக்களைக் குடியேற்றி, அப்பகுதியை நிலவளம் நீர்வள முடையதாக்கி, அன்னோர்க்கு வேண்டிய சௌகரியஞ் செய்து விருத்தி செய்ததே என்பது நன்கு விளங்கும். பூமியின் வடபாகம் ஜன நெருக்கத்தின் மிகுதியால் தாழ்ந்தும் தென்பாகம் அஃதின்றி உயர்ந்தும் இருந்தவற்றைச் சமநிலைப்படுத்தவேண்டித் தேவர்களால் அகத்தியர் தென்றிசைக்கு அனுப்பப்பட்டார் என்று புராணங்கள் கூறுவதின் முக்கிய கருத்தெல்லாம், தென் தேசத்தில் அம்முனிவர் மேற்கொண்ட குடியேற்றத்தியற்றியே யன்றிப் பிறிதன்றாம். இதற்கேற்ப, "தென்றிசைக்குப் போதுகின்ற அகத்தியர், "துவராபதிப்போந்து நிலங்கடந்த நெடுமுடி யண்ணல் வழிக்கண், பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையும் கொடுபோந்து காடு கெடுத்து நாடாக்கிச'' செழிக்க வைத்தார் என்று தொல்காப்பியப் பாயிர வுரையில் நச்சினார்க்கினியர் குறித்த பழைய செய்தியும் பொருந்துமாறு கண்டு கொள்க.

இனி, விந்தியத்தின் தென்பாலுள்ள நாடுகளைக் குறித்து வந்த வான்மீகிமுனிவர், "சோளாந் பாண்டியாஞ் ஸகேரளாந்''—(சோழ தேசத்தையும் கேரளத்தோடுகூடிய பாண்டிய தேசத்தையும்) என்று கூறுகிறார். "ஒருவினை யொடுச்சொல் லுயர்பின் வழித்தே'' என்னுந் தமிழ் வழக்குப்படி, கேரளத்தோடுகூடிய பாண்டியம்' என்பது கேரளதேசம் உயர்ந்த தென்பதைக் குறிக்குமாயினும், வடமொழி வழக்கு இதற்கு நேரெதிராகும். என்னை? "ஸஹயுக்தே அப்பிரதானே'' என்பது அதனிலக்கணமாதலின். அஃதாவது "ஒருவினை யொடுச்சொல் இழிபின் வழித்தே'' என்பதாம். இங்ஙனம் 'பாண்டியாந் ஸகேரளாந்' என அப்பிரதானத்தில் கேரளத்துக்கு 'ஒடு' கொடுத்திருத்தலால் வான்மீகி காலத்துப்பாண்டிய நாட்டுக்குள்ளடங்கிச்சேரநாடு இருந்ததுபோலும்!

இனி, மலயத்திலுள்ள அகத்திய முனிவர்பால் விடைபெற்ற பின்னர், தாமிரபர்ணி நதியைத் தாண்டும்படி கூறப்படுதலோடு, அந்நதிசமுத்திரத்துச்

செல்லுமாறுஞ் சொல்லப்படுகிறது.* அதன்பின்பு பாண்டியனது நகர விசேடம்வருகின்றது. இங்ஙனம், அந்நதி சமுத்திரஞ் சார்தலைக்கூறிப்பாண்டியன் நகரவிசேடத்தைவான்மீகி குறித்தலால், அப்பட்டணம் தாமிரபர்ணியின் சங்கமத்தயலில் இருந்ததாகக் கருதத்தக்கது. "அதன்பின் சமுத்திரத்தை யடைந்து காரிய நிச்சயத்தைச் செய்யுங்கள்" என முடிவில் மகருஷிகூறுதலாலும் இத்திவேக்ருத்தாதல் காணலாம். இனி, இப்பாண்டியனது நகரவிசேடத்தைப் பற்றி வால்மீகி கூறும் சுலோகம் வருமாறு:—

> ததோ ஹேமமயம் திவ்யம் முக்தாமணி விபூஷிதம் |
> யுக்தம் கவாடம் பாண்ட்யாநாம் த்ரக்ஷ்யத வாநரா: ||

இதன்பொருள்:—"பிறகு, பொன்நிறைந்ததாயும் அழகுடைத்தாயும், முத்துமயமான மணிகளால் அலங்கரிக்கப்பட்டதாயும், பாண்டியர்க்கு யோக்யமானதாயுமுள்ள கவாடத்தை வானரவீரர்கள்! பார்க்கக்கடவீர்" என்பது. இவ்வுரை, திலகர்தீர்த்தர் கோவிந்தராஜர்என்னும் இராமாயணவியாக்யாதாக்களுள் பின்னவர்கூறியது. முன்னவரிருவரும் "பின்பு பொன்னிறைந்ததாயும், அழகுடைத்தாயும், முத்துமணியிவற்றால் அணியப்பட்டதாயும் நகரத்தோடு இணைக்கப்பட்டதாயு முள்ள பாண்டியர் வாயிற்கதவை வானரர்காள்! போய்க்காண்பீர்" என்னும் பொருள்படக் கூறினர். அஃதாவது— "கவாடம்-பாண்ட்யாநாம் நகர த்வார கபாடம்", பாண்டியரது நகரவாயிற் கதவு, என்பது தீர்த்தீயம்; "யுக்தம் புரப்ராகார கடிதம்", நகரத்தெயிலோடு இணைக்கப்பட்ட, என்பது திலகம். இங்ஙனம், வடநாட்டாராய் விளங்கிய உரையாசிரியர் கருத்திவை யாயினும், தென்னாட்டாரால் வான்மீகத்துக் குரையிட்ட கோவிந்தராஜர் முழுக்கருத்தும் ஈண்டு ஆராயத்தக்கது. அவர்அடியில் வருமாறுஎழுதுகிறார்.

> "ததோ ஹேமமயமிதி || பாண்ட்யாநாம்=பாண்ட்ய
> ராஜாநாம் | யுக்தம்=யோக்யம் | கவாடம் அநேந
> நகரம் லக்ஷ்யதே | முக்தாருபைர்மணிபி: ரத்நை:
> பூஷிதம் ததுத்பத்திதேஸத்வாதிதிபாவ: ||"

இதன் பொருள்: பாண்டியா நாம்-பாண்டிய ராஜாக்களுடைய, யுக்தம்-யோக்யம், கவாடம்-இதனால் நகரம்குறிக்கப்படுகிறது, முக்தாமணி விபூஷிதம்-முத்துமயமான மணிகளால் அலங்காரமாகிய, என்றது அது பிறக்குமிடமாதலால் (அங்கே அது மிகுந்துள்ளது) என்பது கருத்து.

இவ்வரும் பதவுரையால், ஸ்ரீகோவிந்தராஜர் "முத்துமயமான மணிகளால் அலங்காரமானதும் பாண்டியர்க்கு யோக்யமானதுமான பாண்டியரது கவாடபுரம்" என்பதே பொருள் என்று கருதினாராதல் காண்க. முற்கூறிய தீர்த்திய திலக வியாக்கியானங்களினும், இவ்வியாக்கியானம் தமிழ்வழக்குகளைத்தழுவி மிகச்சிறந்து நிற்றல் தெளியப்படும்; என்னை? "கபாடபுரம்"

---

தென்பால். வைகை முதலிய நதிகளை முனிவர் கூறாமை கவனிக்கத்தக்கது.

என்பது பழங்காலத்தே பாண்டிய ராஜதானியாய் இடைச்சங்கமிருந்து தமிழ் ஆராய்ச்சி செய்துவந்த நகரம்என்பதும், இக்கபாடபுரச்சங்கத்தில் தொல்காப்பியம் செய்யப்பட்ட தென்பதும், இச்சங்கமிருந்தார் ஐம்பத்தொன்பதின்மர் என்பதும் பிரசித்த மாதலால் என்க. இதனை, இறையனுர் களவியற் பாயிரத்தில் "அவர் (இடைச்சங்கத்தார்) சங்கமிருந்து தமிழ்ஆராய்ந்தது கபாடபுரத் தென்ப" எனவும்; சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் "இரண்டா மூழியதாகிய கபாடபுரத்தில் இடைச்சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத்திரீஇய நிலந் தரு திருவிற் பாண்டியன் அவைத்து" எனவும்;

> "இவ்வகை யாசரிற் கவியரங்கேறினர்
> ஐவகை யாசர் ஆயிடைச் சங்கம்
> விண்ணகம் பரவும் மேதகு கீர்த்திக்
> கண்ணகன் பரப்பிற் கபாட புரமென்ப"

எனவும் * வருவனவற்றால் காண்க. திலக முதலிய வியாக்யானங்களின்படி, கவாட மென்பது பாண்டியரது வாயிற் கதவெனக்கொண்டு, அதற்கேற்ப 'யுக்தம்' என்னும் சொல்லை நகரத்தாரேரடு இணைக்கப்பட்ட என்னும் பொருள்படுத்திக்கவாடத்துடன் பொருத்தல் சிறவாமைகண்டு, அதுபாண்டியரது நகரத்தையே குறித்ததாகல் வேண்டுமெனச் சுலோகவியல்பை யறிந்து கோவிந்த ராஜர் எழுதிய வுரை ஈண்டுப் புகழத்தக்கதாம். கபாடமென்னும் பெயர் கொண்ட பாண்டிய நகர மொன்றிருக்கும்போது, கதவென்னல் வேண்டா என்பது எளிதில் விளங்கத்தக்கதன்றே. மேலும் நுணுக்கமான இடங்களி லெல்லாம் தேடிவரும்படி வானர வீரர்கள் ஏவப்பட்டிருக்க, ஈண்டு மட்டும் பாண்டியனது தங்கக் கதவைப்பார்த்து விட்டுவரும்படி கூறப்பட்டதென்பது வான்மீகியின் கருத்தாகாதென்க. இனி, "முக்தாமணி விபூஷிதம்" என்னும் அடைக்கு, கோவிந்தராஜர், 'முத்தும்மணியு மிவற்றால் அலங்கரிக்கப்பட்ட எனக்கதவுக் கேற்றிப்பொருள் கொள்ளாது, "முத்துமயமான மணிகளால் அலங்காரமாயுள்ள என்றது அது பிறக்கு மிடமாதலால் (அந்நகரத்தில் அது மிகுந்துள்ளது) என்றது கருத்து" என்று நகரத்துக்கேற்பக் கூறியதும், அவரது தமிழ் வழக்கினை யறிந்தெழுதும் உரைச்சிறப்பைக் குறிக்கின்றது. என்னை? கபாடபுரம் தாமிரபர்ணியின் சங்கமத் தயலில் உள்ளதாதலும், அந்நதி கடலுடன் கலக்கு மிடத்துப்பிறக்கும் முத்துஆணித்தரமான தெனநூல்கள் கூறலாலும் என்க. இதனை "தலங்காவலன் றஞ்சைவாணன் முந்நீர் பொருந்தண்பொருந்தத் திலங்கார் வலவடம்" † என்னும் பொய்யா மொழியார் வாக்கானும், ஸ்ரீகாளிதாசரும் "ரகுமகாராஜருக்குஅப்பாண்டியர், தாமிரபர்ணி

---

* சிலப்பதிகார உரைப்பாயிரத்தில், மகாமகோபாத்தியாயர் ஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள் காட்டியிருக்கும் பழைய அகவலொன்றைப்பார்க்க

† "தஞ்சைவாணனது கடலை யெதிரும் தண்ணிய பொருநையாற்றின் கண் பிறந்தொளிரும் முத்துக்கள் கோத்த வலியவடம்" என்பது இதனுரை. (தஞ்சை வாணன் கோவை: பாட்டு நிசு.)

சமுத்திரத்தில் விழு மிடத்திலிருந்து எடுத்த நன்முத்துக்களை, தாங்கள் அவ்வளவு நாளாகச்சேர்த்துவைத்திருந்த புகழைக் கொடுப்பதுபோலக் கொடுத்தார்கள்'' என இரகுவமிசத்துக் (ஸர்க்-௪;-௬-௫௦) கூறுதலாலும் அறியலாம். இதனால் ஆணி முத்துக்களின் வளத்தால் அலங்காரமாயுள்ளது கபாடபுரமென்பதாயிற்று. இக்கவாடபுரம், கொற்கைப் பக்கத்திருந்திருக்க வேண்டும்

இங்ஙனம் "விண்ணகம் பரவு மேதகு கீர்த்திக்-கண்ணகன் பரப்பிற்கபாடபுர'' ததை, தெய்வப்புலமை வான்மீகி முனிவர் சிறப்பிததுக்கூறியிருத்தல் போலவே, அவரால் வேறு தமிழ்நாட்டு முக்கிய பட்டணமும் கூறப்பட்டதுண்டோ எனின்; உண்டு, வானர வீரரிற் சிலரை சுக்கிரீவன் மேல்நாடுகளில் தேட விடுக்கும்போது அடியிற்கண்ட சுலோகம் சொல்லப்பட்டுள்ளது.

முரசீபத்தநம் சைவரம்யம் சைவ ஜடீபுரம் |
அவந்தீமங்களே பாஞ்சததா சாலக்ஷிதம் வநம் ||

(கிஷ்கிந். காண்டம், ௪௨-ம் அத்யா. ௧௨-ம் சுலோகம்)

இச்சுலோகத்துக் கண்ட நகர முதலியவைகளில், முதலிற் குறித்த முரசீபத்தனம் என்பது அம்மேல் கடற்கரையிலுள்ள முசிறி என்னும் பட்டினமே யாதல் வேண்டும் இது, முற்காலத்தே, சுள்ளி யென்ற பேர்யாறு கடலுடன் கலக்கும் இடத்து விளங்கிய பெருந்துறைமுக மாயும், சேரவரசர்க்குரிமுகிய பட்டணங்களில் ஒன்றாயும் இருந்ததென்றும், மேனாட்டு யவனரது மரக்கலங்கள் மிளகு முதலியன ஏற்றுதற்கு இதுவே அக்காலத்து ஏற்றபட்டினமானதென்றும்' மேற்றேயத்து யாத்திரைக்காரராகிய பிளினி தாலமி முதலிய யவனாசிரியர் குறிப்புக்களால் விளங்குதலோடு, "சேரலர், சுள்ளியம் பேர்யாற்று வெண்ணுரை கலங்க, யவனர் தந்த வினைமாண் கலம், பொன்னொடு வந்து கறியொடு பெயரும், வளங்கெழுமுசிறி'' என்னும் அகநானூற்று ௧௪௯-ம் பாட்டானும் தெளிவாகின்றது. சேரர்க்குரிய இப்பட்டினத்தை பழங்காலத்துப் பாண்டிய னொருவன் வளைந்துகொண்டு பெரும்போர் புரிந்து, இதன் கணிருந்த சேரரதுபடிம மொன்றைக் கவர்ந்து சென்றனன் (அகம்-௧௪௯). இத்தகையபட்டினம், மிகுந்த பழைமையும் மேல்கடற் பக்கத்ததாயும்இருந்தமையால்இதனையே வான்மீகிமுனிவர் 'முரசீபத்தனம்'' என்றனராதல்வேண்டும் முசிறி என்பதை வான்மீகி முரசீ என்று ஒருபடியாகத் திரித்துவழங்க, பின்னையோராகிய வராகமிகிரர் பிரகத்சம்ஹிதையில், இதனை மரீசிபத்தனம் என வழங்கினர். மரீசி-மிளகு; மிளகின் வள மிகுதியைக் கொண்டிருந்தமையால் அப்பட்டினம் அவ்வாறு பெயர் பெற்றிருக்கலாமென்பது வராகமிகிரர் கருத்துப்போலும்.

இனி வான்மீகியார் வாக்கில் சோணாட்டு விசேடங் குறிக்கப்பட்டதுண்டோ எனின், அதுவும்உண்டு. அம்முனிவர் சோணாட்டின் தலை நகரைச் சுட்டாமற் போயினும், அத்தலைமை நகரமாகிய காவிரிப் பூம்பட்டினத்தின் பக்கத்துள்ள ஒரு தல விசேடத்தைக் கூறுதல் மிகவும் கவனிக்கத்தக்கது. ஸ்ரீராமபிரான் விட்ட பாணத்தால், கரன் பூமியில் மாண்டு விழுந்ததைக் கூறும்போது வால்மீகியார் அடியில் வருமாறு கூறுகிறார்.

ஸபபாதகரோ பூமௌ தஹ்யமா நஸ்ஸராக்நிநா |
ருத்ரேணேவ விநிர் தக்த: ஸ்வேதாரண்யே யதாந்தக: ||

இதன் பொருள்:—சுவேதாரண்யத்தில் உருத்திரனால் தகிக்கப்பட்டு அந்தகன் மாய்ந்ததுபோல, கரன் ஸ்ரீராமபிரானுடைய சராக்கினியால் தகிக்கப்பட்டுப் பூமியில் விழுந்தான்—என்பது. இவ்விடத்திற்கு உரையிட்ட தீர்த்தர் என்னும் ஆசிரியர் "சுவேதாரணிய மென்பது காவேரிநதி கடலுடன்கலக்கும் இடத்துள்ளது" என்றார். அஃதாவது இப்போதுள்ள திருவெண்காடு என்னும் சிவ ஸ்தலமேயாம். காவேரிக்கரையிலுள்ள சுவேதாரண்யத்தில் அந்தகாசுரன் என்பவனைச் சிவபிரான் எரித்தது புராணப் பிரசித்த மென்பர் திலகர். மற்றும் இவ்வுரைகாரரே, சுவேதாரண்யத்தில் சிவபிரான் மார்க்கண்டேயர் உயிர்காத்தற் பொருட்டுயமனைக் கொன்ற சரிதம் நிகழ்ந்ததாக அத்தல மான்மியத் துண்மையால், வால்மீகி அதனைக் குறித்தனராகக் கொள்ளுதலும் அமையுமென்றனர். யமனை யுதைத்த சரிதம் திருவெண்காட்டுக்கடுத்த திருக்கடவூரில் நிகழ்ந்ததென்பது பிரசித்தமாயினும் அவ்விருதலமும் சுவேதாரணியம் என்ற ஒரே பிரதேசத்தைச் சார்ந்தனவாகச் சொல்லப்படுதலால், சரித்திரவொற்றுமை பெற்றன வென்றே கொள்ளத்தக்கது. திருக்கடவூர் போலவே, திருவெண்காட்டிலும் யமனை யுதைத்த கதை நிகழ்ந்த தென்பதற்கு, சம்பந்தமூர்த்திகள் தேவாரத்தில்,

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநான் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்றூதர்
ஆலமிடற் றானடியா ரென்றடர வஞ்சுவரே.

கோள்வித்தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினால்
மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்து மாணிக்காய்
ஆள்வித் தமர ருலக மளிப்பா னூர்போலும்
வேள்விப் புகையால் வான மிருள்கூர் வெண்காடே

என்ற பாசுரங்களில் அச்சரிதம் திருவெண்காட்டுக் குரியதாகவும் கூறப்படுதலே தக்கசான்றாகிறது. இப்போதுள்ள புராணத்தில் இச்சரித்திரம் காணாமற் போயினும் பழைய புராண மிவ்வாறிருந்த தென்பதே கொள்ளத் தக்கது. இவற்றால், வான்மீகிபகவான், தமிழகத்தே சோணாட்டின் முக்கிய விசேடம் ஒன்றைக் குறிப்பிட்டுச் செல்லுதலும் காண்க

இவற்றால், தமிழ்நாட்டுத் தலைமை நகரங்கள் பலவும் வான்மீகிமுனிவரால் நன்கறியப்பட்டிருந்தன என்பது எளிதில் விளங்கத்தக்கது. நகரங்கள் மட்டுமல்ல; தமிழ்மக்களது வழக்க ஒழுக்கங்கள் சிலவும் அம்முனிவர்க்குத் தெரிந்திருந்தன வென்றே சொல்லலாம். அயோத்தியாகாண்டம், கூடம் ஸர்க்கத்தில் அம்முனிவர் பரதன் கூற்றாக அடியில் வருமாறு கூறுகிறார்.

குர்வந்தி குஸுமாபீடாந் ஸிரஸ்ஸு ஸுரபீநமீ |
மேகப்ரகாஸை: சலகைர்த்தாக்ஷிணாத்யா யதாநரா:

இதன் பொருள்:—நம் யுத்தவீரர்கள் மேகங்களைப்போன்ற கறுத்த கேடயங்களுடன் தென்னாட்டாரைப்போலத் தலைக்கணியாகப் பூக்களைச் சூடுகின்றனர் என்பது.

தமிழரசர் போர்க்குச் செல்லும்போது அதற்கென்று ஒருவகைப் பூவும் தங்குலத்திற் கென்று ஓர் அடையாளப் பூவும் ஆக இருவகைப் பூவுடைய ரென்பது பழையதமிழ் நூல்களால் அறியப்படும். அன்றியும் நிரைகவர்தல் நிரைமீட்சி முதலாக நிகழும் போர்த் தொழில்களில் ஒவ்வொன்றற்கு ஒவ்வொரு பூச்சூடிச் செல்லுதலும் மரபாய் இப்பூப் பற்றியே வெட்சி கரந்தை உழிஞை வஞ்சி என அப்போர்த்துறைகள் பெயர் பெறுதலுங் காண்க. இவ்வாறே அகப்பொருட் டுறைகளாகிய புணர்தல் பிரிதல் முதலியனவும் குறிஞ்சி பாலை என அவ்வந் நிலத்துக் கேற்ற பூப்பெயரானே வழங்கப்படும். இவற்றால் தென்னாட்டார் பூவணிவதிற் கொண்டுள்ள பெருவிருப்பம் வெளியாம் இதனையே, மஹருஷி "நம் யுத்தவீரர், தென்னாட்டாரைப் போலத் தலைக்கணியாகப் பூக்களைச் சூடுகின்றனர்" என்று கூறிச் சென்றன ரெனக் கொள்க. தென்னாட்டாரைப்போல வேறெந்நாட்டாரும் பூவை மகிழ்ந்தணிதல் இன்றும் வேறெங்கும் காணக்கிடையா தென்பதும் அறியத்தக்கது.

இன்னும், தென்னாட்டு அரக்கர் செய்கைகளில் ஆவிறந்தால் எரிக்கப் படாது புதைக்கப்படுதல் ஒன்றென்று தெரிகிறது; விராதன் என்ற அரக்கன் சாகுந் தருணத்தில் இராமலக்ஷ்மணர்களை நோக்கி 'என்னைக் குழியில் அடக்கஞ்செய்துவிட்டு க்ஷேமமாகப் போங்கள்; இறந்துவிட்ட அரக்கரை அடக்கஞ் செய்தலே பழமையான தர்மம்" என்று கேட்டுக்கொண்டதாக ஆரணிய காண்டம் 4-ம் சருக்கத்தில் வால்மீகி கூறுகின்றார். இது பழந்தமிழர் கொண்ட முறைமை யென்பது, மணிமேகலை, சக்கரவாளக் கோட்டமுரைத்தகாதை முதலியவற்றை நோக்குவோர்க்கு விளங்கும். இனி, வாதாபி இல்வலர் கதையை இராமபிரான் தம்பிக்கு எடுத்துரைக்குமிடத்தே இல்வலன் பிராமண வேடந்தரித்துத் தம்மவர்க் குரிய தல்லாத ஸமஸ்கிருத பாஷையைப் பேசிக்கொண்டு வந்ததாகக் கூறுவதால், அரக்கர்க்கு வடமொழி அந்நிய பாஷையா யிருந்தது என்பதும் விளங்கும் அன்றியும் ஆரணிய காண்டத்தில் மாரீசன் இராமனது பெருமையை இராவணனுக்கு எடுத்துரைக்கும் போது, " இராமனுக்கு நான் மிகவும் பயந்திருக்கிற படியால், ரகாரத்தில் தொடங்கும் 'ரத்னம்' 'ரதம்' என்ற பெயர்கள் கூட எனக்குப் பெரும் பயத்தை உண்டாக்குகின்றன" என்றதாக வான்மீகி கூறுகின்றார். இவ்விடத்தில் ரகாரத்துக்குச் சிறப்பாக விதிக்கப்பட்ட 'இப' ச்சாரியையிட்டு "ரேபாதீநி" எனக்கூறாது, "ரகாராதீநி" என முனிவர் கூறி யிருத்தலை தென்னாட்டானான மாரீசன் கூற்றுக் கேற்பவைத்த தமிழ் வழக்கு—என்று கூறுவாருமுண்டு. ஆனால், பிரயோகவிவேக நூலார், "ராதிப:" என்னுஞ் சூத்திரத்துள் பாடியகாரர் முதலாயினோர் ரவ்விற்குக் காரப்பிரத்யயத்தோடு இப என்னும் பிரத்யயமும் விகற்பமாய் வருமென்று வான்மீகி "ரகாராதீநி" என்றுரைத்ததனை உதாரணங்காட்டிமுடிப்பரென்க" என்றுகூறினர்(திங்கு-கக)

இனி வான்மீகரைப் பற்றிய மற்றொரு விதமான சந்தேகமும் தமிழ்மக்கட்குண்டு; அஃதாவது அம்முனிவர் பெருமான் தலைச்சங்கத்தவரில் ஒருவராக எண்ணப்பட்ட வான்மீகையார்தாமோ? என்பது. தலைச்சங்கத்தவரில் வான்மீகனாரெனப் பெயர்கொண்ட புலவரொருவருள ரென்பது, தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியலில் "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்ற சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் கூறியிருந்ததலான் அறிக. இவ்வான்மீகனார் பாட்டொன்று புறநானூற்றில் (௩௫௮) வருவது அடியில் வருமாறு:—

"பரிதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்
ஒருபக லெழுவ ரெய்தி யற்றே;
வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்
கையவி யனைத்து மாற்றா தாகலிற்,
கை விட்டனரே காதலர்; அதனால்,
விட்டோரை விடாஅள் திருவே;
விடாஅ தோரிவள் விடப்பட்டோரே".

இப்பாட்டு, வான்மீகியாரதென்பதற் கேற்பத்தவத்தின் பெருமையேமிக அழகாகச் சிறப்பிக்கின்றது இதனை நோக்கும்போது, "தபஸ்வாத்யாய நிரதம்" என்று தம்மிராமாயணத்தைத் தொடங்கிய மகருஷி வான்மீகிபகவான் தலைச்சங்கத்தை அறிந்திருந்தவர் தாமோ? என்ற ஐயமுண்டாதல் இயல்பே. இதற்கிசைய திரேதாயுகத்தில் வால்மீகி யிருந்ததாகக் கூறும் கன்னபரம்பரையும். இரண்டாமூழியிற்கபாடபுர மிருந்ததாகத் தமிழ்நூல்கள் கூறுவதும் ஒருவாறு ஒற்றுமையும் பெற்றதாயிருக்கிறது. [இரண்டாம் ஊழி-திரேதாயுகம்] அன்றியும், வால்மீகி முனிவர், தம் ஆதிநிலையில் ஆரியரின் வேறாய வேடர் கூட்டத்துடன் சேர்ந்து கொடுந்தொழில் செய்துவந்து, பின் மகருஷி யானதாகக் கூறப்படுஞ் சரித்திரம், இவர் இத்தேசத்துப் பூர்வகுடிகளுடன் சம்பந்தமுடையரா யிருந்ததைக் காட்டுமென்றும், தமிழ்மொழி அப்பூர்வகுடிகள்வழங்கிய பாஷைகளிற் சிறந்ததா யிருந்ததென்றும், வால்மீகியார் வசித்த பிரதேசத்தில் தமிழ் முற்காலத்து வழங்கியிருந்த தென்பதற்கு இப்போதும் அநேக சான்றுகளுண்டென்றும், பிறவுஞ் சில ஏதுக்கள் கூறுதலுமுண்டு. இங்ஙனம் வால்மீகியார் தமிழருடன் சம்பந்த முடையராகக் கூறப்படும் விஷயம் ஒருதலையாக இப்போது முடிவு கூறத்தக்கதன்றாயினும், அது தமிழறிஞரது ஆராய்ச்சிக் குரியதே யாம்.

குறிப்பு: வால்மீகி முனிவரது ஆசிரமம் சித்திர கூடம்; இது மத்திய இந்தியாவில் 'பண்டில்கண்ட்' பிரதேசத்தில் உள்ள தென்பார். இவ்விடங்களில் தமிழ்ப்பாஷை முன்னாளில் வழங்கியிருக்கக் கூடுமென்பதற்கேற்ப இம்மத்திய இந்தியாவிலே பெரும்பான்மையான இடங்களிலும் மத்திய மாகாணங்களிலும், அதன் வடபாற் சூடியநாகபுரிப் பிரதேசங்களிலும் அதற்கு வடக்கேயுள்ள 'ராஜமஹால்' மலைப் பக்கத்துமுள்ள அரவணரும்

(Oraons) மலையரும் (Malar) பாணியரும் (Panians) தமிழ்ச் [illegible] சரியான அச்சாக இருக்கின்றாரெனப்படுகின்றது. இவரில் மத்திய [illegible]த்தும் கூடிய நாகபுரியிலுமுள்ள பழைய திராவிட ஜனத்தொகை [illegible] ஆண்டு ஜன கணிதத்தின்படி, 592,351 என்றும், அம்மக்களது [illegible] "குறுக்கு" (Kurukh) அல்லது "அரவன்" (Oraon) என்றும், இவ்[illegible] மொழி, திராவிட பாஷைகளில் ஏனையவற்றினும் தமிழ் கன்னடங்க[illegible] மிக நெருங்கிய சம்பந்தமுடையதெனறும் தெரியவருகிறது. [illegible] கங்கை[illegible]க் கரையின் கணுவுள்ள 'ராஜ்மஹால' மலைப்பிரதேசங்களில் [illegible] தமிழ்ச் சாதியார் "மலையர்"(Malar)எனவும் அவர் பாஷை "மலாடு"(M[illegible] எனவும வழங்கப்பெறு மென்றும், இம்மக்களின் றொகை, அக்கண[illegible]டி, 60,777 என்றும் இவர் மேற்கூறிய 'அரவன்' களுடன் தொடர்புடை[illegible] யாரே யென்றும் சொல்லப்படுகின்றன (The Imperial Gazet[illegible] India New Edition: Vol I—1907—pp 296; 381—382)

மு இராகவையங்கா[illegible]

